உ

சிவமயம்.

# முகவுரை.



அநாதிமுத்த சித்துருவாயுள்ள பரசிவப் பிரபுவை அநாதிபெத்த சித்துருவாயுள்ள சீவர்கள் அவிச்சையினின்று நீங்கி யடைந்தொன்றா யாநந்தமயமாய் விளங்கும் வகையை யடைவுபடக் கூறும் நூல்கள் வேதாகமங்களாம். இவைகளே முதனூ லெனப்படும்.

இம் முதனூல்களின் கருத்தை வடமொழியில் வல்லாரல்லாதாரும் உணர்ந்து நன்னெறியைக் கைக்கொண்டொழுகி யுய்யுமாறு, வடமொழியினும் தேசபாஷையினும் வல்ல மகான்கள் வடமொழியிலே யன்றித் தேசபாஷையினும் வழிநூலும் சார்புநூலும் அருளியதோடு, தம்முடைய கருத்தை நியாயவாயிலாக ஸ்தாபிப்பதாயும் தம்முடைய கருத்திற்கு மாறுபட்டவர்களது கருத்தை நியாயவாயிலாக மறுப்பதாயுமுள்ள எதிர் நூலும் செய்தும் வைத்தனர்.

இவ்வாறுள்ள நூல்களில் பிரபுலிங்கலீலையும் ஒன்று. இதற்கு முதனூல் கன்னடபாஷையிலுள்ளது. அதனது காலமும் ஆசிரியர் பெயரும் அறிதற்கேது கிடைக்கவில்லை.

தமிழிலுள்ள பிரபுலிங்கலீலையின் காலம் ஏறக்குறைய 280 - வருஷங்களாமென்று தெரியவருகின்றது. இதனை,

"பார்கெழு சகாத்த மேழைஞ் ஞூற்றெழு பானுன் காவ, தாகிய கரநா மங்கொ ளாண்டுறு விடைஞா யிற்றிற், சீர்கெழு மல்ல மன்றன் றிருவிளை யாடற்

காதை,காமகழு மடற்றெங் கோமான் கருணைகொண் டியம்பினனே" என்று பிரபுலிங்கலீலை மான்மிய கதியிற் கூறுவதாலறிக.

இதனை யாக்கியோர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். இவர் கவிச்சக்கரவர்த்திக ளென்றெண்ணப்பட்டவர்களுள் முதன்மையாக வைக்கக்கூடியவர் களி லொருவராவர். இம்மகான் செய்தருளிய நூல்க ளொவ்வொன்றும் மிகுதியும் காப்பியத்திற் குயிரென்னும் வியஞ்சகத்தை யுடைத்தா யிருக்கும். இப்பெரியார் வீரசைவத்தில் அபேதவாதத்தை (அதாவது அத்துவித சித்தாந்தத்தை) மேற்கொண்டொழுகி அதனதுஏற்றத்தைப் பல்லாற்றானும் உலகிற்கு விளக்கிக்காட்டியவர். இத்தகைய இச்சீரியார் இப்பிரபுலிங்கலீலையில் பெரும்பான்மையும் திருக்குறளை மேற்கோளாகக்கொண்டிருக்கின்றனர். இந்நூலில் குணம் அலங்காரமென்னும் சொற்சுவையும், காமம்,நகை,கருணை,வீரம்,உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தமென்னும் பொருட்சுவையும் நிரம்பியிருக்கின்றனவென்பது இதனைச் செவ்வனே படித்துணர்ந்தா ரொவ்வொருவரும் அறிவாரென்பது வெள்ளிடைமலையாம். துக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமான மோட்சத்தை மக்க ளடைதற்கு நேர்சாதனமாயுள்ள தத்துவஞானத்தைப் பெறும் வழியை மிகுதியாகக் கூறுதல்பற்றி இது தத்துவவிசாரஞ் செய்பவர்களால் பொன்னே போற் போற்றப்படுகின்றது.

இதனைப் படிப்பதால் சிவதத்துவத்திற்குச் சத்தி தத்துவம் மேற்பட்டதன்றென்பதும், மாயையின் வரலாறும், அதனை யொழிக்கும் வகையும், சத்துவகுணத்தாலன்றி வேறுகுணத்தாலும் வேறெதனாலும் பரம்பொருளை யறிய முடியாதென்பதும், ஸ்த்ரீகளும் மோக்ஷமடைதற் கதிகாரிகளாவரென்பதும், புறப்பூசை

யினும் உட் (மனோ) பூசையே சிறந்ததென்பதும், அன்புடையார்க்கே அரனருள் வாய்க்குமென்பதும், தத்துவஞானியர் பலவகை யொழுக்கத்தை யுடையரா யிருப்பரென்பதும், சிவனடியார்களுள் ஜாதி வித்தியாசம் பாராட்டக்கூடாது என்பதும், காண்பான்காட்சி காணப்படும் பொருளென்னும் திரிபுடியுள்ள நிலை யெந்நிலையதாயினும் அந்நிலை பந்தநிலையாகுமேயன்றி முத்திநிலை யாகாதென்பதும், தன்னை யுயர்த்திக்கொள்ளுவதற்குந் தாழ்த்திக்கொள்ளுவதற்கும் தன்மனமே காரணமாமென்பதும் பிறவு முணர்ந்துகொள்ளலாம்.

இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்த இந்நூலின் பொருளை இலக்கிய வுணர்ச்சி யில்லாதாரும் எளிதினுணர்ந்துகொள்ளுமாறு வித்வான் கா. இராமசாமி நாயுடு அவர்களைக்கொண்டு தெள்ளிய செந்தமிழ் வசனநடை, எழுதுவித்து கதைத் தொடர்ச்சியின்மை பற்றித் துதிக்குப் பதவுரையும் சேர்த்து, இந்நூலாசிரியரது சரித்திரத்துடன் இந்நூல் அச்சிடப்பட்டது.

## பிரபுலிங்கலீலை.

பிரபு எனல்—யாவர்க்கு மேலாயிருக்குந்தன்மை, லிங்கமெனல்—சிவம், லீலையெனல்—பற்றின்றிச் செய்யும் விளையாட்டு; எனவே யாவர்க்கும் மேலாயிருக்கும் சிவத்தினது திருவிளையாட்டை யுணர்த்தும் நூலெனப் பொருள்பட்டு, ஆறும் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய் இந்நூற்குக் காரணக் குறியாயிற்றென்க.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பிரபுலிங்கலீலை வசன

# கதியின் அட்டவணை



துறைமங்கலம்

# சிவப்பிரகாசசுவாமிகள்

# சரித்திரம்.



தொண்டை நாட்டிலே சப்தபுரிகளுள் ஒன்றாய் விளங்குகின்ற காஞ்சீபுரியிலே (௩௦௦-வருஷ) த்துக்கு முன் தொண்டைமண்டலத்தார் மரபினுள்ளோருக்குக் குருவாகவிருந்த குமாரசுவாமி பண்டார மென்பவர் திருக் கார்த்திகைக்கு திருவண்ணாமலை யாத்திரை போகும்போது, வழியில் ஒரு நந்தவனத்திற் பகலிறங்கிச் சிவபூசைசெய்து அன்று சாயங்காலம் அந்தத் தலம்போய்ச் சேர்ந்து ஈசானிய தீர்த்தத்தில் அநுஷ்டானஞ் செய்துகொண்டு பூசைப்பெட்டக மெங்கே யென்று தம்முடைய பரிசாரகரைக் கேட்க, அதற்கவர்கள் பகலிறங்கியிருந்த விடத்திற்றானே வைத்து மறந்துவந்ததாக விண்ணப்பஞ்செய்ய, அப்பொழுது அவர் மிகவும் வியாகுலமுற்றவராய், அந்தப் பரிசாரகரோடு உள்ளூர் மனிதனொருவனைக் கூட்டிப் பகலிறங்கியிருந்த இடம்வரைக்கும் போய்ச் சோதனைசெய்து வரும்படி சொல்லியனுப்பிப் பின்பு தாமும் தமது மனைவியும் ஓரிடத்திற் றங்கியிருந்து நம்முடைய ஆத்மார்த்தமாகிய உடையவரைப் பிரியும்படி நேரிட்டதே யென்று சஞ்சலப்பட்டுக்கொண்டு அன்றிராமுழுதும் துயிலின்றிச் சிவத்தியானம் பண்ணிக்கொண் டிருக்கும்போது, இவரது புண்ணிய முதிர்ச்சியினாலே அண்ணாமலையார் ஒரு சங்கமராகத் திருவுருக்கொண்டு இவரிடத்திற்கு எழுந்தருளி, நீர் மனோதுக்க மடைய வேண்டிய தென்னவென்று கேட்க, இவர் தமக்கு நேரிட்டிருக்கும் அபத்தை விண்ணப்பஞ்செய்ய, அதற்

குச் சுவாமியானவர், நீர் அங்கம் வேறு இலிங்கம் வேறாக விருத்தலால் பிரியலாயிற்று. லிங்காங்க சம்பந்தியா யிருந்தால் இப்படிக்கு நேரிடமாட்டாதே யென்று வீரசைவ சமயாசார நெறிகளைக் கிரமப்படி போதித்து உமது பூசைப்பெட்டகம் உதயத்தில் வந்து சேரும், ஆகிலும் நீர் இதுமுதல் லிங்கதாரணஞ் செய்துகொள்ளு மென்று அநுக்கிரகிக்க, அதற்கிவர் எனது சிஷர் பந்துக்கள் முதலானவர்களுக்கு இச் செய்கை விரோதமாக இருக்குமென்று விண்ணப்பஞ் செய்ய, அதுகேட்டுச் சுவாமியானவர் இந்தச் சிஷர் முதலியோரால் உமக்கு யாதொரு பயனுமில்லை. ஆதலால், நாமுரைத்தபடியே சிவலிங்கதாரணஞ் செய்து கொண்டால் உம்மிடத்தில் மூன்று புத்திரரும் ஒரு புத்திரியும் அவதரிப்பார்கள். அவர்களால் இகபர சாதகமுண்டென்று அருளிச்செய்ய, அதற் கிவருடன் பட்டனர். அப்போது சுவாமியானவர் இந்த ஆலயத்திற்குத் தெற்கு வீதியிலிருக்கும் குருதேவரிடத்திற் குச்சென்று தாரணதீக்ஷை செய்துகொள்ளுமென்று அநுக்கிரகித்து இதைக் குருதேவருக்குந் தெரிவித்து அந்தர்த்தானமானார்.

பின்புவிடியற்காலத்திற் பூசைப்பெட்டகம் வந்து சேர்ந்தது. அப்பொழுது குருதேவர் உத்தரவின்படி அவரது அடியார்கள் இவரைத் தேடிவந்தழைக்க அவர்களுடனே மடம்போய்ச் சேர்ந்து குருதேவரைத் தரிசித்து அவராலே தாரணதீக்ஷை அநுக்கிரகிக்கப் பெற்றுத் திருக்கார்த்திகைத் திருவிழா நிறைவேறிய பின்பு கச்சிப்பதிக்கு வந்து சேர்ந்து தமது அநுஷ்டானத்தின்படியே சிஷருக்கும் தாரணதீக்ஷை செய்து கொண்டிருக்குங் காலத்தில், முன்பு அண்ணாமலையார் அநுக்கிரகித்தபடியே மூன்று புத்திரர்களும் ஒரு புத்திரியும் அவதரித்தார்கள். அவர்களுக்கு முறையே சிவப்பிரகாச மென்றும், வேலாயுதமென்றும், கரு

ணைப்பிரகாசமென்றும், ஞானம்பையென்றும் நாமகரணஞ் செய்து உரியபருவத்தில் வித்தியாரம்பஞ் செய்வித்து வளர்த்துவருங்காலத்தில், தந்தையாகிய குமாரசுவாமியையர் சிவலிங்கயிக்கியமானார். பின்பு ஜேஷ்டராகிய சிவப்பிரகாச சுவாமிகள் தமது தாயாரையும் சகோதரர்களையும் அழைத்துக்கொண்டு அருணாசலம் போய்ச் சேர்ந்து குருதேவரைத் தரிசித்து அவ்விடத்திற் சிலகாலம் வாசஞ்செய்யும் நாள்களுள், ஒருநாள் அந்தச் சோணசைலத்தை வலம் வரும்போது சோணசைலமாலையென்று நூறுசெய்யுள் தோத்திரஞ் செய்தருளினார்.

இன்னும் இலக்கணப் பயிற்சிக்காகத் தக்ஷிணம் போகவெண்ணித் தனது சகோதரர்களுடனே புறப்பட்டு வாலிகண்டபுரத்துக்குத் தெற்கே ஐந்துகடிகை தூரத்தில் துறைமங்கல மென்னும் கிராமத்துக்கு வடது பக்கத்திலிருக்கும் ஓர் நந்தவனத்தி லிறங்கிச் சிவபூசை செய்துகொண்டிருந்த செய்தியை அந்தக் கிராமாதிபராகியும், லிங்கதாரண முடையவராகியும், சங்கமத்தினிடத்தில் மிகுந்த அன்புள்ளவராகியு மிருந்த அண்ணாமலைரெட்டியார் கேள்வியுற்று, அந்த நந்தவனத்துக்கு வந்து அவரைத் தரிசித்த மாத்திரத்திலே அவருக்குப் பணிவிடைசெய்து அநுக்கிரகம் பெறவேண்டுமென்றெண்ணிச் சுவாமிகளை நோக்கி, இவ்விடத்திற் சிலகாலம் வாசஞ்செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து, சுவாமிகளது அநுமதி பெற்றுத் தங்கள் குருவாகிய சென்னபசவையர் மடத்துக்கு அடுத்த மேல்புறத்தில் ஒரு திருமடங் கட்டிக்கொடுத்துத் தாமும் அவருக்குப் பக்தி செய்து கொண்டு வந்தார்.

சுவாமிகளும் அங்கே இரண்டு வருஷகாலம் வரையில் அண்ணாமலை ரெட்டியாருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக் கொண்டிருந்து, தாம் கொண்ட

கருத்தை நிறைவேற்றவேண்டித் தக்ஷிணம் போய்வர வேண்டுமென்று ரெட்டியாரிடத்திற் சொல்லிக் கொண்டு திருநெல்வேலிக் கெழுந்தருளியபோது, அதன் கீழ்புறத்தில் தாம்ரபர்ணி நதியின்கரையிலிருக்கின்ற சிந்துபூந்துறையில் தருமபுரத் தாதீனத்தைச் சார்ந்த வெள்ளியம்பலவாணத்தம்பிரானென்பவர் இலக்கணத் தில் மிகுந்த வல்லவராயிருக்கின்றா ரென்பதைக்கேள் வியுற்று அவ்விடத்திற்சென்று அவரைக்கண்ட மாத் திரத்தில் அவர் சிவப்பிரகாச சுவாமிகளைப் பார்த்து நீங்கள் நம்மிடத்திற்கு வந்தகாரியம் என்னென்று வினவ, அதற்குச் சுவாமிகள் இலக்கணங்கற்கவேண்டி வந்தோமென்று சொல்ல, அப்போது தம்பிரான் இவ ரது இலக்கியப்பயிற்சியை அறிதற்பொருட்டு (கு)என் றெடுத்து [ஊருடையானென்று] இடையில் வைத்துக் குவ்விறுதியாக ஒரு வெண்பா முடித்துக் காட்டுக வென்று கேட்க, அதற்குச் சுவாமிகள் அருளிச்செய்த

வெண்பா.

குடக்கோடு வானெயிறு கொண்டார்க்குக் கேழன்
முடக்கோடு முன்ன மணிவார்க்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்
ளூருடையா னென்னு முலகு.

என்று அருளிய வெண்பாவில் வடக்கோடுதேரு டையானென்றதற்குத் தம்பிரான் மிகவும் வியந்து சிவ ப்பிரகாச சுவாமிகளைத் தழுவிக்கொண்டு தமது ஆச னத்திற் சமமாக விருக்கச்செய்து அவருடைய சகோ தரர்களுக்கு ஐந்திலக்கணங்களையும் ஒரு பக்ஷத்துக் குள்ளே பாடஞ்சொல்லி நிறைவேற்றிய பின்பு சுவாமி கள் தங்களுக்குஅண்ணாமலைரெட்டியார் கொடுத்த முந் நூறு பொன்னையும் குருதக்ஷிணையாக வைப்பித்து உப சாரஞ் சொல்ல, அதற்குத் தம்பிரான் நமக்கிது வேண் டாம்; திருச்செந்தூரில் ஒரு தமிழ்ப்புலவர் நம்மைத் தூஷித்துக்கொண்டிருக்கிறார்; அவரைக் கல்வியினால்

வென்று நம்மிடத்தில் வந்து வணங்கும்படி செய்விக்க வேண்டுமென்று சொல்ல, சுவாமிகள் அதற்கிசைந்து தம்பிரானால் அனுப்பப்பட்ட மாணாக்கரோடு தாமும் திருச்செந்தூருக்குப்போய் முருகக்கடவுளைத் தரிசனஞ் செய்துபிரதக்ஷிணம்வரும்போது, அந்தத்தமிழ்ப்புலவர் சுவாமிகளோடு கூடவந்த மாணாக்கரைக்கண்டு இவர் யாரென்றுகேட்க, அதற்கவர்கள் தம்பிரானிடத்திற் பாடங்கேட்டவரென்று சொன்னபோது, அந்தப் புலவர் தம்பிரானைத் தூஷிக்க, ஒருவருக்கொருவர் கலகம் நேரிட்டு, அப்போது புலவர் சிவப்பிரகாச சுவாமிகளோடு நூதனமாகப்பாடி வெற்றிகொள்வோமென்று நினைத்து, நிரோட்டகயமகமாகப் பாடுகிறதென்றும் அப்படிப் பாடுகையில் நம்மிருவருள் தோல்வியடைகிற வர் பாடி முடித்தவருக்கு அடிமையாகிறதென்றும் பேசிக்கொண்டு இருவரும் பாடத் தொடங்கினார்கள். அப்போது சிவப்பிரகாச சுவாமிகள் திருச்செந்தி னிரோட்டகயமக வந்தாதியென (௩௦) கலித்துறை தோத்திரஞ் செய்துடனே முடித்தார். அப்புலவருக் கொருபாடலும் நிரம்பாமையால் தோல்வி யடைந்து, சுவாமிகளை வணங்கி அடிமையாயினே னென்று சொல்ல, அப்புலவரையுங் கூட அழைத்துக்கொண்டு தம்பிரானிடத்திற்கு வந்து அடிமையாகச் செய்வித்த தால் தம்பிரான் திருவுளமகிழ்ந்து சுவாமிகளைப்பார்த் து, தேவரீர் சிதம்பரத்தில் சிலகாலம் வாசஞ்செய்ய வேண்டுமென்று கேட்க, அதற்கு உடன்பட்ட சிவப் பிரகாச சுவாமிகள் அவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு அவ்விடத்திலுள்ள சிவஸ்தலங்கடோறுஞ் சென்று தரிசனஞ்செய்தபின்பு, துறைமங்கலம் வந்து சேர்ந்து அண்ணாமலைரெட்டியாருக்கு முன்போலவே அநுக்கிரகித்துக்கொண் டிருக்கும்போது, தமதன்ப ராகிய அண்ணாமலை ரெட்டியார் பொருட்டு அவரது சம்பத்தக் கிராமமாகிய வாலிகண்டபுரத்துக்கு வாயு மூலையிலிருக்கும் வெங்கைமா நகரத்தில் வந்தெழுந்

தருளிய பழமலைநாதர்மீது தோத்திரமாக வெங்கைக் கோவை, வெங்கைக் கலம்பகம், வெங்கையுலா, வெங் கையலங்காரம் என்னும் நான்கு பிரபந்தமுஞ் செய்த ருளிய பின்னர், அண்ணாமலை ரெட்டியாரை அழைத் துக்கொண்டு சிதம்பரத்திற்குப்போய் ஒரு திருமடங் கட்டுவித்து அதிற் சிலகாலம் வாசஞ்செய்திருந்து, பின்பு விருத்தாசலத்துக் கெழுந்தருளி பழமலைநாதர் பேரில் அந்தாதியும், பிக்ஷாடன நவமணிமாலையும், கொச்சகக்கலிப்பாவும், பெரியநாயகி யம்மைபேரில் (கக) கலித்துறையும், (க0) கழிநெடில்விருத்தமும் திருவாய்மலர்ந்தருளிச் சிலகாலம்அவ்விடத்தில் வாச ஞ்செய்யும்போது, ஒருநாள் மணிமுத்தாநதியின் கரை யிலிராநின்ற தோட்டத்தி லுதிர்ந்து கிடந்த மனோரம் மியமாகிய ஒரு மாம்பழத்தைச் சிவநைவேத்தியஞ் செய்யத் தக்கதென்று கையிலெடுத்துக் கொண்டு வருகையில், அதைக்கண்ட தோட்டக்காரன் சுவாமி கள் மனவருத்தமுறும்படி கோபித்தபோது அருளிச் செய்த

வெண்பா.

அடுத்துவருந் தொண்டனுக்கா வந்தகலைத் தாளா
லடர்த்ததுவுஞ் சத்தியமே யானா—லெடுத்ததொரு
மாங்கனிக்கா வென்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்.

பின்பு வடதிசையை நோக்கிக் காஞ்சிபுரத்தைத் தரிசிக்கவரும்போது, பேரூரவிநாசியிலிருந்து சாந்த லிங்கசுவாமிகள் மார்க்கத்தில் வர, அவரைக் கண்டு கூடவே அழைத்துக்கொண்டு பொம்மையபாளையத்து க்குச் சமீபமாக வந்தபோது, சாந்தலிங்கசுவாமிகள் சிவப்பிரகாச சுவாமிகளைப் பார்த்து, நாம் சிவஞான பாலைய சுவாமிகள் சந்நிதானத்துக்குப் போய்த் தரிச னஞ் செய்யவேண்டு மாதலால் அவர்பேரில் தோத்திர மாகச் சிலபாடல்கள்செய்யவேண்டுமென்றி விண்ணப்

பஞ் செய்ததற்கு, அடியேன் நரஸ்துதி செய்கிறதில்லை யென்று சொல்லி, அன்றிராத்திரி ஓரிடத்திற் றங்கி யிருந்தபோது, இவரது ஸ்வப்னத்தில் முருகக்கடவுள் மயில்வாகன ரூடராய் எழுந்தருளி, ஒரு பாத்திரத்தில் விடுபுஷ்பங்களைவைத்து, இம்மலரை மாலையாகத் தொடுத்து நமக்கணியவேண்டுமென்று திருவாக்குச் செய்தபடியால், விடியற் காலத்திலே சிவப்பிரகாச சுவாமிகள் நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு தாம் கண்ட ஸ்வப்னத்தைச் சாந்தலிங்க சுவாமிகளுக் கறிவிக்க, அதற்கவர் தேவரீர் பாமாலை தொடுக்கக் கூடாதென்று சொல்லியபடியால் அப்பாமாலையே தொடுக்க வேண்டிக் குறிப்பித்தபடி யென்ற மாத்திரத்திலே, சிவஞான பாலைய சுவாமிகள்பேரில் தாலாட்டு, நெஞ்சுவிடுதூது, கலம்பகம் இம்மூன்று பிரபந்தமுஞ் செய்து கொண்டுபோய்ச்சன்னிதானத்திலரங்கேற்றிஞானோபதேசம் பெற்று அந்த ஞானசாரியரது கட்டளையினால் தமது தங்கையாகிய ஞானம்பையைச் சாந்தலிங்க சுவாமிகளுக்கு விவாகஞ்செய்து கொடுத்துப் பின்னர் காஞ்சீபுரம் வந்து சிலகாலம் வாசஞ்செய்து கொண்டிருக்கும்போது, மேற்சொல்லிய சுவாமிகள் பேரில் பிள்ளைத்தமிழும், திருப்பள்ளி யெழுச்சியும், அதிசயப் பத்துஞ் செய்தருளினர். மற்றொரு காலத்தில் அண்ணாமலை ரெட்டியார் சுவாமிகளை விவாகஞ் செய்து கொள்ளும்படி பிரார்த்தித்தபோது அருளிய

கோச்சகக்கலிப்பா.

சேய்கொண்டா ருங்கமலச் செம்மனுடனே யரவப்
பாய்கொண்டான் வந்துதொழும் பட்டீச் சுரத்தரனே
நோய்கொண்டா லுங்கொளலா நூறுவயதளவிருந்தும்
பேய்கொண்டாலுங்கொளலாம் பெண்கொள்ளலாகாதே.

பின்பு . கருணைப் பிரகாச சுவாமிகளை விவாகஞ் செய்துகொள்ளப் பிரார்த்தித்தபோது அவர் செய்தருளிய பாடல்

நாணியென்பதை நாரியென் றுரைத்திடு நசையால்
வேணுவானது வளைந்துபோய்ப் புகுந்தது வென்றுற்
காணலாவதோ ருருவமெய் நாரியைக் கண்டால்
பூணுவார்மயல் காளைய ரென்பதும் புதிதோ.

என்று சொல்லிய பாடலின் கருத்தைச் சுவாமிகள் அறிந்து தனது சகோதரரிருவரையும் இல்லறத்திலிருக்கச்செய்து தாம் துறவறமாக வெழுந்தருளி யிருந்து, பிரபுலிங்கலீலை, சித்தாந்த சிகாமணி, வேதாந்த சூடாமணி, சிவப்பிரகாசவிகாசம், தர்க்கபரிபாஷை, திருக்கூவப்புராணம், சதமணிமாலை,நால்வர்நான்மணிமாலை, நிரஞ்சனமாலை, கைத்தலமாலை, அபிஷேகமாலை, இஷ்டலிங்கப் பெருங்கழிநெடில், குறுங்கழிநெடில், நன்னெறி, சிவநாமமகிமை, அன்றியும் திருப்பதிகம் பெற்ற தலங்க ளொவ்வொன்றுக்கு இரண்டிரண்டு வெண்பாக்களும் செய்தருளினர். இவர் சகோதரர் வேலைய சுவாமிகள் நல்லூர்ப்புராணம், இஷ்டலிங்கக் கைத்தலமாலை, கும்பகோணஞ் சாரங்கதேவர்சரித்திரமாகிய வீரசிங்காதன புராணம், குகநமச்சிவாயமூர்த்திகள் சரித்திரமென்னும் நமச்சிவாயலீலை, கிருஷ்ண சரித்திர பாரிசாதலீலை, மயிலத்திரட்டை மணிமாலை என்னும் இப்பிரபந்தங்கள் செய்தருளினர். இவரது கனிஷ்டராகிய கருணைப்பிரகாச சுவாமிகள் இஷ்டலிங்க வகவல், திருக்காளத்திப் புராணத்தில் சீகாளத்திச்சருக்கம் வரையிலுஞ் செய்தருளி வெங்கைமாநகரத்தில் (கஅ-ஆம்) வயதில் சிவலிங்கயிக்யமாய்ச் சமாதியானார். அப்போது யாத்திரையாக வெழுந்தருளி யிருந்து வந்த சிவப்பிரகாச சுவாமிகள் செய்தருளிய

விருத்தம்.

முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டுகண்ட சுவை முதிர்ச்சியாலே, தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன் னினைக்கவிர்ந்து தடங்காளத்தி, மன்னவ

னுண் டானெனது மாதவத்தின் வலிதீர மண்ணின் மீதே, யென்னுடன்வந் தவதரித்த விளங் கருணைப் பிரகாச னென்னுங் கோவே.

அப்பொழுது வேலையசுவாமிகளருளிச்செய்த விருத்தம்.

ஆண்டதனு லெனையொவ்வாய் வித்தையினிற் றமையனினு மதிகமென்றே, பூண்டவுல கதனினுள் ளோர்புகல்வதுகேட் டிருந்துமென்ன புதுமைதானே, காண்டருகண் மணியேநல் விளங்கருணைப் பிரகாசக் காளாய்நீதான், மாண்டனையென் றறிந்திருந்து முயிர் தரித்தேன் யானுமிரு வன்னெஞ்சேனே.

பின்பு சிவப்பிரகாச சுவாமிகள் மிகவும் மகிமை யோடிருந்து காளத்திப்புராணத்தில் கண்ணப்பர் சருக் கமும் நக்கீரர் சருக்கமும் செய்தருளி (௩௨-ஆம்) வயதிலே நல்லாற்றாரில் சிவஞான பாலைய சுவாமிக ளால் விடப்பட்டிருந்த மடத்திலே சிவலிங்கயிக்ய மாய்ச் சமாதியாயினர்.

அப்போது வேலைய சுவாமிகள் அருளிச்செய்த வெண்பா.

அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
சொல்லு மருவரிடைத் தோன்றியயான்—முல்லை
யரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய்
கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்.

பின்பு காளத்திப் புராணத்தைப்பாடி நிறைவேற் றிப் பெருமத்தூர் மடத்தில் (௭௨-ஆம்) வயதில் சிவ லிங்கயிக்யமாய்ச் சமாதியாயினர்.

சிவப்பிரகாசசுவாமிகள் சரித்திரம்

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

திருச்சிற்றம்பலம்.

# பிரபுலிங்கலீலைவசனம்.

## கணபதிகாப்பு.

சுரகு லாதிபன் றூமலர் நந்தனம்
பெருக வார்கடல் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம்.

இதன்பொருள். சுரகுலாதிபன் - தேவரது குலத்துக்குத் தலைவனாகிய இந்திரனது, தூமலர் நந்தனம் - தூயமலர்களையுடைய பூங்காவானது, பெருக - ஓங்கும்படியாக, வார்கடல்பெய்த வயிற்றினோன் - நெடியகடலைப்பெய்த வயிற்றையுடையோனாகிய அகஸ்தியமுனிவனது, கரகநீரை - கமண்டலத்திலுள்ளநீரை, கவிழ்த்த-கவிழ்த்துவிட்ட, மதகரி-மதயானையினது, சரணம் - திருவடியை, நாளும் - எந்நாளும், தலைக்கு அணி ஆக்குவாம் - (யாம்) எமது தலைக்கு அணியாகச் செய்துகொள்ளுவாம் [எடுத்துக்கொள்ளப்பட்டநூல் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு] எ-று.

துதிகதிமுதல் இருபத்தைந்து கதிகளாலே இந்நூல் சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றுள் முதலிலே துதிகதி சொல்லப்பட்டது. அதனுள் பூவாயென்பது முதல் பரவைகேள்வனென்பது ஈறாகிய பத்துப்பாட்டுகளாலே கடவுண்முதலியோரைக் குறித்துத் துதிசெய்து இதற்குமேல் அவையடக்க முதலிய பிறவும் சொல்லப்படினும் தலைமைபற்றித் துதிகதியெனப்பட்டது.

# முதலாவது

# துதிகதி.

## சிவஸ்துதி.

பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன் கைகான் முடங்கு பொறியிலித, னாவா யொழுகிற் றெனவுலக மளந்த மாலு நான்முகனுங், காவா யெனநின் றேத் தெடுப்பத் தானே யுவந்தெங் கரதலத்தின், மேவா வமர்ந்த மாமணியைத் தொழுது வினைக்கு விடை கொடுப்பாம்.

இ - ள். பூவாய் - மலர்கள் பொருந்திய, நெடுங்கோட்டு உறு - நெடியமரக் கொம்பினது நுனியின் கண்ணேதங்கிய, பசுந்தேன் - பசியதேனனது, (தன்னைப் பெறத்தகுதி யுடைய வனுக்குக் கிடையாமல்) கைகான் முடங்குபொறியிலிதன் - கைகளுங் கால்களு முடங்கிய அறிவில்லாதவனது, நாவாய் - நாவினிடத்தே, ஒழுகிற்றென - (தானேவந்து) ஒழுகினல் அது போல், உலகமளந்த மாலும் - உலகத்தை யளந்த திருமாலும், நான்முகனும்-பிரமனும், காவாயென - (அடியேங்களைக்) காத் தருளாயென்று, நின்று-(தன்னைப் பெறுதற்கு உரியவழியிலே) நின்று, ஏத்தெடுப்ப - துதிசெய்யாநிற்க, (அவரிடத்துச் செல் லாமல்) தானே யுவந்து - தானே விரும்பி, எம் கரதலத்தில் - (தன்னைப்பெற முயலுதற்குச் சாதனங்க ளில்லாத) எமது உள்ளங்கையிடத்து, மேவா - பொருந்தி, அமர்ந்த - எழுந்த ருளி யிருக்கின்ற, மாமணியை - மாணிக்கத்தை, தொழுது - வணங்கி, வினைக்கு - (எம்மைப் பிறவியில் அழுத்தி வருத்து கின்ற) கருமத்துக்கு, விடை கொடுப்பாம் - செலவு கொடுப் போம், எ - று.

## தேவிஸ்துதி.

ஆதி பகவன் றனதூட றணிப்பான் பணிய வவ் விறைவன், பாத மிறைஞ்சு மதற்குநெற்றிப் பகையு டல்குற் பகையுமாஞ், சீத மதியு மரவும்விழுஞ் செய

தீக்கு முவகை செயாமலலே, மாது பணியு மதற்குமன மகிழு முமையை வணங்குவாம்.

இ - ள். ஆதிபகவன் - கடவுள், தனது - தன்னிடத்து ண்டாகிய, உடல் - பிணக்கை, தணிப்பான் - தணித்தற்பொருட்டு, பணிய - வணங்க, அவ்விறைவன் - அந்தத் தலைவன், பாதம் - தன்பாதங்களை, இறைஞ்சுமதற்கும் - வணங்குகின்ற செயலுக்காகவும், நெற்றிப்பகையும் - தனது நெற்றியினாலே பகைக்கப்பட்டதும், அல்குல் பகையும் - அல்குலினால் பகைக்கப்பட்டதும், ஆம் - ஆகிய, சீதமதியும் - குளிர்ச்சிபொருந்திய பிறையும், அரவும் - பாம்பும், விழுஞ்செயற்கும் - வணங்குகின்ற செயலுக்காகவும், உவகை செயாமல் - மகிழ்ச்சி செய்யாமல், அலைமாது - தன்மாற்றாளாகிய கங்காதேவி, பணியு மதற்கு - வணங்குகின்ற செயலுக்காகவே, மனமகிழும் - திருவுளமகிழ்கின்ற, உமையை வணங்குவாம் - உமாதேவியைத் தொழுவோம், எ - று.

## கணபதிஸ்துதி.

மாரனெடுத்து வளைக்குமொரு கரும்பை யொடித்து மலர்சிதறி, நாரி யடுத்த வளிமாலை குலையத் துரந்து நயந்தோடி, வீர மனத்து வினைப்பாகர் குறிப்பினெழுகி விளையாடு, மீர மதிச்செஞ் சடைக்களி நல் யானை யிணைத்தா ளேத்துவாம்.

இ - ள். மாரன் - மன்மதனாலே, எடுத்து வளைக்கும் எடுத்து வளைக்கப்பட்ட, ஒரு கரும்பை ஒடித்து - ஒப்பற்ற கருப்புவில்லை ஒடித்து, மலர்-(அவ்வில்லி னெய்யப்படும்) மலரம்புகளை, சிதறி - இறைத்து, நாரியடுத்த - (அவ்வில்லுக்கு) நாணையடுத்த, அளிமாலை - வண்டுக்கூட்டம், குலைய - கலைந்துபோக, துரந்து துரத்தி, நயந்து - விரும்பி, ஓடி - விரைந்துசென்று, வீரமனத்து வினைப்பாகர் - வீரத்தன்மைபொருந்திய மனத்தையுடைய இருவினை யொப்பினராகிய பாகரது, குறிப்பினெழுகி - கருத்தின்படி சென்று, விளையாடும் - விளையாடுகின்ற, ஈரமதிச்செஞ்சடை-குளிர்ச்சி பொருந்திய பிறையைத்தாங்கிய செய்யசடையையும், களி - களிப்பையுமுடைய, நல் யானை நல்ல யானையினது, இணைத்தாள் - உபயபாதங்களையும், ஏத்துவாம் - துதிசெய்வாம், எ - று.

## சுப்பிரமணியஸ்துதி.

பாக மொருபெண் குடியிருக்கும்பரம னணியிற் பரித்தமணி, நாக நுழைவுற் றுடல்சுருண்டு கிடந்து நகுவெண் டலைப் புழையிற், போக மெல்லத் தலைநீட்டிப் பார்த்து வாங்கப் போகுமொரு, தோகை மயில் வாகனப்பெருமா னிணைத்தாட் கமலந்தொழுதிடுவாம்.

இ - ள். பாகம் - பாதியுடம்பின்கண்ணே, ஒருபெண் - பார்வதியானவள், குடியிருக்கும் - நிலைத்திருக்கப்பெற்ற, பரமன் - கடவுளாலே, அணியில் - ஆபரணம்போல், பரித்த-தாங்கப்பட்ட, மணிநாகம் - மணியையுடையபாம்பு, நகுவெண்டலைப்புழையில் - சிரிக்கின்ற வெண்டலையினது துளையில், நுழைவுற்று - நுழைந்து, உடல்சுருண்டு கிடந்து, போக - புறத்திற் போதற்பொருட்டு, மெல்ல - மெள்ள, தலை - தலையை, நீட்டிப் பார்த்து வாங்க - வெளிகாட்டி உள்வாங்காநிற்க, போகும் - (அக்கடவுளிடத்தே) செல்லுகின்ற, தோகைமயில்வாகனப் பெருமான் - கலாபத்தையுடைய மயிலாகியவாகனத்தை யுடைய முருகக்கடவுளது, துணைத்தாட்கமலம்-இரண்டுபாதங்களாகிய தாமரை மலர்களை, தொழுதிடுவாம் - வணங்குவாம், எ - று.

## அல்லமதேவஸ்துதி.

கலையை மதிக்கும் புலவர்தமைச் சித்தர் குழாத்தைக் கடவுளரை, நிலையை மதிக்கு முனிவரரைத் திசைமா முகனை நிரைவளையாச், சிலையை மிதிக்கு நெடியோனை விழுங்கி யுமிழாத் திறன்மாயைத்,தலையை மிதிக்கு மல்லமன்செங் கமல மலர்த்தா டலைக்கணிவாம்.

இ - ள். கலையை - அறுபத்துநாலுகலைகளையும்,மதிக்கும்-உணர்கின்ற, புலவர்தமை-வித்வான்களையும், சித்தர்குழாத்தை-சித்தரது கூட்டத்தையும், கடவுளரை - தேவரையும்,நிலையை-தத்துவநிலையை, மதிக்கும் - ஆராய்கின்ற, முனிவரரை - முனிவோரையும், திசைமாமுகனை - நான்முகனையும்,நிரைவளையா-பெண்வடிவமாக, சிலையை - கல்லை,மிதிக்கும்-(அடியால்) மிதித்த, நெடியோனை - நாரணனையும், விழுங்கி - உட்கொண்டு, உமிழா - (பின்) உமிழ்தல் செய்யாத, திறல் - வலிமையையுடைய, மாயை - மாயையினது, தலையை - சிரத்தை, மிதிக்

கும் - மிதித்துநிற்கின்ற, அல்லமன் - அல்லமதேவனது, செங் கமல மலர்த்தாள் - செந்தாமரை மலர்போலுந் திருவடிகளை, தலைக்கு-நமது தலையின்கண்ணே, அணிவாம்-சூடுவாம், எ-று.

## வசவஸ்துதி.

வெள்ள வேணிப் பெருந்தகைக்கி யாஞ்செய் யடிமை மெய்யாகக், கள்ள வேடம் புனைந்திருந்த கள் வ ரெல்லாங் களங்கமறு, முள்ள மோடு மெய்யடியா ராக வுள்ளத் துள்ளுமருள், வள்ள லாகும் வசவேசன் மலர்த்தா டலையால் வணங்குவாம்.

இ - ள். வெள்ளவேணி - கங்கையைத் தாங்கிய சடை யையுடைய, பெருந்தகைக்கு - கடவுளுக்கு, யாம் செய் - எம் மாலேசெய்யப்படுகின்ற, அடிமை-பொய்யடிமையானது, மெய் ஆக - மெய்யடிமை யாதற்பொருட்டு, கள்ளவேடம் - பொய்க் கோலத்தை, புனைந்திருந்த - தரித்துவந்திருந்த, கள்வர் எல் லாம் - திருட ரெல்லாம், களங்கமறும் உள்ளமோடு - மாசற்ற நெஞ்சத்தோடு, மெய்யடியாராக-மெய்யடியாராகும் வண்ணம், உள்ளத்து - தனது திருவுளத்தில், உள்ளும் - நினைத்தருளிய, அருள்வள்ளல் ஆகும் - கருணைவள்ளலாகிய, வசவேசன் - வசவேசனது, மலர்த்தாள் - தாமரை மலர்போலுந் திருவடி களை, தலையால் வணங்குவாம் - எமது சிரத்தினால் தொழு வோம், எ-று.

## சென்னவசவஸ்துதி.

பங்க வளற்று வழிமாற்றி யொரு நல்வழியைப் பகர்வார்போற், றங்கண் மதியிற் பலபிதற்றுஞ் சமய ருரைக டமைநீக்கி, யங்க நிலையிற் றிலிங்கநிலை யிற் றென்றருளும் வீரசைவ, சிங்க நிலைத்த வருட்சென்ன வசேவன் றிருத்தாள் சிரத்தணிவாம்.

இ-ள். பங்கம் அளற்றுவழி - பழுதாகிய சேற்றுவழியை, மாற்றி - ஒழித்து, ஒரு நல்வழியை - ஒரு நல்லவழியை, பகர் வார்போல் - சொல்பவர்போல், தங்கண்மதியின் - தங்களு டைய புத்திகளுக்குத் தோன்றியவாறே, பல பிதற்றும் - (தேக தேகிகளைக் குறித்துப்) பலவகைப்படப் பிதற்றுகின்ற, சமயரு ரைகள்தமை - சமயவாதிகளுடைய சொற்களை, நீக்கி - ஒழி

த்து, அங்கநிலை - அங்கத்தினது நிலை, இற்று-இத்தன்மைத்து, இலிங்கநிலை - இலிங்கத்தினது நிலை, இற்று - இத்தன்மைத்து, என்று அருளும் - என்று தெரிவித்தருளிய, வீரசைவசிங்கம் - வீரசைவத்திற் சிறந்தோனாகிய, நிலைத்த வருள் - நிலைபெற்ற அருளையுடைய, சென்னவசவன்-சென்னவசவேசனது, திருத்தாள் - அழகிய பாதங்களை, சிரத்து - (எமது) முடியின் மீது, அணிவாம் - தரிப்பாம், எ - று.

## மடிவாலமாச்சையர் துதி.

வார்க்குங் குமமென் முலைபாக னடியா ரறுவை மாசடித்துத், தீர்க்குஞ் செயல்போல் விச்சலமன் னவன்றன் சேனை செய்பிழையைத், தாக்குங் கரவாள் கொடுசின்ன பின்னமாகத் தடிந்திட்டுப், போக்குங் கருணை மடிவால மாச்சன் பொன்னங் கழல் போற்றி.

இ - ள். வார் குங்கும மெல் முலை - கச்சிறுக்கிச் செஞ் சாந்தணியப்பெற்ற மெல்லிய முலையினளாகிய உமாதேவியினது, பாகன்-கூற்றினனாகிய சிவபெருமானுடைய, அடியார்-தொண்டரது, அறுவை - ஆடைகளிலுள்ள, மாசு-அழுக்கை, அடித்து - அவற்றைக் கல்லின்மேலறைந்து, தீர்க்குஞ் செயல் போல் - போக்குகின்ற செயல்போல், விச்சலமன்னவன்றன்-விச்சலராஜனது, சேனை - சேனையிலுள்ளோர், செய் - செய்யப்பட்ட, பிழையை-குற்றத்தை, தாக்குங் கரவாள்கொடு - வெட்டுதற்குரிய கைவாளைக் கொண்டு, சின்னபின்னமாக தடிந்திட்டு - சின்னபின்னமாக வெட்டி, போக்கும் - போக்கிய, கருணை-அருளையுடைய, மடிவாலமாச்சன் - மடிவாலமாச்சையனது, பொன்னங்கழல்-பொன்போலுந் திருவடிகளை, போற்றி-துதிசெய்வாம், எ-று.

## நால்வர்ஸ்துதி.

பெண்ணிற் கரசு தானாக வென்பு பெருநீற் றறைபிரச, வண்ணக் கமல மலர்ப் பொய்கை யாகச் செங்கன் மாழையாய், நண்ணச் சிறிய நரிகண்முடங் குளைய பரியாய் நகர்புகுதப், பண்ணற் குரிய வழுது றழ்முத் தமிழ்நால் வரையும் பணிகுவாம்.

இ - ள். என்பு - எலும்பானது, பெண்ணிற் கரசாக - பெண்களுக்கு அரசியாகவும், பெருநீற்றறை - பெரிய சுண்ணவறையானது, பிரசவண்ணக்கமலமலர்ப்பொய்கையாக-தேனையும் அழகையும் உடைய தாமரை மலர்களையுடைய குளமாகவும், செங்கல்-செங்கல்லானது, மாழையாய் நண்ண - பொன்னாய்ப் பொருந்தவும், சிறிய நரிகள், முடங்குளைபரியாய் - மடங்கிய புறமயிரையுடைய குதிரைகளாய், நகர் - மதுரை நகரத்தில், புகுத-செல்லவும், பண்ணற்குரிய - செய்தற்குரிய, அமுதுறழ்-அமிர்தம்போல்கின்ற, முத்தமிழ் - இயலிசை நாடகமென்னு மூவகைப்பட்ட தமிழ்ப் பதிகங்களை அருளிச்செய்த, நால்வரையும் - சம்பந்தர் அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர் என்கிற நால்வரையும், பணிகுவாம் - வணங்குவாம், எ - று.

## அடியார்பொதுஸ்துதி.

பரவை கேள்வன் றிருத்தொண்டத் தொகையு
ளடியார் பத்தியெலா, முருவ மாகு நஞ்சோம நாதன்
றுதியு ளுறுசரண, ரரவ வணியா னடியார்கண் மற்றை
யவர்க ளனைவருந்தாம், விரவி நாளு மிருப்பவிடங்
கொடுக்கு முள்ளம் விரிந்தன்றே.

இ - ள். பரவைகேள்வன் - பரவைக்கு நாயகனாகிய சுந்தரமூர்த்திநாயனாரது, திருத்தொண்டத் தொகையுள் - திருத்தொண்டத் தொகைப்பாடலு ளிருக்கின்ற, அடியார் - தொண்டர்களும், பத்தியெலாம், உருவமாகும் - ஒரு வடிவாகக்கொண்ட, நஞ்சோமநாதன் - நமது சோமநாதா ராத்திரியினது, துதியுளுறு - துதிப்பாடலு ளிருக்கின்ற, சரணர் - தொண்டர்களும், அரவவணியான் - பாம்பை அணியாகவுடைய கடவுளது, அடியார்கள் - தொண்டர்களாயுள்ள, மற்றையவர்கள் - அவ்விரண்டிலும் அடங்காதவர்களும்ஆகிய, அனைவரும், விரவி-கலந்து, நாளும் - எந்நாளும், இருப்ப - இருத்தற்கு, உள்ளம் - எமது நெஞ்சமானது, விரிந்து, இடம்-இடத்தை, கொடுக்கும், எ - று.

## நூல் செய்தவர் பெயரும் முதலிய பொருளும்.

தண்ணிலவு புனைசடிலத் திறைபுகழ்ல் லமதே
வன் சரிதத் தீம்பால், புண்ணியரஞ் செவிவாயிற் றமி

ழ்ச்சங்கத் தான்முகந்து புகட்டினுல், எண்ணரிய புகழ்மலயத் திருந்தவனோர் வடிவெடுத்தா னென்று கூறப், பண்ணியமுத் தமிழ்க்கவிதைச் சிவப்பிரகா சப் பெரும்பேர் படைத்து ளானே.

இ - ள். தண்ணிலவு - குளிர்ச்சி பொருந்திய சந்திரனை, புனை - தரித்த, சடிலத்து - சடையையுடைய, இறை - கடவுளால், புகழ் - புகழப்படுகின்ற, அல்லம தேவன் - அல்லம தேவனது, சரிதத்தீம்பால் - சரித்திரமாகிய தித்திப்புப் பொருந்திய பாலை, புண்ணியர் - புண்ணியத்தை யுடையவரது, அஞ்செவிவாயில் - உட்செவியாகிய வாயில், தமிழ்ச் சங்கத்தால் - தமிழ்ச் செய்யுளாகிய சங்கிஞல், முகந்து - மொண்டு, புகட்டினுன் - புகவிட்டான், எண்ணரிய - எண்ணக்கூடாத, புகழ் - கீர்த்திகளையுடைய, மலயத்து - பொதியமலையின்கண்ணே எழுந்தருளியிருக்கின்ற, இருந்தவன் - பெரிய தவத்தோனுகிய அகஸ்தியமுனிவன், ஓர்வடிவெடுத்தா னென்று கூற - (இப்படி) ஒரு திருவுருவெடுத்து வந்தானென்று சொல்லும்படிக்கு, பண்ணிய - (தன்னுலே) செய்யப்பட்ட, முத்தமிழ்க்கவிதை - இயலிசைநாடகமென்னு மூவகைத் தமிழ்ப் பாடல்களையும் உடைய, சிவப்பிரகாசப் பெரும்பேர் படைத்துளான் - சிவப்பிரகாசனென்னும் பெரிய திருநாமத்தைப் படைத்திருக்கின்றவன், எ - று.

## அவையடக்கம்.

அடலுறு மல்லம னரிய சீரொடு
படுதலி னயந்துபா ராட்டும் பன்முறை
மடனிகு முலகமென் மொழியை வந்துவர்க்
கடலினு முழ்குவர் கால மொன்றினே.

இ - ள். அடலுறும் - வலிமையால் மிகுந்திருக்கின்ற, அல்லமன் - அல்லமனது, அரிய சீரொடு - அரிதாகிய புகழோடு கூடி, படுதலின் - தோன்றுதலால், மடனிகும் - அறியாமையினீங்கிய, உலகம் - உலகமானது, என் மொழியை - எனதெளிய செய்யுளையும், பன்முறை - பலகாலும், நயந்து - விரும்பி, பாராட்டும் - கொண்டாடும், காலம் - விசேடகாலத்தோடு, ஒன்றின் - பொருந்துமாயின், உவர்க்கடலினும் - உப்புக்கடலினும், வந்து, மூழ்குவர் - மனிதர் முழுகுவர், எ - று.

## படலத்தொகை.

நாற்கதி தருமிடர் கடந்து நச்சுநர்
பார்க்கதி முதலிரு பத்தைந் தாங்கதி
மேற்கதி பெறவருள் விளங்கு மல்லமன்
சீர்க்கதி யிருபதோ டைந்துஞ் செப்புவாம்.

இ - ள். நச்சுநர் - (தன்னை) விரும்பியோர், நாற்கதி - தேவகதி மனிதகதிவிலங்குகதிநரககதி எனப்படுகின்ற நான்கு கதிகளாலும், தரும் - தரப்படுகின்ற, இடர் - துன்பங்களை, கடந்து, பார்க்கதிமுதல் - பிருதிவி தத்துவ முதலிய, இருபத்தைந் தாங்கதி - இருபத்தைந்து தத்துவங்களுக்கும், மேல்-மேலாகிய, கதி - முத்தியை, பெற, அருள் விளங்கும் - கருணையால் விளங்குகின்ற, அல்லமன் - அல்லமனது, சீர் - புகழையுடைய, கதி இருபதோடைந்தும் - இருபத்தைந்து கதிகளையும், செப்புவாம் - சொல்லுவாம், எ-று.

## சம்பந்தம்.

கன்றிய வைரிகள் காதுங் காதையும்
வன்றுயர் மதனநோய் வளர்க்கு மாற்றமும்
புன்றொழி லினர்வறும் பொழுது போக்கலு
மன்றரு ளல்லம னமல லீலையே.

இ - ள். கன்றிய - வெதுப்புற்ற, வைரிகள் - பகைவராயினோர், காதும் - (தம்மெதிரிகளைக்) கொலைசெய்த, காதையும் - சரித்திரமும், வன்றுயர் மதனநோய் - வலியதுயரைச் செய்கின்ற காமநோயை, வளர்க்கும் - பெருக்குகின்ற, மாற்றமும் - சரித்திரமும், புன்றொழிலினர் - இழிதொழி லுடையோர், வறும்பொழுது - வீண்காலத்தை, போக்கலும் - போக்குதற்கு ஏதுவாகிய சரித்திரமும், அன்று - அன்றாகும், அருள் - அருளையுடைய, அல்லமன் - அல்லமனது, அமலலீலை - மாசில்லாத திருவிளையாட்டு, எ-று

## அதிகாரிகள்.

புறங்கறை யொழுகுசெம் புண்ணி லீயென
வறுங்கதை புல்லியர் கொள்வர் மாமல
ருறுங்களி வண்டினல் லமறொண் காதையைப்
பிறந்துள பயன்பெறு பெரியர் கொள்வரே.

இ - ள். புறம் - புறத்தே, ஒழுகு - ஒழுகுகின்ற, கறை - உதிரத்தையுடைய, செம்புண்ணில் - சிவப்புற்ற புண்ணில் மொய்க்கும், ஈயென - ஈக்கள்போல், வறுங்கதை - பயனில்லாத கதையை, புல்லியர் - சிறியோராயினோர், கொள்வர், மாமலர் - தாமரைமலரில் மொய்க்கும், உறுங்களி வண்டின் - மிக்க களிப்புடைய வண்டுகள்போல், அல்லமன் - அல்லமனது, ஒண் காதையை - ஒள்ளிய கதையை, பிறந்துளபயன் - மனிதராய்ப் பிறந்ததற்குப் பயனை, பெறு - பெறுதற்குரிய, பெரியர் - பெரியராயினோர், கொள்வர், எ-று.

## பிரயோசனம்.

மயலளற் றூன்றுகோன் மல்கு மன்பெனு
மியலெழுத் தெழுதுகோ லங்க லிங்கமாம்
வியனிலத் தளவுகோன் மதிவி ளக்கினை
யயர்வறத் தூண்டுகோ லமல லீலையே.

இ - ள். அமலலீலை - இவ்வமலனது லீலையானது, மயலளற்று - மயக்கமாகிய சேற்றுக்கு, ஊன்றுகோல், மல்கும்-நிரம்பிய, அன்பெனும் - குருலிங்க சங்கமபத்தி யெனப்படுகின்ற, இயலெழுத்து - இலக்கணமுடைய வெழுத்தை, எழுதுகோல், அங்கலிங்கமாம், வியனிலத்து - விரிவான நிலத்திற்கு, அளவுகோல், மதிவிளக்கினை - அறிவாகிய விளக்கை, அயர்வற - சோர்வு நீங்க, தூண்டுகோல், ஆகும், எ-று.

## விடயம்.

நன்றிகொ ளடிகளுன் குறந டந்துபோ
யென்றனி நாவினி னெழுமிச் செய்யுளான்
வென்றிகொ ளல்லமன் சீர்த்தி யென்பயன்
கன்றலி லன்பராங் கன்றை யூட்டுமால்.

இ - ள். என்றனி நாவினின்று - எனதொப்பற்ற நாவினின்றும், எழும்-தோன்றுகின்ற, இச்செய்யுள்ஆன் - இக்காப்பியமாகிய பசுவானது, நன்றிகொள் - நன்மைகொண்ட, அடிகளுன்கு - நான்கடிகளாகிய நாலுபாதங்களைக்கொண்டு, உற - மிகவும், நடந்துபோய், வென்றிகொளல்லமன் - வெற்றியைக் கொண்ட அல்லமனது, சீர்த்தி யென்பயன் - புகழாகிய மெல்லியபாலை, கன்றலில் - பதனழிதலில்லாத, அன்பராங்கன்றை - சிவபத்தர்களாகிய கன்றுகளை, ஊட்டும் - உண்பிக்கும், எ - று.

## இனி மூன்று பாட்டுகளால் உற்பத்தி சொல்லப்படுகின்றது.

பரசிவம் பிரமமென்னப் பட்டொரு திரிவு மின்றி
யுரைமன மிறந்துநின்ற வொருசிவ லிங்கந் தன்னின்
வருமுயர் சதாசி வன்றான் மற்றவன் றனைப்பொருந்து
மருமைகொண் ஞானசத்தியவர்களாற் சிவனுதிப்பன்.

இ - ள். பரசிவம், பிரமம், என்னப்பட்டு - என்று சொல்லப்பட்டு, ஒரு திரிவும் - யாதொரு விகாரமும், இன்றி - இல்லாதாகி, உரைமனம் - வாக்கையும் மனத்தையும், இறந்து - கடந்து, நின்ற - (சச்சிதாநந்த சொரூபமாய்) நின்ற, ஒரு சிவ லிங்கந்தன்னின் - ஒரு சிவலிங்கத்தினின்றும், உயர் - உயர்வாகிய, சதாசிவன், வரும் - தோன்றுவன், அவன்றனை - அவனை, அருமைகொள் - அருமைகொண்ட, ஞானசத்தி, பொருந்தும் - பொருந்துவள், அவர்களால் - அவர்களினின்றும், சிவன் உதிப்பன், எ-று.

சாற்று மச் சிவனுக் கிச்சா சத்தியவ் விருவரா
னுந், தோற்றுவ னுருத்தி ரன்றான் சொல்லிய விவற்
குச் சத்தி, மாற்றருங் கிரியை யென்பர் மற்றிவ ரிரு
வர் பாலும், போற்றுறு மரியு திப்பன் பொறியவன்
சத்தி யாமால்.

இ - ள். சாற்றும் - மேற்சொல்லப்பட்ட, அச்சிவனுக்கு, இச்சாசத்தி, (சத்தியாவாள்) அவ்விருவரானும் - அவ்விருவரானும், உருத்திரன், தோற்றுவன் - தோன்றுவன், சொல்லிய - சொல்லப்பட்ட, இவற்கு - இவ்வுருத்திரனுக்கு, மாற்றரும் - மாற்றப்படாத, கிரியை - கிரியாசத்தியை, சத்தியென்பர் - சத்தியென்பர், இவரிருவர்பாலும் - இவ்விருவரினின்றும், போற்றுறும் (உலகைக்) காக்கின்ற, அரி - நாரணன், உதிப்பன் - தோன்றுவன், பொறி - திருமகள், அவன் சத்தியாம், எ - று.

அத்திரு மாலு மாவு மளிப்பவர் துதிப்பன்
வண்டு, மொய்த்திசை முரலுஞ் செங்கேழ் முளரிவா
னவன வற்குச், சத்திவெண் கமலை யன்னோர் தரவரு
முலகத் தோற்ற, நித்தனங் குருகு கேச னினைவுமாத்
திரையி னுமால்.

இ - ள். அத்திருமாலும் - அந்த நாரணனும், மாவும் - திருமகளும், அளிப்ப - ஈன்றிட, வண்டு மொய்த்து, இசை - இசைபோல், முரலும் - ஒலிக்கப்பெற்ற, செங்கேழ் - சிவப்பு நிறத்தையுடைய, முளரிவானவன் - தாமரை மலரிலிருக்கின்ற பிரமன், வந்து, உதிப்பன்-தோன்றுவன், அவற்கு-அவனுக்கு, வெண்கமலை - நாமகள், சத்தி - சத்தியாவாள், அன்னோர் - அவ்விருவருங்கூடி, தர - படைக்க, உலகம் - உலகமும், தோற்றம் - எழுவகைத்தோற்றமும், வரும் - உண்டாகும், நித்தன் - அழிவில்லாதவனும், நங்குரு - நமது குருவுமாகிய, குகேசன் - அல்லமதேவனது, நினைவுமாத்திரையின்-நினைப்பினளவிலே, ஆம், எ - று.

## அல்லமதேவன் சிறப்பு.

ஆக்குறுஞ் செயல தொன்றே யயன்றனக் காக்கலோடு, காக்குறுஞ் செயலி ரண்டுங் கண்ணனுக்காக்கல் காத்தல், போக்குத லென்றிம் மூன்றும் புராந்தகற் களித்த வர்க்கு, நீக்கருமிறைமை நல்கி நிறுவினன் குருகு கேசன்.

இ - ள். குரு - நமது குருவாகிய, குகேசன் - அல்லமதேவன், அயன்றனக்கு - பிரமனுக்கு, ஆக்குறுஞ்செயலதொன்றே - படைக்குந் தொழி லொன்றினையே, கண்ணனுக்கு - நாரணனுக்கு, ஆக்கலோடு - படைத்தலோடு, காக்குறுஞ் செயல் - காக்குந் தொழிலுமாகிய-இரண்டும் - இரண்டையும், புராந்தகற்கு - உருத்திரனுக்கு, ஆக்கல் காத்தல் போக்குத லென்று - படைத்தலும் காத்தலும் அழித்தலுமெனப்படுகின்ற, இம்மூன்றும் - இம்மூன்றையும், அளித்து - கொடுத்து, அவர்க்கு - அம்மூவருக்கும், நீக்கரும் - மாற்றப்படாத, இறைமை - தலைமையை, நல்கி - தந்து, நிறுவினன் - வைத்தனன், எ - று.

# இரண்டாவது

# கைலாசகதி.



வெள்ளி மயமாகிய பெருமைபொருந்திய கைலா சகிரியின் சிகரத்தில்வீற்றிருந்து உயிர்களுக்கு அருள் செய்கின்ற மூன்று கண்களையுடைய சிவபெருமானு டன் சபதஞ்செய்து கொண்டு எம்பெருமாட்டியாகிய உமாதேவி யானவள் அல்லம தேவரைக் காணும் பொருட்டு வஞ்சகம் பொருந்திய மாயையைப் பூலோ கத்துக்கு அனுப்பின செய்தியைச் சொல்லுகின்ற கதியைச் சொல்லுவோம்.

சரங்களும்அசரங்களுமாகிய எல்லா வுயிர்களையும் ஆதிகாலத்தில் நாமகளோடு கூடிப்பெற்ற சதுர்முக னாகிய பிரமதேவன் விசாலமான பிருதுவி யண்டத்தி னுள்ளே வெற்றி பொருந்திய அசுரர் நாகர் தேவர் முதலியோர்க்கும் தகுதியான இடங்களை நிருமித்தான். அவற்றுள் பேரருளே திருமேனியாயுடைய சிவபெரு மான் வீற்றிருக்கிற கைலாசகிரியானது, தேவர்களும் கண்டு அதிசயிக்கும்படியான அழகோடுகூடி அந்தப் பிரமாண்டத்தினுள்ளே மிகவுஞ் சிறந்து விளங்கி ஒப் பற்றதா யிருந்தது. வண்டுகள் கொள்ளைகொண் டுண் ணும் பொருட்டு, இழிந்து பொடியில் முழுகி மூக்கி னால் கிண்ட வுடைந்து முறுக்கவிழ்ந்து தேனைச் சிந்து கிற செம்பொன்போல விளங்குகின்ற கொன்றை மலர் மாலையைச் சூடப்பெற்ற சடாபாரத்தையுடைய சிவ பெருமானது வெண்மையாகிய புகழ்கள் திரண்ட வளம்பொருந்தியஸ்ரீகைலாசகிரியின்கண்ணே வெள்ளி யானது வந்து ஆரோபமாகவே விளைந்திருக்கிறது.

மேலும் அந்தக் கைலாசகிரியானது முற்காலத் தில் கௌதமரிஷியின் குழந்தையாகிய உபமன்யு பசி

பெறாக்காமல் வேண்டி அழும்போது அக்குழந்தைக் கிரங்கி நம்மை யனுப்பி அதன் பசிதீர்த்தாற்போல இன்னமும் ஒரு குழந்தை பால் வேண்டி அழுமாயின் அதன் பசி தீர்க்கும் பொருட்டு நம்மை அனுப்புவன், அப்படியனுப்புஞ் சிவபெருமானைத் தடுப்பதற்கு நம் மீது சயனித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீ மஹாவிஷ்ணு வானவன் சக்தியற்றவனாயிருக்கிறான்; ஆதலால் நாம் அந்தச் சிவபெருமானுக்கே இடமா யிருப்போமெ ன்று எண்ணிப் பாற்கடலானது திரண்டு மலையுருவங் கொண்டு நின்றாற்போல விளங்குகின்றது.

மேலும் அந்தமலையில் ஓடுகின்ற அருவியாறுகள் அவற்றின் ஓசையினால் அறியப்படுகின்றன; விளங்கா நின்ற வெள்ளிய சந்திரனானது தன்னிடத்தில் தங்கிய களங்கத்தினால் அறியப்படுகின்றது; இந்திரனது யானை யாகிய ஐராவதமானது தான் பொழிகின்ற மதநீரால் அறியப்படுகின்றது; தாமரைமலர்மேல் வாசஞ்செய் கிற பிரமதேவனது வாகனமாகிய அன்னமானது அழ காகிய தனது நடையினால் அறியப்படுகின்றது; இவ்வா றன்றி நிறத்தினால் அறியப்படாதபடி வெண்ணிறத் தோடு அம்மலை பொலிந்து விளங்கா நின்றது.

மேலும் பிரகாசிக்கிற ஒளிததும்புகின்ற அந்த வெள்ளியங் கிரியின் சிகரத்தில், அசையாநின்ற கதிர்க ளைப்பரப்புகின்ற செம்பொன்னினாலும் தேஜோரூபமா கிய மாணிக்கங்களாலும் செய்யப்பட்ட ஒரு செய்குன் றானது விளங்குதல் எப்படியிருக்கின்றதென்றால், கள ங்கமில்லாத பரிசுத்தமான கற்பூரராசியின் மேல் விளம் பொருந்திய தீப மொன்று தங்கி விளங்குதல் போலி ருந்தது.

இப்படிப் பட்டதாகிய இந்தக்கைலாசகிரியில் சிவ பிரானது அரசாட்சி மண்டபமொன்றுண்டு. அந்த மண்டபத்தை ஆதிசேடனும் புகழ்தற்கு அசக்தனென்

றால், யான் அதனைப்புகழ்ந்திலேனென்றுள்ளென்னை இகழ்பவர் ஒருவரும் இல்லை. அப்படிப்பட்ட மண்டபத்தில் சிவ பெருமானானவன் வந்து அவ்விடத்தில் விளங்காநின்ற பதுமராக மணிகளால் செய்யப்பட்ட ஒரு மேடையின்மேல் உலகம் நிலைபெறுதற்கேதுவாகிய சூரிய பிம்பத்திலே தங்கியிருத்தல்போலத் தங்கியிருந்தானென்று யாவரும் சொல்லும்படி தங்கியிருந்தான்.

இளம்பிறையாகி உடல்வளைந்து வெளுத்ததாகிய நேத்திரோத்ஸவமாயுள்ள ஒளி பொருந்திய ஒப்பற்ற சந்திரன் சடையின்கண்ணே பொருந்தி யிருக்கவும், மணக்கிழத்தியாகி மலைபரசனது குழந்தையெனப் பெயர்பெற்ற அழகையுடைய கங்கையானவள் அந்தச்சடையின் கண்வாழாநிற்கவும், நெருப் பென்று சொல்லுதற்கிணங்க மேலே நோக்கிய ஒரு சிவந்த கண்ணானது அழகிய நெற்றியில் பொருந்தியிருக்கவும், சந்திரனென்று சொல்லப்பட்டும் சூரியனென்றுசொல்லப்பட்டும் விளங்குகின்ற அழகிய கண்கள் இரண்டும் பெருகுகின்ற அருள் வெள்ளத்திற்கு மதகுகள் போலவிளங்காநிற்கவும், தியாநிக்கிற அன்பரது இதயமென்கிற பறவைகள் அகப்பட்டுக் கொள்ளுகிற வலையைப்போல நெடிய செவிகளினிடத்துக் குழைகள் தங்கி விளங்கவும்,இடதுபக்கத்தில்அமர்ந்திருக்கிறஉமாதேவியினது அழகிய நெற்றியிலணிந்த கஸ்தூரித்திலகம் போல அழகிய கண்டத்தில் கருநிறமுள்ள நஞ்சக்கறையானது விளங்காநிற்கவும், மலையரையனால் புதல்வியாகப் பெறப்பட்ட பூங்கொடி போல்பவளாகிய உமாதேவியின் கண்களுக்கு நாணியே முகம்திரும்பினது போலத் திரும்புகின்ற மானானது மனமகிழ்ந்து இடக்கையிலும், ஒளியுள்ள வீரத்தன்மையமைந்த மழுவானது தகும் தீகும் தகும் என்று ஒலிசெய்து எரிதலால் அவ்வாறு திரும்புதல் தகும் தகும் தகும் என்று சொ

லவதுபோல வலக்கையிலும் பிரகாசியா நிற்கவும், நவ வியாகரண பண்டிதனுய் விளங்குகின்ற மாணிக்கத்தை யுடைய ஆதிசேஷனது ரூபமாகிய கங்கணமானது கையிற் பொருந்தி விளங்காநிற்கவும், ஒரு கரியபன்றி யின் கொம்பானது பதக்கம்போலத் திருமார்பில் பொருந்தி விளங்காநிற்கவும், புலியினலே தரப்பட்ட ஆடையானதுதிருவரையையடைந்து பட்டாடைபோல அழகுசெய்யா நிற்கவும், முப்புரங்களை எரித்துவென்ற சிரிப்புக்கும் மெல்லிய தாமரை மலரிலிருக்கின்ற பிரம தேவனது சிரத்தைக் கிள்ளிவென்ற சிவந்த கைக்கும், கருப்பு வில்லையுடைய மன்மதனை எரித்து வென்ற நெற்றிக்கண்ணிற்கும், இப்படி ஒரு விருது இல்லையென்று சொல்லும்படியாக யமனைக் கொன்று அதற்கு அறிகுறியாகத் தரிக்கப்பட்ட வீரக்கழலோடு திருவடி விளங்காநிற்கவும் வீற்றிருந்த முதற்பொருளாகிய சிவ பெருமானது இடதுபக்கத்தில், விண்ணுலகமும் மண்ணுலகமும் அவற்றிலுள்ள சராசர ஜீவராசிகளும் ஒருங்கே தோன்றும்படி ஈன்றும் சூலுற்று வருந்தாத அழகிய வயிற்றையுடைய லோகமாதாவாகிய உமாதேவியானவள் வீற்றிருந்தாள். எப்படியென்றால், இறைவனது அழகிய கண்களென்று சொல்லப்படுகின்ற சந்திரன் சூரியன் அக்கினி என்கிற மூன்றொளிகளும் நட்புக்கொள்ளப் பெற்ற இருளென்று சொல்லப்படுகின்ற கூந்தலின்மேல் அறவாழி யந்தணனுகிய அந்தச் சிவ பெருமானலே அலங்கரித்தருளப்பெற்ற தேனைப்பொழிகின்ற மணம் பொருந்திய மலர் மாலையானது தொங்காநிற்கவும், இடபக் கொடியையுடைய இறைவனது சடாபாரத்திலுள்ள இளம்பிறையானது இவ்விடத்திலிருக்கின்ற கங்காநதியில்வீழ்ந்து இறக்கத்துணியாநிற்க வடிவம் பொருந்திய ஒளியையுடைய திருநெற்றியில் தொங்கவிடப்பட்ட ஒரு இரத்தினச் சுட்டியானது அழகு செய்யாநிற்கவும், இறைவனதுமுகமாகிய தாமரை

மலரில் ஆசை மிகுந்த வண்டுகளாகிய கண்களுக்கு நிறைந்த அருளும், வாசனையுள்ள செவ்வல்லி மலர்போன்ற வாய்க்குச் சிறிய வெள்ளிய சிரிப்பும், ஒளிதவழ்கின்ற ஆபரணங்களாகச் சிறந்து தோன்றா நிற்கவும், அழகிய செம்பொன்னாற் செய்யப்பட்டு விளங்குகின்ற ஒளியையுடைய கர்ணபத்திரங்களின் மேல் காணப்படுகின்ற அந்தக் காதுகள் என்னும் பெயரையுடைய வள்ளைகளானவை மாட்சிமைப் படும்படி ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட கைகால் முதலிய அவயவங்கள் போல ஆபரணத்துக்கு உட்படாமையால் அந்தக் கர்ணபத்திரங்களின் ஆபரணங்கள் போல அழகு செய்யாநிற்கவும், உயர்ந்த ஐராவத மென்னும் யானையையுடைய இந்திரனும் பிரமனும் நாரணனும் தம்மாலே தாங்கப் படுகின்ற உயிர்களானவை உடல்களினின்றும் பிரியும்படி அழியவருங்காலத்திலும் களையப்படாதவலியையுடைய மங்கள சூத்திரமானது ஒளிநிறைந்த ஆபரணங்களுக்கு அரசுபோலச் சிறந்து விளங்காநிற்கவும், பாம்புகள் உலாவுகின்றசடையையுடைய சிவபெருமானைத் திருஞானசம்பந்த ரென்னும் குழந்தை மூன்றாவயதிலே தமிழ்வேதம் பாடும் படிக்கு இனிமையாகிய ஞானப்பாலைக் கொடுத்தருளின் ஒப்பில்லாத திருத்தனங்களின் கீர்த்திபோல மிக்க ஒளிபொருந்தியமுத்துமாலையானது அவற்றின்மீதுதொங்கவும், ரத்ந வளையல்களாகிய பறவாத வண்டுகள் ஒலிக்கின்ற தாமரைமலர் நீலமலரோடுகூடி அழகுபெறாநிற்கவும், பச்சைக்கிளியானது வேதாந்தப் பொருளை மறவாமல் சொல்லிக்கொண்டு முன்னங்கையில் அமர்ந்திருக்கவும், தோலாகிய ஆடையையுடைய கடவுளது பழமையாகிய மனையாளிடத்து இது வந்த தெவ்வழியாலென்று வியக்கத்தக்க பட்டாடையானது அரையிலுடுக்கப்பட்டுப் பிரகாசியாநிற்கவும், அழகிய மேகலாபரணமானது நூலிழைபோலுஞ் சிறிய இடைக்குக்

கூந்தலின் பாரத்தினாலும் தனங்களின் பாரத்தினாலும் உண்டாகின்றவருத்தத்தைச் செய்யாதிருக்கவும், புதிய அனிச்சமலர் பட்டாலும் பொறுக்கமாட்டாமையை அறிந்திருந்தும் அந்நாளிலே நடந்த பெரிய விவாக காலத்தில் சிவபெருமானால் அம்மியின்மீ தெடுத்து வைக்கப்பட்ட பாதாரவிந்தங்களில் முத்துக்களை மணிக்கற்களாகவுடைய செம்பொற்சிலம்புகள் ஒலியா நிற்கவும் வீற்றிருந்த பேரருளையுடைய உமாதேவியி னிடத்து, ஸ்தநபாரத்தால் வருந்துகின்ற நூற்பி ளவுபோன்ற சிற்றிடையை யுடையவராகிய அநேக தெய்வ மாதர்கள் வந்தார்கள். வசிட்டர் முதலாகிய சப்தரிஷிகளின் மனைவியராகிய அருந்ததி முதலியோர் உமாதேவியின் சந்நிதியிற் சென்று வணங்கி வாழ்த்தி னார்கள். தாமரைமலரில் வாழ்கின்ற ஒரு அன்னமா னது அறியாத சிவபெருமானது திருமுடியிலுள்ள கங்கையை யறிந்து அதனைக் கிட்டிவந்து சுழலாநின்ற அன்னங்களின் கூட்டம்போலத் தாமரைமலர்களில் வாழ்கின்ற நூறுகோடி யென்னுந் தொகையுள்ள இலக்குமிகள் உமாதேவிக் கெதிரேவந்து நின்று வெண்சாமரங்களை வீசினார்கள். கோடி யிந்திராணி கள் வந்து உமாதேவியின் பக்கத்தில் நின்று பாம்பி னாலே கவ்வப்பட்ட சூரியனென்று கண்டோர் சொல் லுதற்குரிய சிற்றாலவட்டங்களை யசைத்தார்கள். அநே கம் கலைமகளிர் வீணைகளைக் கையிலெடுத்து வந்து தமக்கருகே நிற்கிற தம் கணவராகிய பிரமர்களும் வீணையின் நரம்பொலியிது கண்டத்தாற் பாடுகிற வொலியிது என்று அறியப்படாமல் உமாதேவியின் புகழை யெடுத்துப் பாடினார்கள். மான் கண்களோடு ஒப்புமையமைந்தகண்களையுடைய உருத்திர கணிகையர் பலர் மனமகிழ்ந்து வெவ்வேறு சுவையினவாகிய பல வகைப்பட்ட காயங்களும் உப்பும் அளவொத்த இனிய கறியைப்போல சொல்லப்பட்ட மத்தள வொலியை

யும் இராகவொலியையும் தாளவொலியையும் மென்மையாகிய சிற்றடிகளின் நன்மைபொருந்திய அழகிய மிதிப்பையும் தழுவி நடித்தார்கள். சிவபெருமானது இடப்பாகத்தில் விற்றிருக்கிற உமாதேவியின் ராஜஸ தாமஸஸாத்விகங்களென்று சொல்லப்படுகிற முக்குணங்களும் வடிவமாகக்கொண்டு வந்த மாதர்கள் அவ்ளுடைய குற்றேவல் செய்தலில் மனமகிழ்ந்து அருகில் நின்றார்கள். அவர்களுள்ளே தமோகுணமாது உமாதேவியின் அருளால் அழகையும் மாயையென்னும் பெயரையுங்கொண்டு செருக்கடைந்து நின்றாள். உருத்திரருடைய கூட்டங்கள் தெளிவாகிய நெடிய அலைகளையுடைய கங்கையும் கங்கையும் இளஞ்சந்திரனும் இளஞ்சந்திரனும் மிகுதியாகத் துள்ளுகிற இளமையாகிய மானும் மானும் உறவுகொள்ளும்படியாக அந்தச் சபையின்கண்ணே நெருங்கின. நாரணருடைய கூட்டங்கள் சங்குகள் ஒன்றோடொன்று தாக்கவும் ஒளிமிகுந்த உயர்வாகிய சக்கரங்களும் அப்படியே ஒன்றோடொன்று தாக்கவும் அலைகளைச் சுருட்டுகின்ற கருங்கடலானது வந்தாற்போல ஆச்சரிய கரங்களாகி எமது இறைவரது பெரிய சபையினிடத்து வந்து சேர்ந்தன. எண்ணிலராகிய உலகத்தைப் படைக்குந் தொழிலையுடைய பிரமர்கள் நான்கு முகங்களிலும் நான்கு வேதங்களும் விதிப்படி ஒலியாநிற்கவும்நான்கு தலைகளிலும் உயர்ந்து எட்டுக் கைகளும் கூம்பாநிற்கவும் உமாதேவியினால் பகிர்ந்து கொள்ளப்பட்ட திருமேனியையுடைய கடவுளது சபையில்பரவிப் புகுந்தார்கள். வச்சிராயுதத்தையுடைய அளவற்ற இந்திரர்கள் பிரமனும் நாரணனும், எம்மைக் காட்டிலும் உயர்ந்தவர்களென்று சொல்வது மாத்திரமேயன்றி எம்மினும் உயர்ந்தவரல்லர்; சிவபெருமான் தங்கியிருக்கிற திருவோலக்கத்தைக் காண்பதற்கு எம்போல ஆயிரங்கண்களையுடையரல்லர்; ஆதலால் அவர்களைப்பார்க்கிலும்

நாங்களே உயர்ந்தவர்களென்று தனித்தனியே தம் மனத்தில் நினைத்துக்கொண்டு வந்தார்கள். நாகர் வித்தியாதரர் தேவர் கிம்புருஷர் சூரியன்முதலிய கிரகங்கள் அஷ்டதிக்குப் பாலகர் அரக்கர் மற்றுமுள்ள எல்லாரும் விழிபிதுங்கி உடல்நெருங்க இறைவரது திருச்சபையைத் தரிசிக்கும்பொருட்டு வந்தார்கள். கேட்டையும் பெருக்கத்தையும் வாய்ச்சொல்லினாலே பிறர்க்கு உண்டாக்குகின்ற வல்லமைபெற்றவரும் மனோ வாக்குக்காயங்களால் முயன்று நல்லறவழியில் நிற்பவரும் முக்காலங்களையு முணர்ந்தவரும் பாசபந்தங்கள் நீங்கப்பெற்றவருமாகிய வசிட்டர்முதலிய பெரிய முனிவரர்வந்து பரவினார்கள்.

இந்தப் பூதங்களுடைய குழந்தைகள் முலைப்பால் குடிப்பது கடலைக் குடிப்பதை நிகர்க்கும்; சோறுண்ணப்பழகுவது பூமியையெடுத்து விழுங்குவதை நிகர்க்கும்; இந்தக் குழந்தைகளின் விளையாட்டுத் தொழில் படைப்புத் தொழில் முழுதையும் நிகர்க்கும் என்று புகழப்படுகிற வல்லமையைக்கொண்ட பூதகணங்கள் அளவற்றனவாய் வந்து நிறைந்தன. செருக்கினால் கடவுளை நிந்தித்த வாய்க்கு விசாரிக்குமிடத்தில் பிராயச்சித்த மில்லையென்று முற்காலத்தில் சிவநிந்தை செய்த தக்கனது தலையைவெட்டி நெருப்புக்கு இரையாகக்கொடுத்து நிந்தைசெய்யாத ஆட்டின் தலையைப் பொருத்திக்களித்து நின்ற வீரபத்திரன் வந்து ஒரு பக்கத்திற் சேர்ந்தான். ஆயிரம் நாரணரைக் கொன்று மாங்கனிபோற் பிழிந்து கோதுகளை யெறிந்துவிட்டாலும் கடலைக் கவிழ்த்தாற்போலப் பெருகுகின்ற செவந்த உதிரத்தினால் பாதியளவாயினும் நிறையாத பிரமகபாலத்தைக் கையிலே யுடையவனாகிச் சிவபிரானது சபையினிடத்து வைரவன் வந்து சேர்ந்தான். போர் செய்ய விரும்புகின்ற வீரகாளியும், மாதருக்கு வீர

யில்லையென்று சொல்வதற்குக் காரணம்யாது? வீரத் தன்மையுள்ள மாதென்று நன்றாக அறியீர்களோ? என்று சொல்லிக்கொண்டே வீரயோகினி கூட்டத் தோடும் வந்து சிவபிரானது சபையினிடத்துப் புகுந் தாள். சூரியனானவன் இருளைக்கெடுப்பதுபோல மாயை யைக்கெடுத்த பிருங்கி முனிவன் நல்வழியில் ஊன்றப் பட்ட ஞானத்துடனே வைராக்கியத்தையும் பரிசுத்த மான நல்லொழுக்கத்தையும் தனக்கு மூன்று கால்க ளாகக்கொண்டு சிவபிரானது திருமுகத்தில் புன்சிரிப் புண்டாகும்படி நின்று கூத்தாடினன். பூமியைச் சுமக் கின்ற பெரிய தலைகளையுடைய ஆதிசேஷனாகிய கங்க ணத்தையுடைய சிவபெருமானது திருவடிகளிலே படுகின்ற ஒளிபொருந்திய கிரீடங்களெல்லாம் படப் பெறுகின்ற திருவடிகளையுடைய எம்மிறைவனாகிய நந்திப்பிரான் தாங்குகின்ற கைகளிலே அடிகள் பட அடித்து அந்தச் சபையிலுள்ளாரை இருபுறத்திலும் விலக்கி மணமுள்ள பூமாலையைத் தரித்த பிரப்பங் கோலோடு களித்துத் திரிந்தனன். அழகிய வாணாசுர னும் பானுகம்பனும் பெய்யப்படுகிற பெரிய மழையை யுடைய மேகம்போலப் பெருங்குரலையுடைய முழவ வாத்தியங்களையும் களங்கமில்லாத பூர்ண சந்திரன் போன்ற வெண்மையாகிய சங்குகளையும் யாவரும் கை களாலே தம் செவிகளை மூடிக்கொள்ளும்படி கைகளா லும் வாய்களாலும் ஒத்து முழக்கினார்கள். அந்தச் சபையில் நெருங்கி யிருப்பவர்களில் சிலர் துதிப்பார் கள், சிலர் ஆடுவார்கள், சிலர் பாடுவார்கள், சிலர்குதிப் பார்கள், சிலர் கைகளால் தோள்களைத் தட்டி ஆரவா ரிப்பார்கள், சிலர் மனமுருகிச் சரீரம் நடுங்குவார்கள். இப்படி நிறைந்த பெரிய சபையின்கண்ணே நானாவித மான ஆயுதங்களின் ஒளியும் தேவர்களுடைய சரீர காந்தியும் அவர்களால் தரிக்கப்பட்ட பொன்னரிமாலை களின் பிரகாசமும் தெய்வ மகளிரது ஆபரண சோபை

யும் ஆகிய இவையெல்லாம் இருளான்து சிவபெருமா னது கண்டத்தில் அடைக்கலம் புகும்படி வியாபித் தன. இப்படிப்பட்ட சிறப்புடன் இச்சபையின் நடுவே யிருந்த சிவபெருமானை வினவப்படுவ தொருகாரி யத்தை நினைத்து, சர்க்கரையும் அமிர்தமும் கசக்கும் படி இனிமையான சொற்களையுடைய எமது தாயாகிய உமாதேவியானவள் தன் வாய் திறந்து பேசத்தொடங் கினாள். எப்படியென்றால், தலைவனே! இந்தச் சபையி னிடத்தில் வந்திருக்கிற பெரிய சம்பத்துள்ள யாவரும் வெவ்விய பிறவியிற் பொருந்தி அலையாதவராய் முத் தியை யடைவார்களோ? அல்லது நிலையற்றவராய் பிற வியில் அகப்பட்டு அலைவார்களோ? இதனை எனக்குச் சொல்லுவாயாக வென்றாள். அதுகேட்ட சிவபெரு மானானவன் உமாதேவியாரை நோக்கி, விளங்காநின்ற ஆபரணங்களை யுடையவளே! உன் வினவானது நன் றாய் இருந்தது என்று சொல்லி அவ்வினவுக்கு உத்தர மாக, பூமியை அடியளந்தவனாகிய நாரணனும் பிர மன் முதலாயினோரும் தமது மனத்திலே கொள்ளப் பட்ட நாமரூபங்களோடு பொருந்தும்படி தம்மைப் பிணித்துள்ள இருவினைகளால் பேரின்பமாகிய முத் தியையடையமாட்டார்கள் என்றுசொன்னான். அதைக் கேட்ட உமாதேவியானவள் இறைவனை நோக்கி, அப் படியானால் நாமரூபாதிகளை வெல்லும்படியான உபாய மொன்றை நீயெனக்குச் சொல்லக்கடவை யென்று கேட்க, அதற்குத்தரமாக அரும்பவிழ்ந்த கொன்றை மலர் மாலையைத்தரித்த சடையையுடைய சிவபிரான் இதனைச் சொல்வானாயினன். எப்படியென்றால், ஐக் கியமாகிற பேரின்பப் பேற்றைச் சொல்லுமிடத்து, கருமபூமியின் கண்ணே மக்களுடம்பெடுத்தா லன்றிப் போகவுடம்பைக் கொண்டு அடைதல்கூடாது. ஆத லால் பூமியிலே பிறந்து யோகமார்க்கத்தில் நின்றவர் தத்துவ ஞானத்தைப்பெற்று முத்தியை யடைவார்

கள் என்று இந்த வாக்கியத்தைத் தன் கணவனுன சிவபெருமான் சொல்ல, இளமைபொருந்திய பூங் கொடி போல்வாளாகிய உமாதேவியானவள் இறைவனை நோக்கி, அப்படியானுல் பூமியின்கண் ஒவ்வொரு மனிதரும் ஒப்பற்ற ஞானசித்தியை நன்ருய் அடையும்படி போதிக்கவல்ல ஆசாரியன் யாவன்? நீ சொல்லக் கடவையென்று வணங்கிநிற்க, மேருமலையை வில்லாக வளைத்த இறைவன் சொல்லத்தொடங்கினுன்.

பூர்வகாலத்திலே உயர்ந்த சுஞ்ஞானி நிராங்காரன் என்று சொல்லப்படுகின்ற தாய் தந்தைகள் அளவில்லாத தவங்களைச் செய்தலால் எமது தத்துவ சொரூபத்தினுல் அவர்களுக்குப் புதல்வனுயினேம். அவன்பேர் அல்லமன் என்று சொல்லுவார்கள். அப்படிப்பட்ட பிரபாவமுள்ள அல்லமனை நீ காண்பது மிகவும் அருமையாமென்று சொன்னுன். சொல்லுதலும் உமாதேவியானவள் இறைவனை நோக்கி, எல்லாவற்றிற்குங் காரணமாய் நிற்கிற எனக்கு அரிதென்று சொல்லுதற்குக் காரணம்யாது? உன் கூறுகிய ஒப்பற்ற அல்லமனது உண்மையை அறியவிரும்பினுல் எனக்கேயன்றி இந்தச்சபையில் இருக்கிற யாவருக்கும் அந்த அல்லமனைக் காண்பது எளிதாமென்று மனங்கலங்கிக் கூறுதலும், பகைவரது முப்புரங்களை யெரித்த அழகிய சிரிப்பை யுடையவனுகிய சிவபிரான் தேவியாரை நோக்கிச் சொல்லலாயினன். மாதே! கோபங் கொள்ளவேண்டாம்; வீணுன உன் சொல்லளவிலே நிற்பவனல்லன்; வினைகளை யொழித்துநின்ற அன்பராலே அன்போடு விரும்பப்பட்ட வடிவத்தை யுடையவனுய் அவரதுகண்முன் காணப்பட்டு அருள்செய்வன்; அந்த அல்லமதேவனது இயல்பு யாவராலும் சொல்லுதற்கு அரிதாகும் என்று சொன்னுன். அதுகேட்ட உமாதேவியார் மேலும் அவ்வல்லமனைப் பார்க்கிலும் வேருயுள்ளவாகரு என்னலே செய்யப்படுகிற மாயை

யானது பொய்யாலே நிறைந்த செயலில் நின்றும் அவ னிடத்தே தப்பிப்போமாகில் இச்சொல் மெய்ம்மை யாகும், காண்பேனென்று செருக்கோடு சொல்லிய அளவில், அச்சொல்லைக்கேட்ட இறைவன் தேவியாரை நோக்கி உன் வல்லமையைப் பார்ப்போமென்று அடி யில் வருஞ்சொற்களைச் சொல்லுவானாயினன். பொன் போல் விளங்குகின்ற தேமல்படரப் பெற்ற நெருங்கிய தனங்களையுடையமாதே, இவ்வண்ணமாகப்பிரதிக்கினை சொல்லி இனி இதுமுதலாக சும்மா இருப்பாயானால தோல்வியுன்னிடத்துண்டாகுமென்று சொல்லிய அள விலே, பார்வதி தேவியானவள் இறைவனை நோக்கி, என் சொல்லானது ஒரு பொழுதும் தவறாது என்று வற்புறுத்திச் சொல்லி, அதன்பிறகு அந்தச் சபையில் தன்னருகே நின்ற தமோகுண ரூபமாகிய மாயையை அழைத்து, நீ போய்ப் பூமியினிடத்துள்ள அல்லமன் என்னும் பெயரையுடைய நாயகனை அறிந்து இவ்விடத் திற்கு வரக்கடவாய் என்று சொல்லி அனுப்பினாள்.

அந்த மாயையானவள் தேவியை வணங்கி, அடி யில் வருவதொரு சொல்லைச் சொல்லத்தொடங்கினாள். எப்படியெனின், அல்லமனது தன்மையையறிந்து அங் கே அவனைக் கூடுவேன், அவன் வசப்படாமற் போவா னாகில் மிகவும் வலிமை செய்து பற்றி இழுத்துக் கொண்டு இவ்விடத்துக்கு வருவேனென்று ஒரு பிர திக்கினை வார்த்தையைச் சொன்னாள். அந்த வார்த்தை எப்படியிருந்ததென்றால், ஒருசிற்றெறும்பானது கடல் நீரை வற்றும்படி குடித்துவிடுவேனென்று தன்னிடத் தில்லாத வல்லமையைச்சொல்லுவதுபோல இருந்தது. பிறகு அந்த மாயையானவள் தனது அளவை அறியா தவளாய் மயங்கிக் குளிர்ச்சி பொருந்திய இளம்பிறை தவழ்கின்ற சடையையுடைய கடவுளது சபையிலே நின்றுதன்னாலேசொல்லப்பட்ட அந்தப்பிரதிக்கினையை முடித்தற்பொருட்டு ஆதிசேடனது முடியினால் தாங்கப்

பட்ட பூமியின்மீது செல்லுதலை மனத்தில் நினைத்தவ ளாய் அந்தப்பூமியையடைந்தாள்.

கைலாசகதி முற்றிற்று.

---

மூன்றாவது

# மாயையினுற்பத்திகதி.

மாயையென்று சொல்லப்படுகிறஅம்மாது பூலோகத்தை யடைந்து முனிவர்களுடைய நெஞ்சங்கள் கலங்கும்படிபிறந்துவளர்ந்த செய்தியைச்சொல்லுவோம்.

களங்கத்தையுடைய வெள்ளிய சந்திரனது மனத்தை வருத்துகிற ஒப்பற்ற ஒளியுள்ள சங்கத்தையுடைய ஸ்ரீமகாவிஷ்ணுவின் விவாககாலத்திலே அலங்கரிக்கப்பட்ட பல வளங்களையுங்கொண்ட பூமிதேவியின் மார்பிலேயுள்ள பதக்கம்போல விளங்குகின்ற விளவலதேயம் என்பது ஒன்று உண்டு. அத்தேயத்திலுள்ள குளங்களெல்லாம் மன்மதனது பெரிய அம்புக்கூடாகும். வயல்களெல்லாம் அந்த மன்மதனுலெடுக்கப்படுகிற விற்சாலைகளாகும். சோலைகளெல்லாம் அவனது திருச்சின்னச் சாலைகளாகும். மங்கையர் வீடுகளெல்லாம் அவனது போர்க்களங்களாகும். அந்தநாடு முழுதும், பொறுமையாகிய கயிற்றினுலே புகழையும், இனிய சொல்லாகிய வலிய கயிற்றினுலே விருந்தினரையும், ஆசாரியராலே உபதேசிக்கப்பட்ட வேதாந்தப் பொருளாகிய கயிற்றினுலே நெஞ்சையும், நல்ல அறமாகிய கயிற்றினுலே செல்வத்தையும் கட்டுவோர் உளர். பூஞ்சோலைகளின் மணமுலாவுகின்ற விளவலதேசத்தையடைந்தால், வடதிசைக் கதிபனுகிய பெருஞ்செல்வத்தையுடைய குபேரன் வறியனென்றுசொல்லப்படுதற் குரியனுவன். கல்வியறிவிற் சிறந்தவனுகிய ஆதிசேஷன் கல்வியறிவில்லாதவனென்று சொல்லப்

படுதற் குரியனுவன். கருப்புவில்லையுடையவனுய் அழ கிற் சிறந்த மன்மதனும் அழகிற் குறைந்தவனென்று சொல்லப்படுதற் குரியனுவன். இப்படிப்பட்ட ஒப் பற்ற பலவளங்களும் நிறைந்து விளங்குகிற அந்த விளவல நாட்டில், அந்தப் பதக்கத்தின் நடுவிலே பதிக்கப்பட்ட விலையில்லாத மாணிக்க மணிபோல விளங்குகின்ற வனவசைமாநகர் என்றென்றுண்டு. நிலத்தினுள்ளே குளிர்ச்சியையுடைய வேர்ப்பலாக் காய் பழுத்து அதனுல் நன்மை பொருந்திய நிலம் வெடித்துண்டாகிய வழியால் ஆதிசேஷனது சிரோ ரத்நமாகிய மாணிக்கத்தின் கதிரானது ஆகாச மத் தியத்தில் தங்கிய பூர்ணசந்திரனைச் சேர்ந்து தீண்டி விரக நோயினரைக் கோபித்து அவரை வருத்துகிற மன்மதனது குடைக்காம்புபோல விளங்கா நிற்கும். துறவிகள் இல்லறத்தாரது வீடுகள்தோறுஞ் சென்று ஐயமேற்றுண்டு தமது ஏகாந்த ஸ்தாநமாகிய குகை களில்சென்று தங்கியிருத்தல்போல, வண்டுகளானவை மூறுக்கவிழ்ந்த மலர்கள்தோறுஞ் சென்று அவற்றி லுள்ள தேனை மிகுதியாகவுண்டு தம் கூடுகளையடைந்து ஒடுங்கா நிற்கும். களிப்பையுடைய வண்டின் கூட்டங் கள் தடாகங்களிலுள்ள செந்தாமரை மலர்களிலே இராக்காலத்தில் விரும்பித் தூங்கி விடியற்காலத்தில் சோலையுட் புகுந்து அங்குள்ள குயில்கள் கூவாநிற்கக் குளிர்ச்சி பொருந்திய தேனைக் கொள்ளைகொண்டு உண்ணாநிற்கும். தம்பேடுகளோடு கூடிப் பிரியாத பச் சைக் கிளிகள் வாழ்தற் கிடமாகிய குளிர்ச்சிபொருந் திய பூஞ்சோலைகளில் வண்டுகள்போய் அந்தப் பூம் பொடியை உதிர்க்காதிருந்தால் அந்த மலர்களினின் றும் பெருகுகிற தேன் பெருக்கானது கழனிகளின் மடைகளை உடையாநிற்கும்.

சேல்மீன்கள் விளையாடித் திரிதற் கிடமாயிருக் கிற ஆற்று நீரானது பெரிய யானை மறையும்படியாய்க்

கதிர்களைத் தலையிலேயுடைய செந்நெற் பயிர்களாச னவை ஓங்கித் தழைத்து விளைகின்ற வயல்களில் வாய்க்கால்களின் வழியாயோடி விரைந்து விழாநிற் கும். விரிக்கின்ற அழகியசிறையையும் மெல்லிய நடை யையுமுடைய பறவைகள் வாழ்தற்கிடமாகிய வயல்க ளானவை மச்சரேகையும் (நெடியமீனும்) பதுமரேகை யும் (செந்தாமரை மலரும்) சங்கரேகையும் (நெடிய சங்கும்) இருத்தலாலும், மலர்களையுடைய நீரை (மலர் களாகிய கணைகளைத்) தாங்குதலாலும் கருப்பு வில்லை யுடைய மன்மதனது செவந்த கையை நிகர்த்திருக் கும்.

குளிர்ந்த பாற்கடலில் யோகநித்திரை செய்கிற ஸ்ரீமஹா விஷ்ணுவானவர் தமது சாரூப்பியத்தை யடையும்படி எவருக்குக் கிருபை செய்வரோ அவர் கையிலே அந்த நாராயணனுல் கொடுக்கப்படுகிற பாஞ்சஜந்யம் என்னும் சங்குகள் பிறக்குமிடங்கள் போலக் குளங்க ளெல்லாவற்றிலும் குடம்போன்ற பெரிய சங்குகள் நெருங்கியிருக்கும். தாழ்ந்தோர் உயர் வரென்றும் மிகவுயர்ந்தோர் தாழ்வரென்றும் அறநூல் களை ஆராய்ந்தோரால் சொல்லப்பட்ட நீதிவாக்கியத் தின் உண்மையை இங்குப் பிரத்தியக்ஷமாய்க் கண் டோம். அதெப்படியென்றுல், அந்தநகரத்தின் மதிலைச் சூழ்ந்துகிடந்த பழமையாகிய அகழியானது தாழ்ந்த தனுல் ஒப்பற்ற ஆதிசேஷனது மணிமுடியின்மேல் நின்றது. அந்தநகரத்தைச் சூழ்ந்த மதிலானது மிகவும் உயர்ந்ததனுல் மேருவை வலம்வந்து உதயகிரியினின் றும உதிக்கின்ற சூரியனது காலின்கீழேபோய்த் தங்கி நின்றது. அந்த நகரத்தில் நான்கு வேதங்களையும் ஆறங்கங்களையும் கற்றறிந்த அந்தணர் சாஸ்திரவாத மாகிய சொற்போரைச் செய்யாநிற்பர். நீண்டவில்லினை யுடைய ஸ்ரீராமபிரான்போல வெற்றியுள்ள அரசர்விற் போரைச் செய்யா நிற்பர். பிறர் பொருளையும் தம

பெரிருள்போலக் காப்பாற்றி வாணிகஞ் செய்கிற வணிகர் பொற்போரைச் செய்யா நிற்பர். வேளாண் குடியிற் பிறந்தோர் நெற்போரைச் செய்யாநிற்பர். அந்த நகரமானது உடுப்போர்க்கு உடுத்தற்குரிய ஆடைகளாலும், உண்போர்க்கு உண்ணுதற் குரிய உணவு முதலிய பண்டங்களாலும், மாலை தொடுப் போர்க்குத் தொடுத்தற்குரிய மலர்களாலும், அலங்க ரித்துக்கொள்வோர்க்கு அலங்கரித்துக் கொள்ளுதற் குரிய ஆபரணங்களாலும், குடியிருப்போர்க்குக் குடி யிருத்தற்குரிய வீடுகளாலும் குறைபாடுடையதன்று. ஆயினும் கொடையாளர்க்கு இரப்போரில்லாத குறை யொன்று மாத்திரம் உண்டு. சிவபெருமானாலே தரப் பட்ட ஒற்றைக் கொம்பினையுடைய யானைக்கு இரண்டு கொம்புகளை யுடைய நாங்கள் இணையாவோமாயின் இந்திரனைச் சுமக்கிற நான்கு கொம்புகளையுடைய யானையானது எங்களுக்குச் சமானமாகுமென்று களிக் கின்ற யானைகளும், இரண்டு உருளைகளையுடைய சகடங் களையிழுக்கிற கடாக்கள் எம்மினும் உயருமாயின் ஒருருளையுடைய சூரியரதத்தை யிழுக்கிற குதிரைகள் ஒன்றனையும் இழுத்துச் செல்லாத எம்மினுஞ்சிறந்தன வாகும் என்று களிக்கின்ற குதிரைகளும், அந்த நகரத்துத்தெருக்களில் நிறைந்து நீங்காதனவாயிருக் கும். வேதங்களும் அறுபத்து நான்கு கலைகளும் முழங்குகின்ற ஓசையும், விவாகம் முதலிய சுபகாரியங் கள் செய்கிற இடங்களில் முழங்குகிற தோற்கருவி தொளைக்கருவி முதலியவற்றின் ஓசையும், யானைகளும் குதிரைகளும் ஆகிய இவற்றால் நிறைந்திருக்கிறதெருக் களில் ஓடாநின்ற மணிகளையுடைய தேர்களின் ஓசை யும், நீரால் நிறைந்த கடலினது அலைகள்போல ஒன் றோடொன்று தொடர்ந்து சென்று விண்ணுலகத்தி லுள்ள தேவருடைய காதுகளையும் செவிடுபடச் செய் யும்.

இவை மூங்கிலைப் பழிக்கின்றனவென்பபடுகின்ற ஒளிபொருந்திய வளைகளை யணிந்த தோள்களையுடைய உமாதேவியினிடத்து விடை பெற்றுக்கொண்டு போயும் விட்டு நீங்கி வருதற்கரிய கைலைமலையைப் பிரிந்து வந்து இந்தப் பூமியை யடைந்து முனிவர்கள் தமது பரிசுத்தமான மனங்கள் கலங்கவும், மன்மதனுனவன் திரண்ட தன் தோள்கள் பூரிக்கவும், மாயையானவள் பிறந்த வனவசை மாநகரின் வளத்தை யார் சொல்ல வல்லவர்.

இந்த வனவசை மாநகரத்திற்கு அரசனுயிருந்து வாழ்பவன் யாவனெனின், அந்தத் திருமால் தன் தேவியை மார்பின்கண்ணே வைத்திருத்தல் வீணுகும், புகழைத் தருவது அன்று என்று சொல்லும்படி வெற்றித்திருவைத் தன் தோளில் வைத்தவனும் கைம்மாறு வேண்டாத மேகம்போல்கின்ற கொடையாளனுகிய மமகாரன் என்று சொல்லப்படுகிற பெயரையுடையவனும் ஆவன். அன்றியும், தனக்குக் கப்பங்களைச் செலுத்துகின்ற வெற்றியையுடைய அரசர்க்குக்காணுதற்கரிய மேம்பாட்டை யுடையவனும், தன்னிடத்து வந்துகுறையிரப்பவர்க்கு எதிரேவிரைந்துபோய் அவர் காணும்படி அவர்களுக்கு எளியனுய் நிற்பவனும், நிறைந்த மதத்தையுடைய மலைபோன்ற அஷ்டதிக்குக் கஜங்களும் நின்று சுமக்கின்ற பூமிபாரத்தைத் தானொருவனே சுமக்கின்ற மிகுந்த வலிமை பொருந்திய தோள்களை யுடையவனுமாவன். அன்றியும், இந்தப் பூமியை யிரப்பவர்வந்தால் இந்தப் பூமியானது காரணனுக்கு ஓர் அடியுள் அடங்கிய எளியபொருளேயன்றி உலுத்தராலே மறைத்துவைக்கப்படுகிற பொருளும் அன்று என்று நினைக்கும்படி ஈகையைக் கற்று, சொல்லுவோராலே சொல்லப்படுகிற சொற்களை யெல்லாம் தனது புகழிலே வைத்தவனும், மண்ணுலகில் செருக்குற்று வாழ்பவனும் ஆவன். அப்படிப்பட்ட

அந்த மமகாரனுடைய மனைவியானவள் யாரெனின், வளைந்த நெடிய கூந்தலையும் அழகிய வேல்போலும் கண்களையும் மின்னற்கொடிபோன்ற இடையானது தளர்ந்து அசைந்து வாடும்படி பருத்துப் பொற்பொடி போன்ற தேமல் படரப்பெற்ற ஆபரணங்களை யணிந்த தனங்களையும் உடைய பூங்கொம்புபோல்பவளும் இனிமைமிகுந்த அமிர்தம்போலுஞ் சொல்லையுடைய மோகினியெனப்படுகிற பெயரை யுடையவளும் ஆவள். வேதமுடிவிற் சொல்லப்பட்ட ஒரேபொருளான இறைவனது இடப்பாகத்தில் வீற்றிருக்கின்ற உமாதேவியாரால் அனுப்பப்பட்ட இந்த மாயையானவள் தளராத வலியையுடைய முனிவரது மனந் தளரும்படியாகக் கெடாத அழகை இந்தப் பூமியின்கண் இவளது பொலிவுபொருந்திய கருப்பத்திலே புகுந்து பெற்றாள் என்றால் இவளுக்குச் சமானமாக இனி யாரை யெடுத்துச் சொல்லுவோம்.

இந்த மமகாரனும் கருமை நிறைந்த மெல்லிய கூந்தலையும் வாள்போலும் கண்களையுமுடையமோகினியென்னும் மாதும் அழகியபிள்ளை யில்லாமையால் மிகுந்த துன்பத்தை யடைந்து உடம்பு வாடுதற்கு ஏதுவாகிய விரதங்களை அனுஷ்டித்து வந்தார்கள். அப்படி பயனைக் கருதிச்செய்த மோகினிமாதின் வயிற்றிலே உமாதேவியின் தண்ணிய அருளினால், அரசிலையுடைய மன்மதனது வலதுதோள் துடிக்கக் கன்னிகையாகிய மாயையானவள் கருப்பத்தை யடைந்தாள். அடைதலும் மோகினி யென்பவள் முத்துமாலையால் அலங்கரிக்கப்பட்ட முலைகளின் முகங்கள் கறுக்கப் பெற்றாள், வடிவத்தைப் பற்றிய அழகிய நிறமானது வெளுத்து, நரம்புகள் பசுமையடைந்தனவாய் அந்தநிறத்தை மேலே பரப்பாநிற்க, பொய்யுறக்கங் கொண்டு புளிஞ்சுவையுள்ள பண்டங்களையும் விரும்பினாள். இவ்

வதமாகப் பத்துமாதமிருந்து, பின்பு ஒரு பெண்குழந்தையைப் பெற்றாள். அந்தக் குழந்தையானது சங்கிற் சிறந்த சலஞ்சலம் ஈன்ற முத்துப்போ லிருந்தது. அப்படி அந்தமோகினியானவள் குழந்தையைப்பெற்ற தினத்தில், சங்கவாத்தியமும் மத்தளமும் பிரமதாளமும் ஊதுகொம்பும் உடுக்கையும் முரசங்களும் மன்மதனது முரசமாகிய கடல்போல முழக்கப்பட்டன. அப்பொழுது மமகாரராஜன் தனக்குப் பெண் பிறந்த பெருங்களிப்பால் ஆடை ஆபரணம் இரத்தினம் பொன் பசு முதலியவற்றை அந்தணர்க்கு அவர் விரும்பினபடியே தானஞ்செய்தது மன்றி அவர் வெறுக்கும்படியாகவும் மிகுதியாகக் கொடுத்தான். இவ்விடத்தில் அழகின்முளையாகிய மாயை உதித்தலோடும் மன்மதனனவன் மனங்கொள்ளாத பெருங்களிப்புடையவனாய் தன்னாலே செலுத்தப்படுகிற வெவ்விய அம்புமழையும் தேவர் முதலியோரால் இறைக்கப்படுகிற பூமழையும் ஒன்றாகும்படி தானொருவனே யெங்கும் நின்று சொரிந்தான். அப்படி சொரிந்த காலத்தில் இந்தப் பூமியில் கங்காநதிக் கரையிலும் மலைக்குகைகளிலும் புண்ணிய வனங்களிலும்போய், தம் மீது புற்றுமூடவும் மரமுளைக்கவும் யோகத்திலிருந்தும், பனிக்காலத்தில் குளிர்ந்த நீரிலும் வேனிற் காலத்தில் பஞ்சாக்கினி நடுவிலும் சேர்ந்தும், ஆஹார நித்திரைகளை யொழித்தும் செய்யப்பட்ட தவத்தையுடைய முனிவருடைய மனங்களும் மையற் கடலிலாழ்ந்து பதைத்தன. அப்பொழுது அந்த முனிவரெல்லாம் பஞ்சமஹா பூதங்களும் அவற்றாலாகிய சராசர ஜீவராசிகளும் அழிந்தொழியும் முடிவுக் காலத்திலும் சலனமடையாத நம்முடைய மனங்கள் இப்போது கலங்கியதற்குக் காரணம்யாதோ? அபூர்வமாகிய இந்தச்செய்கை இங்கேவந்த வரலாறு யாது? என்று ஆலோசித்துக்கொண் டிருக்குங் காலத்தில்,

தளர்ந்தவிடத்து உதவுகின்ற கல்விபோல துருவாச முனிவர் அவர்களிருக்குமிடத்திற்கு வருதலும், முனிவரெல்லாரும் அந்தத் துருவாச முனிவரை எதிர் கொண்டழைத்துவந்து அவர்க்குச் செய்யவேண்டிய வுபசாரங்களைச் செய்து உயர்ந்த ஆசநத்தின்மேல் அவரையெழுந்தருளச் செய்து அவரது திருவடிகளை மலர்களால் அர்ச்சித்துத் துதித்து வணங்கி நின்று சொல்லுவாராயினர். ஐயனே! எக்காலத்திலும் எமது மனங்கள் சித்திர தீபம்போல அசையாதிருக்கும். இன்று யாது காரணத்தாலோ தென்றற் காற்றுக் கெதிரேயிருந்த சிறிய விளக்குப்போல நிலைதடுமாறு நின்றன. இதற்குக் காரணம் இன்னதென்று நாங்கள் நன்கு யுணரும்படி தேவரீர் சொல்லியருள வேண்டு மென்று பிரார்த்தித்து நின்றார்கள். அதற்குத்துருவாச முனிவர் மனங்கனிந்து அந்த முனிவர்களை நோக்கி, ஓ தவத்திற் சிறந்தவர்களே! உமாதேவியானவள் சிவ பெருமானோடு செய்த சபதத்தினால் தனது தமோ குண ரூபமாகிய மாயையென்னு மர்தையனுப்ப, அவள் வனவசைநகரில் இளஞ்சந்திரன்போல இன்று பிறந் தாள். அதனால் உங்கள் மனங்கள் கலங்கி வலியழிந்தன வென்று சொன்னார். அவர் அப்படி சொல்லக்கேட்ட முனிவரெல்லாரும் துருவாசரை நோக்கி, ஐயனே! நீ சொன்னது உண்மையே; ஆயினும் அந்த மாயையென் னும் பெண் பிறந்ததனால் பெரிய தவத்தொழிலையே மேற்கொண் டிருக்கிற எமது மனங்கள் கலங்குதல் தகாது. தேவரீர் எம்மிடத்திற்கு எழுந்தருளினதனால் எமக்குண்டாயிருந்த சந்தேகங்கள் யாவும் நீங்கின. ஆனால் மலையரையன் மகளாகிய உமாதேவியானவள் ஏவ மாயையானவள் இவ்வுலகில வந்து பிறந்ததற்குக் காரணம்யாதோ அதனை யெங்களுக்கு விஸ்தரித்துச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்க துருவாசமுனி வர் சொல்லலாயினர்.

திருக்கயிலாயத்தில் திருவோலக்கத்திலிருந்த சிவபிரான் அல்லம தேவனது பெருமையை நீ அறியமாட்டாயென்று உமாதேவியோடுசொல்லுதலும், அவ்வுமாதேவியானவள் யான் அறியமாட்டுவே னென்று சொல்லி, விளக்கைக் கண்டுவரும்பொருட்டு இருளையனுப்பினாற்போல இந்த மாயையை அனுப்பினாள். மாயையானவள் கைலையைவிட்டு இங்கு வருதற்குக் காரண மிதுவே. அந்த மாயையென்னும் நஞ்சானது தருகிற மயக்கம் அல்லமதேவன் என்னுங் கருடனைத் தியானித்தால் நீங்கிப்போகும். பிணிகெட வேண்டினாலும், தீர்க்காயுளை வேண்டினாலும், பெருஞ் செல்வம் பெறவேண்டினாலும், கல்விப்பெருக்கை வேண்டினாலும், தேவர்கள் தம்மை வணங்க வேண்டினாலும், முத்தியடைய வேண்டினாலும் ஒப்பற்ற அல்லமன் என்னும் பெயருடைய மகாத்மாவை எக்காலத்தும் பெரியோர் தியானஞ் செய்வார்கள் என்று சொல்லி துருவாசமுனிவர் தமதிடத்தை யடைந்தார். அன்று முதலாக அந்த முனிவர்யாவரும் அல்லம தேவனது திருவடியை மனத்திலிருத்தி அவனது புகழைத் தமது வாய்க்கிசைந்தவாறு பலவகையாய்த் துதிக்கலுற்றார்கள். மேலும் மனமாகிய தகளியில் பத்தியாகிய நெய்யை நிறைத்து கருத்தாகிய பஞ்சுத் திரியினுச்சியில் பற்றும்படி அல்லமன் என்னும் அழகிய சுடர் விளக்கேற்றி மாயையாகிய அந்த்த இருள் நீங்கப் பெற்றுத் தமது பழமையாகிய பெருந் தவத்தைச் செய்துகொண் டிருந்தார்கள். மந்தரகிரியாகிய மத்தினால் கலங்கப்பெற்ற பாற்கடல்போல முனிவர் மனங்கள் கலங்கி மெல்லத் தெளிந்தமையைச் சொன்னோம். இனி பூமியில்வந்து பிறந்தபோதே மாதவர் மனங்களையெல்லாம் கலங்கச் செய்யவல்ல மமகாரன் மகளுடைய செய்தியைச் சொல்லுவோம். காந்தக் கல்லினாலே இழுக்கப்படுகின்ற இரும்பானது அதனோடு

பொருந்துதல்போல கண்கள் பார்வைகளாலேதன்னோ டுபொருந்தக் கட்டிக்கொண்டு யாவையும் கிரகித்தற்கு இசைந்த மனம் நியாய நூலோர் ஒரு பரமாணு ரூப மென்று சொல்லுதல் நியாயமன்றென்று அம்மனத் தில் தன்னைப்பற்றி உண்டாகிய ஆசையாகிய பெரிய கடலைப் புகவிடுகின்ற மகளைக்கண்டு மனமகிழ்ந்து மம காரராஜன் மாயையென்னும் பெயரை அவளுக்கு இட்டு நாமகரணச் சடங்கு செய்தான்.

அதன்பிறகு அந்த மகளைப்பெற்ற மோகினியான வள் அந்த மாயைக்குப் பரிமள மஞ்சள்பூசி, தன் கணைக்கால்களின்மேல் பொருந்தக் கிடத்தி, நீராட்டி, இரண்டு கண்களிலும் அது விழாமல் ஒதுக்கி, உச்சி நீர் ஊதி, பட்டாடையினால் உடம்பைத் துடைத்துத் தன் மெல்லிய முலைகளோடு சேரத் தழுவிக்கொண்டு, வாயின் எச்சிற்றுளிகொண்டு இழைத்து மண்பொட் டிட்டு, திருநீற்றுக் காப்பிட்டு, கண்களுக்கு அழகு பொருந்த அஞ்சன மெழுதி, கால்களுக்குச் சதங்கை களையும் பொன்னாலாகிய தண்டைகளையும் அணிந்து, பொன்னரைஞாண் இடையிற் கட்டி, புலி நகஞ் சேர்ந்த அழகிய பசும் பொன்னாலாகிய பதக்கத்தை மார்பிலே யணிந்து, தோள்களில் சிறிய மெல்லிய தொடியணிந்து, பெண்ணரசியாகிய அவளது அழகிய நெற்றியாகிய பொன்னிறமுடைய பிறையின்மேலே ஒரு சுட்டியணிந்து, போக்குதற்குரிய செஞ்சோற்று நீராலத்தி கற்பூராலத்தி வெண்கடுகுமுதலிய பொருள் களாலே கண்ணெச்சிலால் நேரிட்ட குற்றத்தைப் போக்கி, அன்போடு முலைப்பாலுண்பித்து, தூக்கப் பட்ட பவளக் கால்களையுடைய பசும் பொன்னாலாகிய தொட்டில் நிறையும்படி படுக்கவைத்துப்பார்த்து,மகிழ் கின்ற சுவையையுடையமேலான அமிர்தமே!உலகத்தை யாளுகின்ற மமகாரராஜனுக்கு அழகு செய்பவளே! எனது பிள்ளைக் கலிதீர்க்த இனியகரும்பே! என் கண்

மணியே! என்செல்வமே! என்று சீராட்டி, வறியஞ்கிய ஒரு செய்யாளன் அந்தச்செய்வினையும்படி காப்பாற்று கின்ற செய்கைபோலவும் ஒப்பில்லாத கல்வியை விரும் பினவன் பாடம் போற்றுதல் போலவும் கோடுத லில்லாத செங்கோலையுடைய மநுநூலின் வழிநடக் கின்ற அரசன் உலகத் துயிர்களைக் காப்பாற்றுகின்ற செயல் போலவும் வருத்தத்திற்கு ஏதுவாகிய பல விரதங்களை யனுஷ்டித்துத் தான்பெற்ற பூங்கொடி போன்ற மகளை வளர்த்தாள். வஞ்சகமுடைய மாயை யின் அழகுபோல் யான் பார்த்ததில்லையென்று மிக வும் உள்ளத்திலே யாச்சரியப்பட்டு சிரமசைப்பது போல அசைகின்ற விளக்கைப்பார்த்தும், ஒற்றைவிரலை மெல்லச் சுவைத்தும், விளங்குகின்ற அழகிய சதங்கை யணிந்த கால்களை யுதைத்துக்கொண்டு விரிந்த செவ் வல்லி மலர்போலும் வாயைக்குவித்து அழுதும், மீளச் சிரித்தும் கிடக்கும் மாயையானவள் முகம் கவிழ் கின்ற பருவமடையவே அதற்கு முன்னேநாணத்தால் முகம் கவிழ்ந்துகிடந்த மன்மதன் உட்கார்ந்தான். அவள் உட்காரும் பருவமடையவே அவன் கைவிட்டுப் போன வில்லொன்றை எடுத்து எழுந்தான். பொன்னி னாற் செய்யப்பட்ட பாவைபோலுள்ள அவள் எழுந்து நிற்கும் பருவமடையவே அந்த மன்மதன் நடந்தான். மமகாரராஜனின்ற மகளாகிய அவள் நடக்கும் பருவ மடையவே பரிசுத்தமாகிய தவத்தைச் செய்து ஐந்தா சைகளையும் ஒழித்த முனிவரிடத்துக்கு ஓடினான். அம் மாயையானவள் புள்ளாங்குழலினிசையையும் வீணையி னிசையையும் இன்பந்தருவனவென்று சொல்லாதபடி மெல்லிய கொவ்வைக் கனிபோன்ற வாயால் மழலைச் சொல்லைச்சொல்லியும், உடற்கின்ப முண்டாகும்படி ஓடி மேல்விழுந்தும், யாவராலும் விரும்பப்படுகின்ற அமிர் தத்தைக்காட்டிலும்மிகவும் இன்பமுண்டாகும்படி உண் ணப்படுகின்ற அறுசுவையுண்டியைச் செழுமைபொருந்

திய சிறுகைகளால் துழாவியும் தன்னை ஈன்றோர்களா கிய மமகார ராஜனையும் மோகினியையும் தன்மீது அதிக மோகமுள்ளவர்களாகச் செய்தாள். மேலும் உலகமுழுதும் பரவிய பெருஞ் சிறப்பையுடைய அல்ல மனைப் பிடிக்கவந்த மதிபோன்ற மதியினால் தன்னுரு வத்தின் சாயையைப் பிடிக்க நினைந்து ஓடியோடி அது அகப்படாமையினால் அழுவாள். ஒப்பில்லாத சந்திர னானவன் பிற்காலத்தில் கோபித்துக் கொதிக்கின்ற நெருப்பை வீசாதிருக்கும்படி அடுத்து அவனை யுறவு கொள்வாள்போல வாவாவென்று அழைத்திடுவாள். இவ்விதமாக மாயையானவள் தந்தை தாயார் மகிழும் படி வளர்ந்து, அரசுசெய்து இருந்த அரசனானவன் இறக்க அவன் வழியில்தோன்றிய இளம்புதல்வனான வன் அவனது சிங்காதனத்தின்மேல்இருப்பதுபோல், முன்னே முளைத்த வெண்பற்கள் விழுதலும் அவை யிருந்தவிடத்தில் வேறு பற்கள் முளைக்கப் பேதைப் பருவங் கடந்து அதற்குமேல் வரக்கடவதாகியபெதும் பைப் பருவத்தை யடைந்தாள். செய்யவல்ல கம்மாள னால் செய்யப்பட்ட சிங்காசனத்தின்மேல் மணிமகு டத்தையணிந்த அரசனானவன் மெல்லவந்து கொலு வீற்றிருக்குந் தன்மைபோல், வெவ்வியீ தக்கைகள் வளர்த்து நீங்க மேம்பட்ட குணத்தையுடைய வள்ளை போன்ற காதுகளில் பரிசுத்தமான பசும் பொன்மேல் மணிகள் அழுத்திச்செய்யப்பட்ட ஒன்றற்கொன்றொப் பாகிய குண்டலங்கள் அணியப்பெற்று விளங்கினாள். தேனையுடைய மலர்களாகிய அம்புகளை யேந்திய மன் மதனுக்கு வனதுர்க்கமாக வளர்க்கப்பட்ட கூந்தற கா டானது (பழிபொடுகலந்து) மலரொடுகலந்து(காவலை யுற்றது)கட்டப்படுதலை யுற்றது. கண்களானவை நமது கடவுளின் கண்டத்திலுள்ள நஞ்சின் குணத்தையும் சிறிது பொருந்தின. இளமுலைகள் துறந்தோராகிய பறவைகள் முட்டி மயக்கமாகிய கண்ணியிலே அகப்

படுதலை மறைந்து மெல்ல எட்டிப் பார்ப்பனபோல் முகங்கொண்டு மார்பில் புறப்பட்டன. அன்ன நடையும் அன்னத்தைவிட்ட முனிவரது ஒழுக்கமும் சோர்வடையும்படி மாயையானவள் நடக்கும் நடைகற்றாள்; கரும்பைக் கசப்பிக்கின்ற சொற்களைப்பெற்றாள்.

வளத்தால் மிகுந்த மலரின்கண்ணே வீழ்கின்ற வண்டுகள்போன்ற காளையரது பார்வைக் குறிப்பை யறிந்தாள். அதனால் தானே தன்னை அரியவளாக மதித்துத் தன் மனத்தில் செருக்கடைந்தாள். இந்த மாயையினது சந்திரன்போலுள்ள முகத்தின் முழுப்பார்வையைப்பெற்றுச் சிவப்பு நிறம் பொருந்திய வாயின் வலிமையை யடைந்து அழகிய சிங்கம்போலுள்ள இடையினையடுத்த தகுதியினையுடைய அரவுபோலுள்ள அல்குலின் வலியையுஞ் சேர்ந்து முதன்மையாகிய மீனக்கொடியையுடைய மன்மதனானவன் துறவோராகிய பகைவரை வெல்லும் பொருட்டு மணத்தையுடைய புஷ்பபாணங்கள் பலவற்றைத் தன் கருப்புவில்லிற்றொடுத்தான். பக்குவமாகப் பொங்கியெழுகின்ற அன்னம்போலப் பொங்குகின்ற வளர்ச்சியை யுடைய மோகத்தைச்செய்கிற மாயையின் பருவத்தை நினைத்துக் கிரீடத்தையுடைய அரசனானவன் நான்முகனும் கண்டு மயங்கத்தக்க ஒரு கன்னியாமாடம் அமைத்து, அதன்கண் கற்பிக்கப்பட்டநானாவிதமான வித்தைகளையும், அவற்றை முடிவுறக்கற்று வல்லமகளிர் பலரும் சூழ்ந்துநிற்க அவரோடுசிந்தித்துக்கொண்டு இருக்கும்படிசெய்தான். தனக்குத்தகுந்துள்ள அந்த அழகியமாடதைதயடைந்துபற்பலவாகியபாமாலைகளை அப்பியசித்துநரம்பாகிய நாவையுடைய ஒப்பற்ற வீணையைத்தனக்குமாணுக்கனென்று சொல்லும்படி அசைத்துத் தடவுகின்ற அங்குலிகளாலே பேசுவித்தும், அங்கு ஒருமங்கையானவள் மத்தளத்தை முழக்கா நிற்க, சில மங்கையர் இராகங்களை முறைமைப்படி பாடாநிற்க, ஒரு

பசுங்கொடியானது மணம் விரிந்த மலரின்கண் வண்டொலி செய்யாநிற்கத் தென்றற் காற்றினால் அசைதல்போலப் பாடிக்கொண்டு நடித்தும், வளர்கின்ற தனமாகிய அரசனுக்கு நேராகவராநிற்கக் கையாகிய அவ்வரசனுடைய சேவகன் அடித்துத் துரத்துந்தோற்றம்போல மணம் பொருந்திய மலரணிந்த கூந்தலின் மேலே வண்டுகள் ஒலித்து எழும்படி பருத்த முத்துக்களால் செய்யப்பட்ட மெல்லிய பந்துகளை அடித்து விளையாடியும், மலர்மாலையை நெடிய கூந்தலில் சூடியும், நல்ல மணமுடைய சந்தனத்தையும் கஸ்தூரியையும் மேனி முழுதும் விளங்கும்படி பூசியும், பல அவயவங்களுக்கும் பொருந்த அணிதற்குத் தகுதியாகிய ஆபரணங்களை அணிந்தும், குடித்தற்குத் தகுதியாகிய பலவகைச் சுவைகளையுடைய குடிநீர்களைக் குடித்தும், இனிமையாகிய பழங்களைப் பாலொடு சேர்த்துச் செம்பொன்னாலாகிய கூடுகளினால் தாங்கப்படுகிற பச்சைக் கிளிகளை யுண்பித்துத் தன் சொல்லை அது கற்கும்படி கற்பித்தும், கற்பகப் பூங்கொடிபோல்பவளாகிய மாயையானவள் காலங்கழித்து வருநாளில், ஒருநாள் பாண்டியன் சோழன் சேரன் கொங்கணதேசத்தரசன் மாளுவதேசத்தரசன் மகதநாட்டரசன் என்று சொல்லப்படுகின்ற இவ்வுலகத்திலுள்ள அரசர்களுக்குள்ளே எவரிடத்து என் புதல்விக்கு மணங்கூடுமோவென்று ஆலோசித்து மகாராஜன் சிந்தித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது அவன் குருவாக வழிபடுகின்ற சாந்தத்தையுடைய அகங்காரனென்னும் பெயரினையுடையோன் அவ்விடத்துக்கு வந்தான். அவ்வரசனும் அவனையெதிர்கொண்டழைத்து வந்து விதிப்படிவணங்க, அந்தக் குருவானவன் அரசனது வழிபாட்டை முறைப்படி அங்கீகரித்து மாயையின் வளர்ச்சியையும் நற்குணத்தையும் காணும்பொருட்டு அவளிருக்கிற விடத்திற்குச் சென்றான். அப்பொழுது அவள்

எதிர்கொண்டுவந்து ஆசிரியனைத் தன் தலையால் வணங்கிப் பூசித்தாள். மாந்தளிரையும் ஆலிலையையும் கோங்கரும்புகளையும் அழகுள்ள தாமரை மலர்களையும் தாங்கி அற்புதமாகிய பூங்கொத்தினையுடைய ஒரு கொடிபோன்ற அம்மாதைக்கண்டு அவ்வாசிரியன் ஆலோசித்து, இவள் ஒரு காரணத்தால் அவதரித்ததாமென்று அறிந்துகொண்டான். மாயையினது வடிவத்திலுள்ள குறியைச் சிந்தித்து அறிந்தவன் கிரீடாதிபதியாகிய அரசனையன்போடு பார்த்து, உன்புதல்வியைப் பாணிக்கிரகணம் பண்ணுவோர் யார் சொல்லக்கடவையென்ற அளவில் அவ்வரசன் சொல்லத் தொடங்கினான்.

ஐயனே, அந்தச் செய்தியை அடியேன் அறிந்திலேன்; மாநுடத்தொகுதியிலும் தெய்வத்தொகுதியிலும் நமது பெண்ணின் விவாகத்துக்கு உரியவராகிய ஒருவரை நீயே திருவுளத்தாராய்ந்தறிந்து எனக்குச் சொல்லக்கடவை என்றான். அதுகேட்ட அந்த ஆசிரியன் அரசனை நோக்கி, ஆகாசகங்கையைச்சேர வல்லது வளைந்த கழுத்தையுடைய கொக்கு அன்று; அதற்குரியது தெய்வத்தன்மை பொருந்திய அன்னப்பறவையேயாம். அதுபோல இந்தப் பெண்ணைத் தழுவுதற்குரியவர் மனிதரல்லர்; மற்று யாரெனின், நமது இறைவராகிய சிவபிரானே இவளுக்குத்தகுதியான நாயகனாகவேண்டும் என்று சொன்னான். அதுகேட்ட அரசன், திருமாலும் நான் முகனும் தேடிக்காணாத அந்த இறைவன் என் புதல்வியாகிய இந்த மங்கைக்கு எளியனாவனோ என்று கேட்க, ஆசிரியன் அரசனை நோக்கி, நீ அப்படி மலைக்கவேண்டியதில்லை; விஷகண்டத்தையுடையவனாகிய சிவபெருமான் அன்பர் விரும்பிய கோலங்கொண்டு அவர்களுக்கெதிரே பிரத்தியட்சமாவன்; இது வுண்மையென்று சொன்னான். இந்தப் பிரகாரமாக அரசனுக்குச் சொல்லி மாயையாகிய கன்

னிக்கிய அழைத்து, அவள் கருத்துக்கு இணங்கும்படி செவ்வையான அநுஷ்டானத்தை அவளுக்கு உபதேசித்து அந்தக் குருநாதன் தன திடத்திற்குப் போயினான்.

பிறகு மாயையானவள் ஆசாரியனது உபதேச வாக்கிய வழியை யுட்கொண்டு, சிறந்த வனவசை நகரிலுள்ள மதுகேச்சுரனைப் பூசைக்குரிய உபகரணங்கள் எல்லாவற்றையும் குறைவறச் சேகரித்துப் பூசித்து வழிபட்டாள்.

மாயையினுற்பத்திகதி
முற்றிற்று.

---

நான்காவது

## மாயை பூசைகதி.



செவ்வரிபரந்த கண்களையுடைய மாயையானவள் ர நாயகனையடைய வேண்டுமென்னும் இச்சையைத்தனது இதயத்திலிருத்தி மதுகேசுவரரை வேதாகமவிதிப்படி உதயகாலத்தில் பூசை செய்துவரும் நாட்களுள், ஒருநாள் செய்விதியை, விவரித்துக் கூறுவோம்.

சந்திரனைத் தூரத்திற்கண்டு மலர்கின்ற நீலோற்பலங்கள் வாடவும், முதிர்ந்த வொளிபொருந்திய ஆபரணங்களணிந்த இளமையாகிய தனங்களை யுடைய அழகுபொருந்திய மாயையின் முகமாகிய சந்திரனைச் சேர்ந்த வரிபரந்த கண்களாகிய நீலோற்பலங்கள் மலரவும், பச்சைக் குதிரை பூண்ட தேரையுடைய சூரியன் கிழக்குத் திக்கிலுள்ள உதயகிரியில் தோன்றினான். அப்பொழுது அன்னத்தின் மெல்லிய இறகால் பதப்

படுத்திச்செய்த சயநத்தின்மீது தமியளாகிப் பெருமை பொருந்திய வொருமயில்போலத் துயில்செய்த மாயை யானவள் விழித்துக்கொண்டு, தொழில் நிறைந்த மஞ்சநசாலைக்குட் சென்று பணிவிடைப் பெண்கள் இனியவாச நீரை யேந்திவர அந்த நீரில் ஸ்நாநம்செய்தாள். பின்பு விலை யிவ்வளவென்று மதிக்கப்படாத அரதநக் கோவைசூழ்ந்த கரையையுடைய பட்டாடையுடுத்து, அந்த ஆடையின் ஒரு முன்றானையைத் தனங்களின் மேல் அழகா யணிந்துகொண்டாள். அவளது தனங்களோடு பொருந்திய ஆடையைக்கண்ட நாள்தொடங்கியல்லவா தருக்கசாத்திரங் கற்றுவல்லவர் கடபடமென்று உதாஹரிப்பது! ஒருசேடியானவள் பொன்னிறுற்செய்த மணிகளிழைத்த மிதியடிகளைக்கொண்டு வந்து எதிரேவைக்க, மாயையானவள் கட்டவிழ்ந்த செந்தாமரைமலரை நிகர்த்த தன்பாதங்களில் தொடுத்துக்கொண்டு நடந்துபோய் ஆபரண மணிந்துகொள்ளுதற்குரிய அலங்கார மண்டபத்தில் ஒரு சுவர்ணரத்நமயமான ஆசநத்தில் வீற்றிருந்தாள். அவ்விடத்திற்கு ஆபரணங்களைக் கொண்டு அலங்கரிக்கிற வண்ணமகளிர் பலர் வந்தார்கள் ஒரு வண்ணமகள், மன்மதன் தன் வில்வளையும்படி பூட்டிய வண்டாகிய நாணின் கீழ்க்குதைப் பூட்டைக் கழற்றிவிட்டதுபோல மலராலலங்கரிக்கப்பெற்ற கருமையாகிய அளகபாரத்தைப் பின்னியலங்கரித்து வீரத்தன்மை யமைந்த வேல் போன்ற கண்களையுடைய மாயையின் முதுகிலே தொங்கவிட்டாள். பொற்பொடியும் விரும்புதற்குரிய தேமலபடர்ந்து விளங்குகிற ஸ்தநங்களையுடைய ஒரு சேடியானவள், பின்னிவிடப்பட்ட சடையுருவாகிய நெடிய கூந்தலெனப்படுகிற கரியபெரும்பாம்பானது முன்னேவிழுங்கின சூரிய சந்திரர்களை உமிழ்ந்துவைத்த முறைமைபோல மாயையின் ஒளிபொருந்திய நெற்றியின்மேல் சூரியப்பிரபை சந்திரப்பிரபை என்றுசொல்

லப்பட்ட ஆபரணங்களை அழகுபொருந்த அலங்கரித்தாள். ஒரு சேடியானவள், களங்கமில்லாத ஒள்ளிய சந்தனப் பொட்டாகிய வெள்ளிய சந்திரனைக் கவர்தற்பொருட்டுக் கூந்தலாகியகருமணலின்மேல் சுவடுபடச்செல்லுகிற ஒருசிறுபாம்புபோல மயிர்வகிரில் பொருந்தும்படி ஒளிமிகுந்தமாணிக்கக்கட்டியொன்றைத்தொங்கவிட்டாள். ஒருபாவைபோலும் சேடியானவள், மன்மதனதுகொலைசெய்யும் நஞ்சுபூசப்பட்டகொடியவேல் போல்மையிடப்பட்ட கண்ணானது தன்னோடு போர்செய்ய வருதலால் அந்தக் கண்ணின் பகையாகிய குவளைமலரைத் தான்படைத்துணையாகச் சேர்த்துவைத்திருக்கிறதன்மைபோலத்தோன்றக்குவளைமலரை அழகிய காதின்மேலணிந்தாள். ஒரு வண்ணமகள், துறவினரையடுத்து அவரது பெரியதவத்தை அழித்துவிடுங்களென்று மன்மதன் தங்களுக் கனுப்பின வோலைச் சுருள்களைக் கண்களானவை, யாராயினும் தம்மீது நிந்தைசொல்வாராயின் அவ்வோலைச் சுருள்களை அவர் கையிற்கொடுத்து அந்த மன்மதன்மேல் நிந்தை சொல்வதற்குத் தம்மருகே வைத்திருப்பதுபோலத் தோன்றும்படி பொன்னோலைச் சுருள்களைச் செவிகளிலே தரித்தாள். ஒரு வண்ணமகள், தன்னை யிகழ்கின்ற வெண்மையாகிய பற்களின்மேல் நிந்தை சேரும்படி, நிலைபெற்று அந்தப் பற்கள் நிகரற வாழ்கின்ற வீட்டு வாயின் முன்னே சென்று சாவேனென்று கழுத்திற் கயிறு கட்டிக்கொண்டு தொங்குகிற முறைமைபோலத் தோன்றும்படி முத்துக்கோத்த மூக்கணியை மூக்கில் அணிந்தாள். ஒரு சேடியானவள், கற்றையாயுள்ள கூந்தலானது நல்ல மலர்மாலையோடு பாரமாய்ப் பொருந்துதலாலே வருந்துமென்று, விளங்கா நின்ற பொற்பூண் சேர்த்ததற்கு நிகராக, வில்லைப்போலத் தோன்றுகிற வொளிபொருந்திய நெற்றியையும் அழகையுமுடைய மாயையின் கழுத்தில் பொன்னினாற் செய்யப்பட்ட

பரப்பாகிய பொன்வட்டத் தகட்டணியைச் சிரசில் அணிந்தாள்.

ஒரு பணிப்பெண்ணானவள், மாயையினது கைக ள்வந்து (கன்னியா ராசியிலிருக்கின்ற அஸ்த நட்சத் திரம்வந்து) ஒரு ஜாதியாயுள்ள மணிக் கற்களையுடைய கடகத்தினுள்ளே நிலைபெற்றது (கூட்டமாகிய முத்துக் கள்போன்ற கற்கடக ராசியிலே நிலைபெற்றிருக்கிறது) ஆச்சரியமென்று சொல்லவும் வளைகள் பலவற்றையும் காக்கவும் வில்லை நிகர்த்த நெற்றியையும் கரிய கண்க ளையும் பேதைமையையும் உடைய மாயையினது கைக ளிலே விளங்கும்படி பொன்னாலாகிய நல்லமணிக் கட கத்தை யணிந்தாள். மயில்போன்ற ஒரு வண்ணமகள், ஆராய்ந்து கொள்ளப்பட்ட இனிய அறுவகைச் சுவை களையுடைய வுணவுகளைத் தருதற்குச் செல்லுகின்ற கையோடு கூடிச்சென்று வாயினது தெள்ளிய அழ கைக் காணும்பொருட்டுச் சேர்ந்திருக்குமாறுபோல மாயையின் கையில் கற்கடகத்தின்முன்னே குற்றமில் லாத செம்பவளங்களைக் கோத்துக் கட்டினள். ஒரு சேடியானவள் சுபமான செய்கைகளையுடைய காளையரா து மனங்கள் நடத்தற்பொருட்டாகக் குங்குமப் பெ ருஞ்சேற்றினைக் குறித்து இடப்பட்ட கற்கள்போல் தோன்ற பெண்களுக்குத் திலகம்போல் சிறந்தவளா கிய அழகையுடைய மாயையின் ஸ்தனங்களின்மேல் ரத்னாபரணங்களை அணிந்து அலங்கரித்தாள். திருமக ள்போன்ற ஒரு சேடியானவள், பரக்கின்ற வெள்ளிய அலைகளையுடைய கருங்கடலாற் சூழப்பட்ட நிலத்தைத் தலைச்சுமையாகவுடைய ஆதிசேஷனது ஆயிரம் படங் களாலும் அரசிறை யிடப்பட்டது போல்வனவாகிய மேலாக விளங்குகின்ற கதிர்களை விரிக்கின்ற மணிக் ளாலாகிய மேகலாபரணத்தை மாயையினது நிதம்பத் தின்மேல் அணிந்து அலங்கரித்தாள். ஒருபணிப் பெண்ணானவள், உரல்போலும் அடிகளையும் சுளிப்பை

யுமுடைய யானையின் வரவைக்கண்டு வீதியில் சஞ்சரிக்கிறவர்கள் ஓட மணிகளை யிருபக்கத்திலும் கட்டுதல்போல, மிக்கதவத்தையுடைய முனிவர் தெரிந்து ஓடும்படிக்கு ஒள்ளிய நுதலையுடைய மாயைக்கு நல்ல தாமரைமலர்போன்ற அடிகளிலேசிலம்பணிந்து அலங்கரித்தாள். ஒருசேடியானவள், குடலையகத்துள்ள மெல்லியமலரை மணத்தினால் அறிந்து அதைச்சேர இராகங்களைப்பாடுகின்ற வண்டினங்களானவைசூழ்ந்துகொள்ளுதல்போல இளைஞராது கண்கள்பரப்பத்தேடுதற்கரிய பொருள்போல்பவளாகிய மாயைக்கு மிகுதியாகிய பரிமளமுள்ள சந்தனக் குழம்பைப் பெருமை பொருந்திய குவிந்த தனங்களின்மேல் பூசினாள். ஒரு வண்ணமகள், உனது வடிவமே உனக்கு உவமையாகும் அதல்லாமல் வேறொன்றில்லை என்று காண்பிப்பவள்போலக் கண்களால் காணும் வண்ணம் தெளிவாகிய ஒரு பெரிய கண்ணாடியை மலைகளெனப் படுகின்ற குவிமுலைகளையுடைய மாயைக்கு முன்னே தாங்கி நின்றாள். இவ்வாறாகப் பணிப் பெண்களால் அலங்கரிக்கப்பட்ட மாயை யானவள் வீரத்தன்மையுள்ள மன்மதனாலே வளைக்கப்படாத செங்கரும்பும், அவன் வில்லின் நாணின்மேல் தொடுக்கப்படாத மலரும், களங்கமில்லாத ஒளியையுடைய சந்திரனும், மேகத்தைச் சேராத மின்னற் கொடியும், கடலிலே தோன்றாத இனிய அமிர்தமும், வேரில்லாத பூங்கொடியும்போல விளங்கினாள். பணிப்பெண்கள் இவ்வாறு அலங்கரித்தலும், ஒரு மாது வந்து எதிரே நின்று, ஒப்பற்ற எம் இறைவியே! மதுகேசுவரனைப் பூசித்தற்கு வேண்டிய பொருள்கள் யாவும் ஆயத்தமா யிருக்கின்றன. இனி நீ பூசை செய்வதற்குப் போகலாமென்று சொன்னாள். அதைக் கேட்ட மாயையானவள் மயில் எழுந்தாற்போல எழ, அவளைச் சூழ்ந்திருந்த மாதர் கூட்டங்கள் குயிற் கூட்டங்கள் எழுந்தாற்போல எழுந்தார்கள். அவரது

பாதச் சிலம்போசைகள் தூக்கத்தை விட்டெழுந்தாற் போல எழுந்தன. ரத்நாபரணங்களின் காந்திகள் வெய்யிலெழுந்தாற்போல எழுந்தன. அப்பொழுது தண்டிகை சுமப்போர் பொன்னினுற் செய்யப்பட்ட தண்டிகையை எதிரே கொண்டுவந்து வைத்தார்கள். உடனே மாயையானவள் அந்தத் தண்டிகையில் ஏறினுள். ஏறுதலும், திருச்சின்னங்களும் தவள சங்கங்களும் பேரியும் மத்தளமும் சந்திரோதய காலத்தில் கடல் முழங்குதல்போல அவளுக்கெதிரே முழங்கின. கோபாலனுகிய கண்ணனுல் ஊதப்பட்ட புள்ளாங்குழலானது பல விடங்களிலுஞ் சிதறி நின்ற பசுக்களை ஒரிடத்திற் சேர்ப்பதாகும். இந்தப் புள்ளாங்குழலோ வெனின், அலங்கரிக்கப்பட்ட ஆபரணங்களை யுடைய மான்போன்ற மாதர்களைச் சேர்ப்பதாகும் என்று சொல்லும்படிக்கு புஷ்ப தநுசையுடைய மன்மதனுலே திரட்டி யெடுக்கப்பட்ட அமுதம் போல்பவளாகிய மாயைக்கு முன்னே சில மங்கையர் சென்று ஆறு முகங்களையுடைய முருகனும் மனங்குழையும்படி புள்ளாங்குழலை ஊதினுர்கள். விளங்காநின்ற மாயையாகிய அழகிய கரும்பினுந் தாழ்ந்தவரும் திருமகளினும் உயர்ந்தவருமாகிய பலமங்கையர் தன்னுள்ளே ஊற்றுயிருந் தொழுகாநின்ற தேனையுடைய மலரைவிரும்பிச் சூழ்கின்ற வண்டுகள்போலப் பிறருடைய கால்களால் நடக்கின்ற மாயையின் இருபுறத்தும் இடைவெளியில்லாமல் நெருங்கிச் சூழ்ந்தார்கள். மன்மதனுனவன் சந்திரனுகிய தன் குடையை இவளுக்குக் கொடுத்தானேவென்று சொல்லும்படிக்கு வெள்ளைக் குடையானது, அசைக்கப்பட்ட வாள்போலப் புரளாநின்ற களிப்பும் நெடுமையு முள்ள கண்களையுடைய மாயையின் பக்கத்திற் பொருந்த, நஞ்சுபோலுங் கண்களையுடைய மகளிர் பலர் இளங்கமுகின் பாளைபோன்ற வெண்சாமரங்களை இரண்டு பக்கங்களிலும் நின்று

வீசினார்கள். காமமாகிய கொடிய நெருப்பை மூட்டு தல்போல மணம்பொருந்திய மலர்களாற் செய்யப் பட்ட விசிறிகள் சில மாதரால் அசைக்கப்பட்டன. கருப்புவில்லையேந்திய நெடிய கையினையுடைய மன் மதனானவன் பொய்யம்புகளைச் சொரிந்து மாயையின் கருத்தை யறிதல்போல அழகினால் திருமகளை வென்ற மகளிர் சிலர் நெருங்கிப் பூமழை பொழிந்தார்கள். பாக்கு வெற்றிலையும் சந்தனமும் குங்குமமும் பச்சைக் கர்ப்பூரமும் மகிழ்ச்சியைத் தருகிற கஸ்தூரியும் வண்டு கள்மொய்த் தொலிக்கின்ற பூமாலையும் பெருமை பொருந்திய ஆபரணப் பெட்டியும் ஆகிய இவற்றைப் பலமாதர்கள் சுமந்துகொண்டு சென்றார்கள். தனங் களாகிய அழகிய குவிந்த தாமரை யரும்புகளும் கண் களாகிய கெண்டை மீன்களும் வாயாகிய ஆம்பல் மல ரும் அழகிய கைகளாகிய தாமரை மலர்களும் நாபியா கிய சுழிகளும் ஆகிய இவைகளையடுத்து சுபம் விளங்கு கிற அழகிய வீடுகளையுடைய வீதியானது மிகுதியாகிய நீர்பெருகா நின்ற யாற்றினை நிகர்த்திருந்தது. சந்தி ரன்போல ஒளிபொருந்திய நெற்றியையுடைய மாத ரது செம்பொற் சிலம்போசையும், வளைகளோடு மற் றைய ஆபரணங்களின் சிற்றொலியும், பரிமளம் வீசு கின்ற பூமாலைகளில் மொய்க்கிற வண்டுகளின் ஓசை யும் கூடிப் பல நீர்த்துளிகள் சேர்ந்து பெருகுதல் போலக் கடலுக்கு நிகராக மிக்கொலிக்கும். இவ் வாறு நெருங்கிய மாதர்சேனை சூழ்ந்து வாராநிற்க, அழகிய மயில்போல்பவளாகிய மாயையானவள் வெற் றியைக்கொண்டு அழகாகப் பிரகாசிக்கிற மழுவை யேந்திய பரமசிவன் தனதுநெற்றிக் கண்ணினால் மன் மதனைக் கொன்றதற்குக் காரணம் யாதென்று அவ ரைக் கேட்போமென மனவலி கொண்டுபோகின்ற செயல்போல அந்தத் தெருவிற் சென்றாள். அப்போது அரிகளையும் களிப்பையும் குளிர்ச்சியையு முடைய

கண்களோடு கூடிய மாயையின் பக்கங்களில் சூழ்ந்து வருகின்ற மகளிரது அழகைப் பார்த்தவளவில், நெருப்புப்போன்ற கண்களையுடைய ஆண்சிங்கத்தை நிகர்த்த ஆடவர்கள் யானையால் விழுங்கி யுமிழப்பட்ட விளாம் பழத்தை யொத்திருந்தார்கள். அந்த ஆடவருள்ளே சிலர் நன்னடைக்குக் காரணமாகிய நமது பேரறிவை யெல்லாம் இந்த மாதரது இடை யொருசிறிதும், ஒளி பொருந்திய நெற்றி யொருசிறிதும், வாள்போன்ற கண்க ளொருசிறிதும், பவளம்போன்ற வாயொருசிறிதும், இணைக்குடம்போன்ற தனங்களொருசிறிதும் இவ்விடத்திற் கொள்ளை கொள்ளுதலாலே அவை ஒழிந்து போயினவே, இனி யென்செய்வோ மென்பார்கள். வேறு சில ஆடவர் மனிதர்க்குள்ள அறிவு அவர் சேர்ந்த இனத்தினது இயல்பாகும் என்று சொல்லப்படுவது உண்மையே; மனவருத்தத்தை யுண்டாக்குகிற காமமயக்கத்தை நீக்குகின்ற விபூதியானது அனிச்சப் பூவினும் மெல்லிய அடியையுடைய மாதரது நெற்றியிற் சேர்தலும் காமமயக்கத்தை யுண்டாக்குதலால் எம்முடம்புகள் வியர்த்து வேகின்றன என்று சொல்லுவார்கள். வேறு சில ஆடவர் உமாதேவியைத் தன்னுடைய பாகத்திலே யுடைய அருளுருவினராகிய மதுகேசன் முன்னொரு காலத்திலே தேவர் முதலியோர் தம்மை நஞ்சுவருத்துதலா லுண்டாகிய துன்பத்தைச் சொல்லுதலும் அவர்க்கிரங்கி அந்தத் துன்பத்தை நீக்கிக் காத்தவனாதலால் மாயையோடு செல்லுகின்ற மங்கையரது கண்களாகிய நஞ்சு செய்யுந் துன்பத்தையும் நாம் அவனோடு சொல்லிக்கொள்வோம் என்று சொல்வார்கள். வேறு சில ஆடவர் இந்த மாதர் கூட்டத்தில் அழகிற் சிறந்தவள் எவளென்று தம்மை வினவுவோர்க்கு விடையாக, மா வாழை பலா என்னு முக்கனிகளுள்ளே எந்தக் கனி மிகுந்த சுவையுள்ளது நீங்கள் சொல்லுங்க ளென்பார்கள்.

வேறு சில ஆடவர் கரும்பினு மிக்க இன்பம் செய்கிற சிவந்த கயல்போலுங் கண்களையுடைய மாதரது நமக்குப் பயன்படாத தனங்களாகிய இளங் குரும்பைகளையும் அதரமாகிய கோவைக்கனியையும் விரும்பி உலகினர் முன் வீணாக மனம் வருந்துதற்குக் காரணம் யாவரும் நகைத்தற்குரிய தமது அறியாமையேயாகுமென்பார்கள். விஷம்பொருந்திய மதர்த்தகண்களையும், பரிமளம்பொருந்திய மலர்களால் அலங்கரிக்கப்பெற்ற கூந்தலையும், துவளாநின்ற நூலிழைபோன்ற இடையையும், பிறைபோன்ற நெற்றியையு முடைய பொற்கொடிபோல்பவராகிய மாதர், குடங்கள் நாணமடைதற்குரிய இளமையும் திரட்சியுமுள்ள தமது கொங்கைகளை மூடிக்கொண்டாற்போல உடம்பு முழுதும் மூடிக்கொண்டால் நாம் பிழைக்கலாம் என்பார்கள். இவ்விதமாக இளைஞர் யாவரும் மயங்கா நிற்க, கோவைக்கனிபோன்ற அழகிய அதரத்தையுடைய மங்கையரோடும் முல்லை மலர்மாலையை யணிந்த கூந்தலையுடைய மாயையென்பவள் அந்த மதுகேசர் கோயிலினருகே போயினாள். இப்படிப் போன மாயையானவள் தண்டிகையினின்றிறங்கித் தன் தலையால் தாங்கப்பட்ட குவிந்த் கையுடனே கோபுரவாயிலுட் புகுந்து நாககங்கணத்தைத் திருக்கரத்திலணிந்த மதுகேசரது சந்நிதியிற் சென்றாள். சென்று பூசைக்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் ஏவற் பெண்கள் அவ்விடத்தில் பக்கத்தில் நிறைத்துக்கொண்டு கொடுத்துக்கொண்டிருக்க, நெற்றிக்கண்ணையுடைய மதுகேசருக்கு அன்பு பூண்டவளாய்ப் பூசைசெய்யத் தொடங்கினாள்.

பூசைக்கு முதலிலே செய்யவேண்டிய சடங்குகளையெல்லாம் விதிப்படிசெய்து, அருக்கிய முதலானவைகளைக்கொண்டு, கடவுளணிந்திருந்த மலர் முதலானவற்றைக்களைந்து, மந்திரஞ்சொல்லித் திருமஞ்சனஞ்

செய்யத்தொடங்கி, எண்ணெயும் பஞ்சகவ்வியமும் பஞ்சாமிர்தமும் நெய்யும் பாலும் தயிரும் தேனும் கருப்பஞ்சாறும் கனிரசமும் தெங்கிள நீரும் பரிமள முள்ள சந்தனக் குழம்பும் வேதாகம விதிப்படியமை ந்த ஸ்தபந கலச நீரும் ஆகிய இவையெல்லாவற்று லும் ஒன்றன்பின்னொன்று முறையே மதுகேசருக்கு அபிஷேகஞ்செய்து, வளையலையணிந்த மெல்லிய கைக ளையும், வேல்போலும் விழிகளையும் உடைய மாயையா னவள் மதுகேசருடைய திருமேனியின் மீது திரு நீறு இயற்கையாய்ப் பூத்திருந்தும் மங்கள கரமாகிய அவர் திருமேனி முழுதும் சந்தநத் திரளை நிறைய அப்பி, ஒரு முத்துச்சிப்பியினால் பெறப்பட்டதென்று சொல்லும்படி கோவத்தையுடைய வெள்ளிய இடப வாகநராகிய மதுகேசரது திருமுடிமேல் முத் தாலாகிய அக்ஷதையுமிட்டாள். பால சந்திரன் தவழ் கின்ற சடைமுடியையுடைய எமது கடவுளையடுத்துச் சர்ப்பமென்னு மயக்கமுண்டாக வாசனையுள்ள மெல் லிய பூமாலைகள் பலவற்றையுமணிந்து, கூரியகொம்பு களையும், தொங்குகின்ற வாயையும், கோபத்தையும், உரல்போன்ற அடிகளையுமுடைய யானையின் தோலா கிய போர்வையைத்தாங்கிய திருமேனியழகு பொரு ந்த நுண்ணிழையாலாகிய ஆடையைத்தரித்து, இறை வனது எலும்பாகிய ஆபரணங்களெல்லாம் நாணும் படி விளங்குகின்ற ரத்நாபரணங்கள் பலவற்றையும் எடுத்தணிந்தாள். நறும்புகை கமழ்கின்ற நித்திய கலியாணியென்னும் பெயரையுடைய உமைமணாளனா கிய மதுகேசனுக்குக் கஸ்தூரியணிந்து, ஊனம்பெற் றுக் கடிதலில்லாத கறிகள் பொருந்திய வுண்டிகளைப் பிச்சையுண்டியன்றி மற்றொருண்டியில்லாத கடவுளு க்கு நிவேதித்து, வண்டுகள் மொய்த்துக் குடியிருந்து ஊதுகின்ற மணமுள்ள மல்லிகையணிந்த கூந்தலையுடைய மாயையானவள் மகிழ்ந்து தாம்பூலமுங் கொடுத்தாள்.

பரிமளதூபமும் செழுமையாகிய தீபமும் மெல்லிய விசிறியும் வெண்சாமரமும் கண்ணாடியும் விதிப்படி நெடிய கடல்போல வாத்திய முழங்க முன்னின்று சமர்ப்பித்து, கடவுளை மாயையானவள் இவ்வாறு பூசைசெய்து துதித்து மிகுந்த அன்போடு வேதத்தால் சிறப்பித்துச் சொல்லப்படுகிற ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையும் உச்சரித்து வலம் வந்து எதிரே நின்று வணங்கிப் பிறகு அன்பினால் மனமுருகிக் கண்ணீரால் எழுதியிருந்த மை கரைந்திருக்க,பொன்போன்ற திருமேனியிலுள்ள ரோமங்கள் சிலிர்க்க, வேர்வையால் நெற்றித்திலகமழிந்து, மின்போன்ற நெடியசடையையும் பொன்மலைபோலுந் திருமேனியையும் உடைய கடவுளது சிவாநந்த வெள்ளத்தில் மூழ்கி, அந்த ஆநந்தத்தினால் கூத்தாடுவாள்போல வந்து நடநசபையை அடைந்தாள். கையால் அலங்கரிக்கக்கற்ற பணிப்பெண்கள் நடநசபையினடுவே நடனஞ் செய்தற்கேற்ப ஆடையுடுத்து, கோங்கரும்பு தாமரையரும்பு தென்னங்குரும்பை பொன்னங்கிரி மன்மதனது கிரீடம் பொற்குடம் பொற் சிமிழ் சிற்றுலைக் கொம்பு சக்ரவாகம் பொற் பந்து சூதாடு கருவி கைத்தாளம் நீர்க்குமிழி என்பவற்றையெல்லாம் வென்றுகொண்ட தனங்களைக் கச்சினாலிறுக்கித் தவங்களையெல்லாம் கொள்ளையிடுகிற கரும்பெருங்கண்களை யுடையவளாகிய மாயையின் சிற்றடிகளிலே வண்டுகளொலிக்கிற மல்லிகை மலர்போன்ற சிறுசதங்கைக்கோவைகளை ஒலிக்கும்படி கட்டினார்கள். மாயையின் தனங்களுக்குச் சமானமாவேனென்று என்னெதிரே தானும் வந்ததென்று நினைத்துப் பொறுமையால் வலக்கைத்தாளம் போய் இடக்கைத் தாளத்தைத் தாக்குதல் போலப் புடைத்து ஒலிசெய்யா நிற்கவும், வாயினாற் சொல்லப்படுகிற சொற்கள்போல மத்தளமானது செங்கைகளால் வார்த்தை சொல்லா நிற்கவும், விரும்

பப்பட்ட கலைமகள் நாணும்படி, அழகிய மங்கையர் வீணைகொண்டு இசை பாடா நிற்கவும், பூங்கொடி போல்பவளாகிய மாயையானவள் எனது ஒரு கை யோடு நீர் சண்டை செய்ய வருவீராகவென்று நிற் பவள்போல ஒரு கையை இடையிற் பொருந்த வைத்து, ஒருகையை நீட்டி, மதுகேசர் சந்நிதியில் நின்று கருப்பு வில்லையுடைய மன்மதனை இங்கே அஞ் சாமல் வாவென்று அழைப்பதுபோலக் காலில் சதங் கை ஒலியாநிற்க, பொன்னாற்செய்யப்பட்டவொரு பது மையானது நடனஞ் செய்தல்போல நடனஞ் செய்யத் தொடங்கினாள். மத்தளவோசையும் தாளவோசையும் பாடுகிற இராகத்தி னோசையும் ஆகிய இவையெல்லாம் அழகியமலர்போல மெல்லிய அடிகளின் வழித்தாகிய அடைவுக்கு ஒத்து நிற்கவும், இரண்டு கட்பார்வைக ளும் பல வளையலை யணிந்த கைகளின் வழியே நடவா நிற்கவும், பெண்ணமுதம்போல்பவளாகிய மாயையான வள் நடனஞ் செய்தாள். வாயினாற் சொல்லப்பட்ட சொற்களின் பொருளைத் தாமரை மலர்போலுங்கைக ளானவை சொல்லாநிற்க, மேலாயுயர்ந்த ஆகாயத்தின் கண்ணே செல்லுகின்ற மெல்லிய பறவைகளின் ஓசை யெல்லாம் பாவுகிற வொளியையுடைய செம்பஞ்சூ ஊட்டப்பெற்ற அடிகளிலிருந்துண்டாக மிதித்துப் பேயோடாடுவோனாகிய மதுகேசன் சந்நிதியில் அவ னும் மயங்கும்படி நடனஞ்செய்தாள். மாயையானவள் இவ்வாறு நடனஞ்செய்யா நிற்கக்கண்ட பிரமதேவன் பெருமை பொருந்திய கலைமகளை யிகழ்ந்து உமிழ்ந் தான். திருமால் திருமகளை யாவருஞ் சீயென்று சொல் லும்படி வெறுத்துக்கொண்டான். இந்திரன் அரிய ளாகிய இந்திராணியை மறந்தேபோயினான். கடவுளர் செய்கையே இப்படியாயின் மாநுடர் பட்டபாடுகளை என்னென்று சொல்லுவோம்! காளையர்பொன்னினாலா கிய மதிலின்கண் பொருந்திய துவாரங்களுள்முகத்தை

ணிந்தும், செருக்கி முன்னேநின்றவரது தோளின் மேலேறியும், மின்னற்கொடிபோல நடனஞ்செய்கிற மாயையின் இடையாகிய ஆகாயத்தைக்காணும்பொரு ட்டுத் துன்பப்படுவார்கள். விஷயங்களைப் பற்றுகின்ற மனமானது ஓடி இரண்டு கண் பார்வையினுமடைந்து மற்றவிஷயங்களை மறந்து நடிக்கின்ற மாயையை அடையாநிற்க, உயர்ந்த பொன்மதிலின் உறுப்பின் கண்ணே தங்கிய பதுமைகள்போல இளைஞர்கள் அசைவற்று நின்றார்கள். இளங்கொடிபோலும் இடையையுடைய மாயையானவள் இத்தன்மையாக நடனஞ் செய்யும்போது, களவின் கனிபோன்ற கரிய கண் டத்தையுடைய கடவுளைப் பூசித்துக் குளிர்ந்த மனத் தையுடைய வேதியனானவன் மகிழ்ந்து மதுகேசன ணிந்த வளம்பொருந்திய சந்தனத்தைப் பூமாலையோடு கொடுத்தான். அந்த மதுகேசனது நிர்மாலியத்தை மாயையானவள் வணங்கிப் பிரசாதமாக ஏறறுகொ ண்டு, மகளிரோடு நாட்டிய மண்டபத்தில் நுண்ணிய நூலிழைபோன்ற இடையானது மிகவும் வருந்துமெ ன்று இரைந்து பிணக்கமடைந்த சதங்கையினோசை யானது அழுதபிள்ளையினோசை யடங்குதல்போல அடங்கும்படி யிருந்தாள். அப்போது, மையெழுதப் பட்ட விசாலமாகிய நெடுங்கண்களையுடைய மாயையா னவள் பக்தியோடு பூசை செய்துவருவதை, அழிவற்ற வனும் உலகமுழுதும் நிறைந்தவனும் தோற்றமில்லா தவனும் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கின வனும் ஆகிய அருளையுடைய முதன்மையாகிய அல்ல மன் என்னும் பெயரையுடையவன் அறிந்தான்.

மாயைபூசைகதி
முற்றிற்று.

# ஐந்தாவது

# பிரபுதேவர் வந்தகதி.



எப்போதும் அடியார் வேண்டும் எண்ணங்களை யெல்லாம் நிறைவேற்றுகிற பேரருளையுடைய அல்லமதேவன் தன்னியல்பினின்றும் வேறுபட்டு ஒரு மனிதனாகி வருந்துகின்ற மயக்கத்தையுடைய மனத்தோடு பூசைசெய்த மாயையினிடத்துப் பொருந்துவோன் போலச் செய்த செய்தியை விரித்துச்சொல்லுவோம். உயிர்கள் தம்மால் அனுபவிக்கப்படுகின்ற போகத்தையும் முத்தியையும் கொடுக்க வல்லவன் தானே யாமென்று யாவரும் சொல்லுதலாலே அல்லமதேவன் அல்லமதேவனென்னும் உண்மையானபெயரும் மறையும்படி முத்தளிகன் என்னும் வேறொரு பெயரையடைந்து, அந்த மாயைக்குக்காமிய பூசைக்குத் தக்க பயனைத்தான் உறுதியாக அருளிச்செய்ய நினைத்து, பரமசிவன்தனது அழகிய நெற்றியின் கண்ணுள்ள வெப்பமாகிய நெருப்புக் கண்ணினால் நீறுபட்ட மன்மதனது தொழிலைச் செய்தற்பொருட்டு அவனது வடிவத்தைத் தான் கொண்டதுபோலவும், அழகு மிருந்து ஒழுகுதற்கு இடமாகிய ஆறுமுகங்களுள்ளும் சிறந்த ஒரு முகத்தோடு இளமையும் அழகும் தன்னிடத்தே பொருந்தத் தோற்றிய முருகனைப்போலவும், விளங்கா நின்ற சடையையுடைய முனிவரது மகளிர் மயங்கி வருந்துதற்பொருட்டுக் கொண்ட பிக்ஷாடன வடிவம் அழகு செய்கின்ற இந்த வடிவத்தைக் கொள்ளுதற்கு முன்னே பழகிவிட்டதுபோலும் குவிந்த முலைகளையுடைய மகளிரது உயிரைக் கொள்ளை கொள்ளுகின்ற வடிவம்போலவம் பூமியின்கண் வந்த சூரியன்போலமிக்க ஒளியையுடைய ஒரு வடிவங்கொண்டான்.

நடுவிலுள்ள களங்கமானது ஓரத்திற் பொருந்த விழுந்து சூழ்ந்த ஒருசந்திரன் உளதாயின் அது வளம் பொருந்திய மயிரொழுங்கினை யுடைய அல்லமனது ஒளியையுடைய முகத்தை யொக்கும். இளமை பொருந்திய கருந்தாமரை மலர் ஒன்று உளதாயின் அது அல்லமனது ஒளி செய்கின்ற நாபியின் மேல்சென்று மார்பினிடத்தே தோன்றுகின்ற மயிர்ச் செறிவை நிகர்க்கும். அறுபத்துநாலு கலைகளின் எல்லையை அறிந்தவரது கருத்திற் கெட்டாததா யிருந்தும் எனது புல்லிய தலையின் கண்ணே வரத்தக்க கமலம்போல் அழகிய திருவடிகளையுடைய அல்லமன் விலையின் அளவு அறியப்படாத பீதாம்பரத்தை அரையில் விளங்கும்படி விரித்துடுத்து, பொதியமலையிலுண்டாகிய புதிய சந்தனத்தையும் கஸ்தூரியையும் காததூரம்வரைக்கும் வாசனை வீசும்படி திருமேனி முழுதும் நிறையப் பூசி, தளிர்த்த குளிர்ந்த சோலையின் தேமாவினது பெரிய கிளையில் வாசஞ்செய்கின்ற குயிலின் முகத்தைப்போலக் கார்கால மேகத்தை வருத்துகின்ற சுருண்ட தலைமயிரை முடியாகக்கட்டி, வண்டுகளால் தொடரப்பட்ட பூமாலையைச் சூடி, அந்த மாலையானது பார்க்கின்றவர்களுக் கெல்லாம் வெளிப்படையான சொல்லிலுள்ள பொருள்போலத் தோன்றும்படி மெல்லிய தலைச்சாத்தணிந்து, கழுத்தினிடத்தி லிருந்தால் தன் சொரூபத்தைத் தெரிந்துகொள்வார்களென்று எடுத்து அதனை நெற்றியில் வைத்துக்கொண்ட செய்கைபோலக் கஸ்தூரிப் பொட்டிட்டு, ஒளியையுடைய ஒப்பற்ற சந்திரனானவன் தன்னிரு புறத்திலும் உரோகணியோடு அவளுக்கு நிகராகிய மற்றொரு நட்சத்திரமாகிய பெண்ணைக்கூட்டிக் காப்பாற்றிப் பொருந்தவைத்திருத்தல்போல அழகியரத்நகுண்டலத்தைச் செவிகளில் தரித்து, விலையில்லாத வெள்ளிய முத்துமாலையும் வீரசங்கிலியும் வாகுவலய

மும் விளங்காநின்ற செம்மணி யழுத்திய பீதாம்பரமும் ஆகிய இவைமுதலான எல்லா ஆபரணங்களையும் ஒள்ளிய அழகு என்கிற சிவந்த நெருப்பிற் பெய்கிற நல்ல நெய்போலப் பிரமையில்லாத நமது குருவாகிய அல்லமதேவர் ஒளிபொருந்திய அவயவங்கள் எல்லாவற்றிலும் தரித்து, தேவேந்திரனுடைய செல்வத்தை யனுபவித்தற்கேற்ற இலக்கண முழுதும் வாய்த்த அழகிய இந்த ஆடவனுக்கு ஆ! ஆ! இந்த மத்தளத்தைச் சுமப்பதற்கு ஏதுவாக வந்திருக்கிற ஊழ் யாதோ என்று நினைத்து மனிதர் திகைக்கும்படி பழிப்பற்ற முதுகினிடத்து மத்தளமொன்று தோன்றச் சுமந்து சென்று, அருளையுடைய மதுகேசரது சந்நிதியில் ஆகாசத்தில் சஞ்சரிக்கின்ற சூரிய சந்திரர்கள் சுற்றிவரப்பட்ட மேருமலைபோன்ற கொடிகள்கட்டிவைத்திருக்கின்ற நெடிய பொற்கோபுரவாயிலுக்கு எதிரே போய்நின்று, சபையினிடத்தே செய்யப்பட்டகூத்தாட்டையுடையவனாகியநடேசனோஇந்தமத்தளத்தொழிலைக்கைக்கொண்டானென்றுயாவரும்மனமயங்கும்படி எம்மிறைவனாகிய அல்லமதேவன் மத்தளத்தைக் கையாலெறிந்து முழக்கினான். உரல்களை யொன்றன்மேலொன்று அசையாமல் அடுக்கி உறியிலுள்ள நெய்யையெடுத்துஉண்டவனாகிய கண்ணனது கண்டமசைந்து ஊதப்பட்ட ஒப்பற்ற புள்ளாங்குழலிசைபோன்ற சொற்களையுடைய மாதர் மயங்கும்படி, மீன்குத்திப் பறவையின் அசைந்தாடுகின்ற சிறகைப்போல விரல் அசைந்து அறைதலன்றித் தன் சரீரம் அசையாமல் நின்றான். பாசுத்தமுள்ள சச்சிதானந்த சொரூபமாகிய சூரியன் தன் கைகளால் முழக்கப்படுகின்ற மத்தளமாகிய மேகத்தினது ஓசையை நடனஞ்செய்துகொண்டிருக்கிற மாயையாகிய மயில்கேட்டு, அம்மா! இந்தப் பூமியிலுள்ள மனிதர் கையினால் எமது செவியிற் கேட்கப்படாதிருந்த புதிய ஓசையிதுவென்று மனதில் ஆச்சரி

யமடைந்து இதனைச்சொல்லுவாள். உயர்வும் இளமையுமுள்ள தனங்களையுடைய பெண்களே! இப்படிப்பட்ட மத்தளவோசையை யாம் இதுவரையிலும் காதினால் கேட்டிலேம். இப்படியொன்று உண்டென்று சொல்லவும் கேட்டிலேம். உலகத்தாரெல்லாரும் விரும்பிநின்று கேட்டு ஆச்சரியப்படத் தகுந்த இந்த வித்தையைக்கற்றறிந்து காட்டிய அவன் யார்? நீங்கள் போய்ப்பார்ப்பீராகவென்று மாயையானவள் சொல்லவும், அதுகேட்ட மாதர்கள் விரைந்து சென்று மத்தளமுழக்கிக்கொண்டு நின்ற ஒளியுருவாகிய அல்லமதேவரை முற்பிறப்பிலே தாங்கள் செய்த நல்ல தவப்பயனால் தமது கண்களாற் கண்டு, செவிகளோடு போர்செய்து மீளுங் கயல் போலுங்கண்களையும் செவந்த அதரத்தையுமுடைய மாயையினிடத்திற்கு வந்து இதைச் சொல்லத்தொடங்கினார்கள். எப்படியென்றால், எம்மிறைவியே! கற்கப்பட்ட தனது மத்தளவித்தைபோலவே அவனது அழகையும் யாம்வேறெங்கும் கண்டிலேம்; விற்போரிற்சிறந்தவனாகிய உருவமில்லாத மன்மதனே உருவங்கொண்டு வந்தாற்போல ஒருவன் வந்திருக்கிறானென்று சொல்லக்கேட்ட மாயையானவள் அவனையழைத்துவாருங்களென்றாள். அந்த மாதர்களும் அவ்வாறே சென்று அல்லமதேவரையழைத்துவந்து மாயையினெதிரே விட்டார்கள். அப்படி வந்து நின்ற அல்லமதேவரைக் கண்டவுடனே மாயையானவள் அந்த அல்லமதேவரால் தனக்குண்டாகிய காமவேட்கை மயமாகி, பொன்னினாற் செய்யப்பட்ட ஒரு பதுமைபோல அசைவற்றிருந்தாள். அப்பொழுது கரும்பு வில்லையுடைய மன்மதன் அளவில்லாத பாணங்களை அந்த மாயையின்மேல் எய்து கைசலித்து நின்றான். மாயையானவள் யாவரையும் மயக்குவாளென்பதுபோய்த் தானே மயங்கி நின்றாளென்று கண்டோர் யாவருஞ் சொல்லும்படி

அவள் நிற்க, அவளருகே நின்ற மாதர்கள் அல்லம தேவரை நோக்கி, வீரத்தன்மையுள்ள ஒப்பற்ற மன்மதன்போல் அழகுள்ளவனே! உன் பேர்யாது, நீ வாழ்வது எந்த வூர், எந்தத்தேசம், இவையாவும் எங்களுக்குத் தெரியும்படிக்குச் சொல்லக் கடவை யென்றுகேட்க, அவர் கேட்டகேள்விக்கு உத்தரமாக அல்லமதேவர் சொல்லுகின்றார். மேகம் போலுங் கூந் தலையுடைய பெண்களே, எனது தேசமோ அங்கிபதே சம் (மேலான முத்தியுலகம்), சபதத்தால் வல்லவ ரென்று வந்தவர்களை அவமானப்படுத்தி அவரது வல்ல மைகள் நிலையல்லவென்று வெளியிடுகின்ற என்பேர் அல்லமன் என்று சொல்லுவார்கள். என்னிடத்து அன்பு செய்பவரிடத்தில் நான் எந்நாளுஞ் சேர்ந்திருப் பேன் என்று சொன்னார். அதுகேட்ட அந்த மாதர் கள் அல்லமதேவரை நோக்கி, ஐயனே! நீவேறொரிடத் திற் போகாமல் எமது இறைவியாகிய மாயையினிடத் தில் வித்தை கற்றுத் தேர்ந்தவரோடு கூடிச் செல்வத் தோடு இவ்விடத்திற்றனே இருக்கக்கடவாயென்று அல்லமதேவர் சம்மதிக்கும்படி இனிய சொற்களால் பிரார்த்தித்தார்கள். இதைக்கண்டமாயையானவள்நாம் சொல்லவேண்டிய சொற்களையெல்லாம் இந்த மாதர் சொன்னது மதுகைநாதனை நாம்பூசித்த பூசையின்பய னென்று மனமகிழ்ந்து ஒன்றும்பேசாமல் மௌனமாயி ருந்தாள். அப்போது அவளருகே நின்று அடைப்பை ஏந்துகிற போகியென்பவள் மோகினியின் மகளாகிய மாயையின் கையில் வெற்றிலைச் சுருளைக் கொடுத்து அதனை அந்த மாயையைக்கொண்டே அல்லமதேவருக் குக் கொடுப்பித்து இன்னும் அவர் மனமகிழ்தற்கேது வாகியவரிசைகளும் செய்தாள். அப்போது, தன் திருவ டித்தாமரைகளைப் புகழ்கின்ற அன்பராலே விரும்பப் படுகிற பொருள்களெல்லாவற்றையுங் கொடுக்கின்ற கருணாநிதியாகிய அல்லமதேவன் தான்கொண்ட

கோலத்துக்கேற்க நடிப்பவனாதலால், மாயையால் கொடுக்கப்பட்ட தாம்பூலத்தைத் தாழ்ந்த சாதியான் போலக் கையினால் ஏற்றுக்கொண்டான். பிறகு இளமையாகிய பூங்கொடிபோன்ற மாயையானவள் இடபக்கொடியையுடைய மதுகேசனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, மன்மதபாணங்கள் தன் மார்பிற்பட்டுருவும் துன்பத்தால் மனமயர்ந்து பொற்சிவிகையிலேறித் தோழியர் சூழ்ந்துவரச் சென்று, தன்தந்தையாகிய மமகாரராஜனிடத்தை யடைந்து அல்லமதேவரது அழகு முதலியவற்றைச் சொல்லித் தனது அந்தப்புரத்தையடைந்திருந்தாள். பல வலம்புரிச்சங்குகள்சூழ அவற்றினடுவே வீற்றிருக்கிற சலஞ்சலம் என்னும் சிறந்த சங்குபோலப் பொன்னினாலும் மணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட உபரிகையில் பல அழகிய மாதர் சூழ மாயையானவள் மலரணை மீதிருந்து கொண்டு, எம்பிறைவராகிய அல்லமரோடு அவரது மத்தளவித்தையின் குணத்தை ஆராய்ச்சிசெய்பவள் போலப் பேசவிரும்பினாள். அலங்கரிக்கப்பட்ட மலரையுடைய நெடியகூந்தலையும்பொன்வளையலையுமுடைய மாயைக்கு நினைவுமுழுதும் அந்த அல்லமரது சையோகத்தின்மேலது. நெடிய கண்களின் பார்வை மன்மதன் போல்பவனாகிய அல்லமரது அழகின்மேலது. வாய் பயனில்சொல்லின் மேலது. இப்படியிருக்கைபாலன்றோ மனமொழி மெய்கள் ஒருமைப்பட்ட மாதர் உலகத்திற் கிடைப்பது அருமையென்று சொல்லுவர் பெரியோர்! குற்றமற்ற கரும்பினின்றும் அதனது இனியசாற்றைக் கொள்ளாது அதன் கோதைக் கொள்வதுபோலவும், கஸ்தூரி மிருகத்தினிடத்தில் உண்டாகின்ற கஸ்தூரியைவிட்டு அதன் மலத்தைக்கொள்வது போலவும் மாயையானவள் அல்லமரால் பேரின்பமாகிய முத்தியடைவதைவிட்டு, அற்பமாகிய சிற்றின்பத்தை விரும்பினாள். அப்பொழுது மன்மதனானவன்

ஒன்றிரண்டொழிய தன்னிடத்திலுள்ள மற்றைய பா ணங்களையெல்லாம் இவள்மீது இறைக்க, அதற்குஇவள் ஆற்றுதவளாய் மின்னலானது உருக்கொண்டு வந்தாற் போன்ற அல்லமரது திருமேனியின்மேல் விழ்வாள், தன்னருகே சூழ்ந்து நிற்கிற மங்கையர் பார்க்கிறார்க ளே என்று நாணி எழுந்து நிற்பாள். இவ்வாறு மா யையானவள் காமத்தீயினால் சருகாயுலர்ந்து வெப்பம் பொறுதவளாகித் தன்னுயிர்போன்ற சிலமாதர் உடன் வர எழுந்து உள்ளே சென்று, மலரையணிந்த கூந்தல் சோரவும், அழகிய தனங்களின் மேலுள்ள ஆடை வில கவும் புஷ்பசயனத்தின்மேல் வாயால் பெருமூச்சு விட் டுக்கொண்டு விழ்ந்தாள். அவ்வாறு விழ்ந்தவள் தன் னைச் சூழ்ந்து நிற்கிற தோழியரைநோக்கி, அல்லமரது திருநாமத்தை உச்சரிக்கவேண்டுமென்கிற ஆசையினு லும் தோழியர்க்குத் தன் கருத்தை அறிவிக்கவேண்டு மென்னும் விருப்பத்தாலும் அல்லமர் வாழ்வதற்குரிய வீடியாது என்று வினவினாள். இறங்குதுறையிற்றானே நீச்சுண்டாயினாற்போல்மாயையிடத்துக்காமவேட்கை யானது பிறந்தபொழுதே உயிர் எவ்வளவோ அவ்வள வாய் நின்றதென்னுந் தன்மையை அந்தத் தோழியர் அறிந்து, நீன் கருத்தை எமக்கு அறிவிப்பையாயின் அல்லமர்க்குச் சிறந்த மனையொன்று அமைத்துத் தரு வோம் என்று சொல்லி, அவளைப் பார்த்து, அழ கிய மணிகளாலாகிய மேகலையால் அலங்கரிக்கப்பட்ட இடையையும், வடித்த வேலாயுதத்தையும் மருட்டு கின்ற கண்களையும் உடையவளே! காமத்தின் முளையா னது உன்னிடத்து முளைத்ததென்று எங்கள் கருத்து க்குப் புலப்பட்டது; யாமும் உனது மனமும் வேறல் லேம், ஒருபொருளேயாவோம்; உன் மனத்திலே மறைத்து வைத்திருப்பதை நாணுமல் எமக்குச்சொல் லவேண்டுமென்றார்கள். அதுகேட்ட மாயையானவள் தன் கன்னித்தன்மை கெடும் என்னும் நாணத்தையும்,

உலகத்தைக்காக்கின்ற ஒரு வேந்தன் மகளென்று யாவராலும் சொல்லப்படுகிற தன்பெருமையையும், மத்தளிகனைப் புணர்ந்தாள் என்று பலரும் பழிப்பதாகிய பழிச்சொல்லையும் தன் மனத்தில் ஆலோசித்துக் கொண்டு அவர்களுக்கு மறுமொழியொன்றுஞ் சொல்லாமல் மௌனமாயிருந்தாள். இப்படி இவள் இருத்தலும், இவளது ஏவற்பெண்கள் பலருள்ளும் சிறந்தவளாகிய சகலை யென்னும் மாது நம் தலைவியானவள் சொல்லும் செயலும் ஒழிந்து சும்மா விருத்தற்குக் காரணம் யாது? அவட்கு அந்தரங்கப் பிரியையாயிருக்கிற நீ அறிந்திருந்தால் சொல்லக்கடவையென்று அவளைவிட்டு நீங்காதிருக்கிற விலாசி யென்பவளை வினவினள். அதற்கு விலாசி யென்பவள் சகலையை நோக்கி இனி யான் உங்களுக்கு மறைக்க வொண்ணாது. இன்று மத்தளிகனாய் வந்த அல்லமனது பேரழகாகிய நறவையுண்டு ஆற்றாதவளாய் நம்மிறைவியாகிய மாயையானவள் அறிவுகலங்கினாள் என்று சொல்ல, மாயையானவள் அதற்குச்சம்மதித்துக் கோபங்கொள்ளாமல் முகம் கவிழ்ந்து புன்னகை கொண்டிருந்தாள். இவ்வாறு மாயை புன்னகைகொண்டு சும்மா இருத்தலை நோக்கி, இவள் அல்லமன்மீது விருப்பமுடையவளென்று தோழியர் அறிந்துகொண்டு, இனி இவளை மயக்கின அல்லமன் கருத்தையும் அறியவேண்டுமென்று சொல்லக்கேட்ட மதமானி யென்பவள், யான் அந்த அல்லமனது உட்கருத்தை அறிந்து வருவேனென்று அல்லமனிடத்திற்குச் சென்றாள். அப்பொழுது அல்லமதேவன், மதமானி யென்பவள் தன்னிடத்திற்கு வருகிறதற்குக்காரணமின்னதென்று முன்னேயறிந்து கொண்டு, அவள் ஒரு சொல்லைச் சொல்லுதற்கு முன்பே அவளை நோக்கி, நான் வந்து தங்கியிருக்குமிடத்திற்குப்போகிறேன். உங்கள் தலைவி என்னைத் தேடினால் எனக்குச் சொல்லக்கடவாயென்று சொல்ல, அத

ற்கு உத்தரமாக மதமானி சொல்லத்தொடங்கினாள். ஐயனே, நீ வேறிடத்தில் வீடு தேடவேண்டியதில்லை ரத்நமயமான எமது மாளிகை உம்முடையதே; இவ்விடத்தில் இருப்பாயாக; மாயையானவள் தனது இருதய பீடத்தில் உன்னை யிருத்திக்கொண்டிருக்கிறாள்; அன்றியும் நீ தன்னோடுகூடவே யிருக்கவேண்டுமென்னும் விருப்பமுடையவளாயுமிருக்கிறாள்; இந்தச் செய்தியை வெளிப்படையாய்ச்சொல்லியுமிருக்கிறாளென்று சொல்லுதலும், அல்லமர் அவளைநோக்கி, அம்மா! நான் ஒரு பொருளுமில்லாதவன், நீங்கள் எல்லாப் பொருளுமுடையவர்கள்; நான் சாதியறியப்படாத ஈனன். உங்கள் தலைவி உயர்ந்த ராஜகுமாரி; அன்றியும் நான் புருஷஜாதி; ஆதலால் உங்களோடு கூடிவாழ்தல் எனக்குத்தகாதென்று புன்சிரிப்போடு சொல்லினான். அதைக்கேட்ட மதமானியானவள் அல்லமரை நோக்கி ஐயனே! எங்கள் தலைவி ஒருவரோடு சிநேகம் செய்துவிட்டால் அந்தச் சிநேகிதர்கள் உயிரைக்கேட்டாலும் கொடுத்துவிடுவாள், அவரை அவமதியாள்; அப்படிப்பட்டவள் தன் உயிரினுஞ் சிறந்த பொருளாகக் கொண்டிருக்கிற வுன்னை அவமதிப்பாளோ! நீ சில காலம் அவளோடுகூடி வாழ்ந்தறியக்கடவாயென்று இன்சொற்சொன்னாள். அதற்கு அல்லமர் அவளை நோக்கி, உன் சொற்களெல்லாம் இருபொருள் படுவனவாயிருக்கின்றன. அவற்றின் உண்மையை அறிந்திலேன் ஒருவரிடத்து ஒரு தொழில் செய்வோர் தூரத்தில் தங்கியிருந்து தொழில் செய்யுங்காலத்தில் வருதல் தகுதியேயன்றிச் சமீபத்திலிருத்தலும் உடனிருத்தலும் தகாதகாரியமென்று மாயைக்கு வசப்படுவோன் போல நடித்து அவளைவிட்டு நழுவுவோனாகிய அல்லமன் சொல்ல, மதமானி, ஐயனே! எங்கள் தலைவி தனது திருவோலக்கத்தைக் காணும் ஆடவரோடு உன்னையும் ஒருவராக நினைப்பவளல்லள்; தனக்குத் தலைவ

றுக நினைத்திருக்கிறாள் என்று சொல்ல, அல்லமர் அவளை நோக்கி, உங்கள் தலைவிக்கு ஒருவரை உயர்த்துதல் இயற்கை, எனக்கு முன்பு போலவே யடங்கி நடத்தல் இயற்கை யென்றார். அதுகேட்ட மதமானி அல்லமரை நோக்கி, ஐயரே! நாமிருவரும்சொற்போர் செய்வதில் ஒருபயனுமில்லை; எங்கள் தலைவியாகிய மாயையானவள் உன்னைக் கண்டளவில் யானையுண்ட விளாம்பழத்தை நிகர்த்து வறியளானாள்; ஆதலால் உனக்கு மறைத்துப் பேசவேண்டியது ஒன்றுமில்லை யென்றாள். அதுகேட்ட அல்லமர் மதமானியை நோக்கி, உங்கள் தலைவியின் கருத்தை நீ யறிவாய், இன்று நூதனமாய் வந்த யானறிவேனோ? ஆயினும் ஆப்தமாகியவுன் மொழியைக்கேட்பதே யெனக்கு நன்மையான நெறி யென்றார். அதுகேட்ட மதமானி, ஐயரே, நீர் சுப சகுநம் பார்த்து வந்தீர்; யாவரையும் மயக்க வல்லளான மாயையை ஒரு த்ருணப்ராயமாய் மயக்கி அவளது சுகாநுபவத்தையும் அநுபவித்தற் குரியரானீர் என்று புன் சிரிப்போடு சொல்லிவிட்டு மாயையினிடத்துக்கு மீண்டுபோனாள். இவள் அல்லமரிடத்திற்குப் போனபிறகு, என்னுயிரினுஞ் சிறந்த கட்டழகராகிய அல்லமரை, நம்மால் அனுப்பப்பட்ட மதமானியானவள் தனது இன் சொற்களால் வசப்படுத்திக் கொண்டு வருவாளோ? வன் சொற்சொல்லி நீங்கச் செய்வாளோ? என் காம நோயை யறிந்து சென்றவள் தூது சொல்லாமல் வந்துவிடுவாளோ? ராஜகுமாரியென்று என் பிராண நாயகர் இவ்விடம் விட்டு நீங்கிப் போவாரோ? எனது அதிர்ஷ்டம் எப்படி யிருக்கின்றதோ? பொன்போலும் ஒளியுள்ள அவரது முகத்தை நான் கண்டாலன்றி என் துன்பம் நீங்காது என்று பலவாறு சொல்லிப் புலம்பிக்கொண்டிருக்குஞ்சமயத்தில், தோழிமார்களுக்கு இடக்கண் துடித்தல் முதலிய சுபசகுனங்கள் காணப்படுதலால் அவர்களெல்லாரும்

நமது தலைவியின் கருத்து நிறைவேறுமென்று மன மகிழ்ந்திருக்கும்போது, மதமானியும்வந்துசேர்ந்தாள். அவளைக்கண்ட தோழிமாரெல்லாரும் அவளைச் சூழ்ந்துகொண்டு, நீ அல்லமனிடத்தில் சென்ற காரியம் பழமோ காயோ வென்று கேட்க, அவள் பழமென்று முகமலர்ச்சியோடு சொல்லுதலும், தோழியர் அடைந்த சந்தோஷத்தை ஓரளவு படுத்திச் சொல்லலாம்; மாயையடைந்த சந்தோஷத்துக்கோ ரளவில்லை. இந்தச் செய்தியை அரசனறிந்தால் என்ன அநர்த்தம்விளையுமோவென்று சொல்லிக்கொண்டு தோழியரெல்லாரும் இரவின் வருகையை எதிர் பார்த்திருந்தார்கள். அன்னம்போலும் நடையையுடைய மாயையானவள் அல்லமரது சம்மதியைச் சொல்லிய அந்த மொழியையே, மன்மதபாணம் தைத்ததனாலுண்டாகிய புண்ணுக்கிடு மருந்தாயெண்ணி மனமகிழ்ந்திருந்தாள். நீர் விளையாடலைச் செய்கிற இரண்டு சிறுவர்களுக்குள்ளே ஒரு சிறுவன் ஓடி நீரில் விழுவான்போலச் சூரியன் மேற்கடலிற்போய் மறைய, நீரில் முன்பு குளித்த ஒரு சிறுவன் மீட்டும் எழுந்து வந்தாற்போலச் சந்திரன் கிழக்குக் கடலிலிருந்து உதித்தான். நெருங்கிய தாமரைமலர்கள் வாய்மூடிக் குவிந்த அளவில், மதுபானஞ் செய்து மயங்குகிற உற்பலமலர்கள் மலர்ந்தன. மேக மண்டலத்தை யளாவுகின்ற இளஞ்சோலையிலுள்ள அழகிய தடாகத்தை இரைதேடா நின்ற நாரைகள் அடைந்தன. செவ்வானமாகிய சிவந்த நெருப்பினின்றுந் தெறித்த பொறிகள்போல ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் தோன்றின. பரிசுத்தமாகிய பிரகாசத்தையுடைய சூரியன்போய் மேற்குச் சமுத்திரத்தில் மூழ்கின அளவில், மாயையென்னும் பெயரைக் கொண்டிருந்த ரத்தகலாபத்தையுடைய மயிலை ஆகாயமாகிய பச்சோந்தி கண்டு கோபித்துச் சரீரம் சிவந்து அடங்குதல் போல, மாலைப்பொழுதில் பரவிய செவ்வானம் தோ

ன்றி அடங்கியது. காலைப்பொழுதில் அரும்பி, பக லெல்லாம் பேரரும்பாயிருந்த காமமாகிய மலர் மாலைப்பொழுதில் மலர்ந்ததனால் சகிக்காமல் ஒப்பற்ற மாயையென்னும் பெயரையுடைய அழகிய கொடியா னது மூலையிலிருந்து வெளியேவந்து பரந்த வெண் மையாகிய நிலாமுற்றத்தில் தோகையையுடைய மயி லைப்போல வீழ்ந்து, காமவிகாரம் அதிகரிக்க வாய் பிதற்றுவாளாயினள். எப்படியென்றால், நிலவே! நீ தாயினிடத்தில் தோன்றி, அவள் மிகவும் தலையை மோதி மோதி வெறுத்து அலறும்படி கோபிப்பாய், (பெருகி அலையை வீசி வீசி அலைந்து ஒலிக்கும்படி சந் திரிகையை வீசுவாய்). அன்றியும், கூடப்பிறந்தவளாகிய திருமகள் இருந்து வாழ்கின்ற வாசனை பொருந்திய தாமரைமலராகிய காவலைக்கொண்ட வீட்டை ஆகாய த்தில் எழுந்துவந்து அழிப்பாயென்றால், ஐயோ! என் றும் ஒரு தன்மையா யிராமல் தேய்பவனே! உன் னோடு யாதொரு சம்பந்தமுமில்லாத என்னை நீ யென் னதான் செய்யமாட்டாய்! பிரகாசியாநின்ற வெள்ளிய சந்திரனே! தக்கனதுயாகத்தில் ஒருநாள் கடவுளுடைய பாதத்திற்பட்ட நீ, தலையேறிச் சிறந்த தவத்தினர் மந் த்ர ஜலத்தை யிறைக்கவும் இன்னும் இறங்கவில்லை. அவனது பவளம்போற் சிவந்த வாயிற்பட்டுக் கண்ட த்திலே யிறங்குகிற விஷமானது உன்னை நிகர்க்குமென் பது அறியாமையேயாம். வெண்மையாகிய சந்திரனே! கண்டத்தில் விஷத்தைவைத்த பரமசிவன் உபாங்க மாகிய பிரகாசியாநின்ற சடையின்மீது பொருந்த உன்னை வைத்தது, உன் தீமையை நினைத்தே யல்லவா? பிரகாசியாநின்ற அமுதகிரணத்தை யுடையவனென்று உன்னைச் சொல்லுதல் இவ்வுலகத்தில் மனிதர் கருமை யாகிய ஆட்டை வெள்ளாடென்று சொல்லுதற்கு ஒப் பாகுமே! பொதியமலையிற் பிறந்த மணத்தையுடைய சந்தனக் கட்டையாலாகிய குழம்பு உலர்ந்து பொரி

யும்படியாகவும் புஷ்பசயனமும் யாவர்க்கும் விருப்பத்தைத் தருகிற பூமாலைகளும் எரியும்படியாகவும் நெருப்பைச் சொரிந்துகொண்டே உதித்த வெண்மையாகிய சந்திரனே! வெப்பம் மிகுந்த அக்கினியானது சிவந்து உலகத்தார் காணும்படி பிரகாசியாநிற்கவும், நல்ல தார்க்கிகர் நெருப்பு வெண்ணிறத்தை யுடையதென்று சொல்லுவது உன் குணத்தை யாராய்ந்தல்லவா? சந்திரனே! இப்பொழுது ஒருலகத்தின் கண் எனக் கொரு தன்மையாகவும் மற்றவர்களுக் கொரு தன்மையாகவும் இருக்கிறாய். இப்படி யிருத்தல் உனக்கு நன்மையாகுமா? முற்காலத்தில் உன் மனைவியர் இருபத்தெழுவரையும் சமமாக நோக்காத செய்கையாலன்றோ சூரியன்போல எக்காலத்துமொரு தன்மையா யிராமல் தேய்ந்து போகின்றாய்? ஐயோ, அதனை நீ அறியாயோ! கொடிதாகிய இளந் தென்றலே, கொல்லா விரதத்தையுடைய அகத்தியமுனிவர் வாசஞ்செய்கிற பொதியமலையில்பிறந்தும் என்னைக் கொல்லுகின்றாய். நீ சிறிதும் அருளில்லா திருப்பது யாது காரணத்தினாலோ? திருப்பாற்கடலில் பிறந்த விஷத்தில் அதனது தீ குணமே யல்லாமல் அமுதத்தின் நற்குணமுண்டோ? குயிலே! பெற்ற பொழுதே உன்னைப்பெற்ற தாயாகிய குயில் உன் குரலைக் கேளா முன்னமே ஓடிவிட்டது. அன்போடு வளர்த்ததாயாகிய காகம் உன் குரலைக்கேட்டவுடன் நீ அஞ்சும்படி உன்னைத் துரத்திவிட்டது. பயனைத் தருகின்ற மலர்களை யுடைய பூஞ்சோலையி லிருந்துகொண்டு பலதரமும் கூவினால் நான் கோபித்து உன்னை வெறுத்துக் கொள்வது சொல்லவேண்டுமோ? கருப்பு வில்லை யுடையமன்மதனே! அவ...மனது அழகைக்கண்டு அவனுக் கெதிர்நிற்க நாணியோ இங்கே என்முன் நின்று கோபிக்கின்றாய்? தன்னினும் அழகிற் சிறந்தவர்கள் இல்லையென்று தருக்குகின்ற அந்த அல்லமனைப்போரில்

தோஷிக்கச் செய்யாமல் எம்போல்வாராகிய மெல்லிய மாதரைப் போர்செய்து வருத்துகின்றாய்; உனது ஆண் பிள்ளைத் தன்மை மிகவும் நன்றாய் இருந்தது! என்று இவ்வாறு மாயையானவள் புலம்பி மயக்க மதிகரித்து அழுது மனஞ்சோர, வாசனைபொருந்திய மலர்களால் நிறைந்த மெல்லிய சயனத்தையுடைய அழகிய பள்ளியறையில் மதமானியானவள் சென்று, ஆடவரிற் சிறந்த அல்லமனை முன்னே அழைத்துக்கொண்டு வந்து இருக்கச்செய்து, தவளையாகிய உணவை வெற்றியையுடைய சிங்கத்துக்கு உண்பித்தல்போல மாயையை அப்பள்ளியறைக்குள் அனுப்பினாள். கோடைகாலத்தில் உச்சிப்பொழுதில் வெப்பத்தையுடைய பாலைநிலத்தில் நீர்வேட்கையுள்ளவன் அந்த நிலத்திலுள்ள கானலாகிய நீரைத்தான் எதிரேகண்டு அதனைப் பருக ஓடுதல்போலக் குளிர்ச்சி பொருந்திய புஷ்ப சயனத்தின் மீதிருந்த மெய்ஞ்ஞானவிளக்காகிய அல்லமனை மாயையானவள் கண்ணாரக்கண்டு, புன்சிரிப்போடு அழகிய முகமலர்ச்சியை யுடையவளாய்த் தனது நெருங்கிய ஸ்தனங்கள் பூரிக்க விரும்பி மேல்விழுந்து தழுவினாள். மதர்த்த கண்களையுடைய மாயையானவள், கண்ணாடியிற் காணப்படுகின்ற பிரதி பிம்பம்போலச் சயனத்தின்மேல் காணப்பட்ட அல்லமனை யோடி விழுந்து தழுவக் கையில் அகப்படாமையால் சயனத்தின் மேல்விழுந்து, கண்ணாடியின் பிரதி பிம்பத்தைப் பிடிக்க நீட்டிய கை கண்ணாடியிற் படும்படி நின்றழுது வாடுகின்ற மழலைச் சொல்லையுடைய இளங்குழந்தை போலத் துன்பமடைந்தாள். சொல்லுக்கடங்காத அழகையுடைய அல்லமனது திருவுருவானது கண்ணுக்குத் தோன்றுதலால் மீளவும் எழுந்து மலர்போன்ற மெல்லிய கைகளால் ஆகாயத்தைத் தழுவுதல்போலத் தழுவினாள், வெறுவாயைச் சுவைத்தாள்.

இவ்வாறு மாயையானவள் வெளியைக் கண்டு மயங்கி அல்லமன் தன்கையில் அகப்படாமையால் இவ்

விடத்துக் காணப்படுவது உரு வெளித்தோற்றமே யன்றி அல்லமன் அல்லன் என்று அவனது மெய்யுருவைச் சந்தேகித்தாள். செய்தற்கரிய தவத்தை நெடுநாள் முயன்று செய்து தான்பெற்ற அமுதில் வாய் வைத்திடுமெள்வில் அவ்வமுதம் கைதவறுதல்போல, அல்லமன் கட்புலனுக்குத் தோன்றியும் அவனைத் தன் மெல்லிய தோளினிடத்தில் அணைக்க ஆகாயம்போலக் கைக்கு அகப்படாமையால் நெருப்பில் விழுந்த புழுப் போலப் பதைபதைத்து வருந்தினாள். காமமயக்கத்தை உருவிலியாகிய அல்லமனன்றி உருவுடையவர்களில் யார் நீக்குவார்கள்? துறவினரை வருத்திய அந்தமாயை யானவள் கன்னிகையென்றும் ராஜகுமாரியென்றும் ஆலோசிக்காமல் எனக்கு மோக முண்டாக்கியும் எனது இருதனங்கள் தன் மார்பினிடத்துப் பொருந்த அணைத்து அதரபானஞ்செய்து புஷ்ப சயனத்தின்மீது புணர்ந்து துன்பமில்லாத இன்பக்கடலில் மூழ்க இவ்வல்லமனால் பெற்றிலேனென்று தன் மனம் நொந்து வெப்பமாகப் பெருமூச்செறிந்தாள். மேகத்தால் பெய்யப்பட்டு விழாநின்ற நீர்த்தாரைகளால் காற்று நனையுமாகில், புகைந்தெழுகின்ற நெருப்பினால் ஆகாயம் வேகுமாகில், ஒலிக்கின்ற வெள்ளிய அலைகளையுடைய பெருங்கடலானது அந்தக் கும்ப முனியை அழுந்தப்பண்ணுமாகில், நஞ்சமானது எழுந்து பரமசிவனை வருத்துமாகில் அல்லம தேவன் மயக்கமடைவான். அந்த அல்லமனொழிந்தவரை எப்பொழுதும் மயக்காநின்ற மாயையும் அந்த அல்லமனை மயக்குவாள். ஆகாயத்தைக் குத்திக் கையிளைப்பவர் போல வேல்போன்ற நெடியகண்களையுடைய மாயையானவள் அங்கிருந்த அல்லமனைத் தழுவித் தழுவிச் சரீரம் வருந்திப் பரவசப்பட்டுச் சயனத்தின்மேல் உறங்கி முன் எண்ணிய நினைப்பினால் அந்த அல்லமதேவன் கூடினதுபோல இனிய கனவொன்று கண்

யெழுந்தாள். இடமகன்ற உலகத்தில் சூரியனும் கருங்கடலி னின்றும் உதித்தான். உதயகாலத்தில் பூமாலையணிந்த நீண்ட கூந்தலையுடைய தோழிகளைக் கண்டு சொல்லுவாள்: அல்லமனது விளையாட்டை என் சொல்வேன்! கண்ணெதிரே தோன்றிக் கிட்டினால் என் கைகளுக்கு அகப்படான். அதனால் மிகவும் வாடி நித்திரை செய்தேன்; கனவில் பருத்த என் தனங்கள் குழையத் தழுவி மறுபடியும் தலையளி செய்து உன்னை நான் என்றும் விடுகிலேன் என்றனன் என்று சொன்னாள்.

துறவினரது அரிய தவத்தை அழிக்கின்ற அழகையுடைய இந்தமாயைக்கு அகப்படாத வெற்றியையுடையவன்யாரோ அவன் இந்திரன் பிரமன் திருமால்தேவர்கள் முனிவரர் கிம்புருடர் வித்தியாதரர் என்று சொல்லப்பட்டவர்களுக்குள்ளே சேர்ந்தவனல்லன்; பார்க்குமிடத்து இவன் ஒப்பற்ற கடவுளேயாவனென்று தோழியர் தமது மனத்துள்ளே யதிசயித்து மாயையுடனே பேசத் தொடங்கினார்கள். எவ்வாறெனின், உன்னுள் ளத்திலாசையை அதிகப்படுத்துதற்காக அல்லமன் இவ்வாறு நடித்தான்; நீ சொலலிய கனவின் பயனை ஆராயின் மறுபடியும் உன்னைச் சரீரத்திற் பொருந்தப் புணருவான்; என்று வாசனை பொருந்திய மெல்லிய கூந்தலை யுடைய மாயையினுடைய மனத்திலுள்ள துன்பம் நீங்கும்படி ஆலோசித்துத் தோழியர் சொன்னார்கள். அதுகேட்ட மாயையானவள் துன்பம் நீங்கி மனமகிழ்ந்தாள். இவ்வாறாக மாயையினிடத்து நிகழ்ந்த செய்தியைச் சிலதோழிகள் போய்ச்சொல்ல மோகினியென்னுந் தாயானவள் அறிந்து, அபிமானம் அதிகரிக்கத் துன்பக் கடலில் மூழ்கி ஒப்பற்ற தன் மகள் வாழ்கின்ற மாளிகையை யடைந்து, தோழிகளையும் மகளையும் அழைத்து, மகளைநோக்கி, என்செல்வப்

புதல்வியே! நீ என்னகாரியஞ் செய்தாய், நீ அறிவில்லாதவள் என்று மனம்வாடி இவைகளைச் சொன்னாள். மானமும் உயிரும் ஒருங்கு நில்லாதவிடத்து உயிரை விட்டுத் தானடையவேண்டிய பொருளாக மானத்தையேகாக்கின்ற உன் தந்தையின் செவியில் வீழ்ந்தால் யாதாய் முடியும். பாவீ! சூரிய சந்திரர்கள் உள்ளவரைக்கும் இந்தப் பழியானது நமது சந்ததிதோறும் தொடருமே! நான் வருந்தி உன்னைப் பெற்றதும் இதற்குத் தானோ? என்று மேலுஞ் சொல்லுவாள். தந்தை தாய்களுடைய ஆணைவழியில்நடக்கின்ற கன்னிப்பெண்கள் தாய் தந்தையர் சம்மதித்துக் கொடுக்காவிட்டால் முருகவேளையொத்த ஆடவராயினும் அருவருப்பார்கள். குரூபிகளாயினும் தாய்தந்தையர் மனமகிழ்ந்து கொடுக்கில் அந்த ஆடவரை மேலான கடவுளாகவே நினைத்து இனிதாகக் கூடிவாழ்வார்கள். தெய்வ மகளிரை நிகர்த்த மாதரும் மணஞ் செய்தற்கு முன்னே தாய் தந்தையரது ஆணையினும், மணம் முடிந்தபிறகு தனக்கு நன்மையைச் செய்கின்ற கணவனது ஆணையினும் நிற்பார்கள். எப்போதும் தம்வசத்தினரல்லர் என்பதை அறிந்திருந்தும் அறிவில்லாதவளே! நீ இந்தத் தகாத காரியத்தைச் செய்தாய். உன்னைக் கோபிப்பாரில்லையெனறு இருந்தனை போலுமென்று தாயாகிய மோகினி கோபித்தாள். தேன்போலும் மதுரமாகிய மிருதுவான சொல்லையுடைய மாயையோ தான்செய்த குற்றமும் தாய் செய்கின்ற கோபமும் தன் மனத்தைமிகவும் வருத்த இதற்கு நான் என்ன செய்வேனென்று வெட்கமுற்றுத் தலைவணங்கிப் பெருமைபொருந்திய பூமியைப்பார்த்துக் கண்ணீர் சிந்த இருந்தாள். மோகினி அதைப்பார்த்துக் கோபம் நீங்கி, மனமுருகி, மானினது கண்போலும் கண்களையுடைய மாயையே! உன்மேல் குற்றமில்லையென்று சொன்னாள். மனம் கரைதலில தாய்போல் உலகத்தில் ஒருவர்

உண்டோ? அதன்பிறகு மோகினியானவள் மாயையின் தோழிகளை நோக்கி, தோழிமாரே, நீங்கள்சூழ்ந்திருந் தும் வேலியில்லாத பயிர்போல மாயையின்கற்பு அழி யும்படி என்னகாரியஞ் செய்தீர்கள் பாவிகளே யென் ன, அதற்கு அந்தத் தோழிமார் மோகினியைநோக்கி, அம்மா! மன்மதபாணத்தா லுண்டாகிய துன்பத்தைச் சகிக்கமாட்டாமல் உன் மகளாகிய மாயை உயிர் நீங் கத்தக்க நிலையிலிருந்தாள்; அப்படி நீங்காது பிழைத் திருப்பது உன் தவப்பயனாலேயாம், எங்கள்மேற்குற்ற மில்லையென்றார்கள். இப்படித் தோழிமார் சொல்லு தலும், ராஜமஹிஷியாகிய மோகினியானவள் சிறிது கோபந்தணிந்து, தோழிமார்களுள்ளே சிறந்த சகலை யின் முகத்தைப்பார்த்து,புஷ்பபாணங்களையுடைய மன் மதனை நிகர்த்த அல்லமனை வெளியேநின்று துரத்தி விடாமல் எமது புதல்வியாகிய மாயைக்கெதிரே யனுப் பினாய், இது யாதுகாரணத்தாலோ வென்றுகேட்க, அந்தச் சகலையானவள் மோகினியை நோக்கி, தாயே! எல்லாப்பிறப்புக்களி னுள்ளும் மானிடப் பிறப்புச் சிறந்தது.அதிலும் அரசர்மக்களாய்ப் பிறத்தல் அரிது. அதிலும் அவயவக் குறைபாடின்றிப் பிறத்தல் மிகவும் அரிது. அதினும் அறிவோடிருந்து போகங்களை யநு பவித்தல் அரிது, என்றிவ்வாறு பெரியோர்கூறுதலால் நீ அநேக தவங்களைச் செய்துபெற்ற செல்வப் புதல்வி யாகிய மாயையைக்கோபித்து வெறுத்துக்கொள்வது உனக்குத் தகுதியன்றென்று சொன்னாள். அது கேட்ட மோகினியானவள் முகமலர்ந்து, என் தவப் பயனாகிய மாயை குற்றமுடையவளல்லள்; காந்தர்வ மணம் அரசர்க்குரியதென்று சொல்லுவார்கள் ஆத லால் இவளுக்கு அல்லமன்றானே மணவாளனாதற் குரியவன்; அவனிடத்தில் இவளிஷ்டப்படி போகத்தை யநுபவிக்கட்டுமென்று சொல்லிப் பின்னும் ஒன்றைச் சொல்லுகிறாள், தோழிகளே! உலகமுழுதும் அறியும்

படி விவாகஞ் செய்யுமளவும் உலகத்தாரும் அரசனும் அறியாமல் மாயையின் செய்கையை நீங்கள் மறையுங்கள்; இவளது நன்மை தீமைகள்யாவும் உங்களுடையனவே ஆதலால் உங்களுக்கு நான் சொல்லவேண்டியது ஒன்றுமில்லையென்று சொல்லி மகளுக்கு அளவற்ற மகிழ்ச்சியை யுண்டாக்கிச் சென்றாள். பிறகு மாயையானவள் தோழிகளை நோக்கி, நீங்கள் என் குற்றத்தை என் அன்புள்ள தாயோடு சொன்னால் அவள் என்னைக் கோபிப்பாளோ என்ன, அதைக் கேட்ட சகளையானவள் சாந்தாங்காரன் உனக்குப்பரமசிவனை நாயகனென்று சொல்லியிருக்கவும் நீ யிந்தக்காரியத்தைச் செய்தால் உன்னைக் குறித்துக் குற்றஞ் சொல்வார்மேற் குற்றமுண்டோ? நம்முடைய தாயறிந்ததனால் அற்பமாய் மறைந்தது, அரசன் அறிவானாயின் எளிதாகுமோ?போனதுபோகட்டும்,இனிமேலாயினும் அந்த அல்லமனை அப்புறப்படுத்துவதே விவேகமென்றுசொன்னாள். அதைக்கேட்ட மாயையானவள் மனஞ்சோர்ந்து, தாங்குதற்கரிய துன்பத்துட னிருந்தாள். இந்தச் செய்தியை யறிந்த அல்லமன் சகளையை நோக்கி, உங்களுடைய ராஜபுத்ரியாகிய மாயைக்கு நேரிட்டது யாதென்று கேட்க, அவள் அல்லமனை நோக்கி, ஐயனே! எமது தலைவியாகிய மாயை உன்னைக் கண்டநாள் முதலாக உன் மாயைவலையி லகப்பட்டு வருந்துகிறாள். இந்தச்செய்தியை அரசனொருவன்மாத்திரம் அறிந்திலன், மற்றெல்லாரும் அறிந்தார்கள். ஆதலால் நாம் பிழைக்கவேண்டி நீ வெளியில் ஒரு இடம் பார்த்துக்கொண்டு அங்கிருப்பது நன்மையென்றாள். அதுகேட்ட அல்லமன் அவளை நோக்கி, பெண்ணே! நான் மாயையைவிட்டு நீங்கினால் எனக்கு நடக்கக்காலெழுமோ, வாயில் பேச்சுண்டாகுமோ, உண்ணமனம் வருமோ, இராப்பகல்கள் அறியப்படுமோ, உடலுயிர்கள் சேர்ந்திருந்து இன்பமநுபவிக்குமோ, என்னை

ஒருவர் கண்டதாக வந்து உனக்குச் சொல்லுவாருண்டோ என்றிவ்வாறு சொல்ல, முன்னே அல்லமனது தயையை விரும்பியுழன்ற சகலேயானவள் அவன் மனக்கருத்தை யறியாமல் அவனை நோக்கி, ஐயனே! எமது தலைவியாகிய மாயையைப் புணர்தற்குரிய நல்லூழ் உனக்கிருக்குமாயின் நீ யெங்கிருந்தாலும் அரசன் உன்னைத்தேடி அவளை உனக்கே மணமுடித்துக் கொடுப்பான், இதில் சந்தேகமில்லை யென்றாள். அது கேட்ட அல்லமன் மிகவும்மனமகிழ்ந்து, நன்று நன்று என்றுசொல்லி, மதுகேசன்சந்நிதியிற் சென்று மாயை நடிக்கும்போது தனது மத்தளத் தொழிலை நடத்திக் கொண்டிருந்தான்.

பிரபுதேவர் வந்தகதி முற்றிற்று.

---

## ஆறுவது

## விமலைகதி.

நிர்மலையாகிய பார்வதி தேவியனுப்ப அகன்ற பூமியில் வந்து ரஜோகுண வடிவமாகிய விமலையானவள் மலத்தோடு கூடினவளாகிய மாயைக்கு அருளுருவாகிய அல்லமரது ஒழுக்கத்தை அன்போடு சொல்லியவண்ணம் சொல்லுவோம்.

மாயையானவள் மதுகேசனை நாள்தோறும் பூசித்து நமது அல்லமதேவர் கொடுத்த மயக்கம் தன் மனத்தில் அதிகரிக்க இருந்தாள். இப்படி யிருந்த காலத்தில் உமாதேவி நம்மால் அனுப்பப்பட்ட மாயையானவள் பூலோகத்துக்குப் போய் நெடுநாளாயின, அவள் இன்னமும் வரவில்லை. நீபோய் அவளை யழைத்துக்கொண்டு விரைவாக வரக்கடவையென்று விமலையை அனுப்பினாள்.

களங்கமில்லாத பிரகாசத்தை யுடைய கைலாசத்திலிருந்து எம்பிராட்டியாகிய பார்வதி தேவியனுப்ப அப்பார்வதியை வணங்கி, தன் தனங்களின் பாரத்தினால் விழுந்தாளென்று சொல்லும்படி விமலையானவள் பூமியின்மீது வந்தாள். அப்படி வந்தவள் வனவசைமாநகரத்தில் பொன்னினாலும் மணிகளாலுஞ் செய்யப்பட்ட உபரிகையை யடைந்து, ஒருகற்பகக்கொடிபோல மாயைக்கெதிரே நின்றனள். நின்றவளை மாயையானவள் கண்டு, இவள் வாழ்வது இந்நிலவுலக மன்றுபோலும் என்றாலோசித்து எழுந்து வணங்கி ஓராசனம் கொடுத்தாள். அந்த ஆசநத்தில் விமலையிருக்க, இவ்விருவரையும் எதிரெதிரா யிருக்கக் கண்ட அந்நகரத்து மாதர்கள் இரண்டுகைகளையுடைய இரண்டு மாணிக்கங்களை நிகர்த்திருக்கிறார்கள் என்று அதிசயித்தார்கள். இப்படி யிருக்கும்பொழுது மாயையானவள் விமலையை நோக்கி, நீயிருப்ப தெவ்விடம், உன் பெயர் யாது, நீயிங்கு வந்ததற்குக் காரணம்யாது என்று வினவ, விமலை சொல்லுவாளாயினள். கற்பகக் கொடிபோன்ற மாயையே! நான் வசிக்குமிடம் கயிலை, என்பெயரைச் சொல்லின் விமலையாகும், மலையரையன் புதல்வியாகிய பார்வதி உன்னிடத்திற் கனுப்பினாள். ஆதலால் யானிங்குவந்து உன்னைக் கண்டேன் என்று சொல்ல, ராஜகுமாரியாகிய மாயையானவள், எம்மிறைவியாகிய பார்வதி மிகுந்த துக்கத்தையுடைய மாநுடப் பிறப்பினளாகிய என்னை நினைத்து உன்னை யென்னிடத்திற் கனுப்பினதற்குக் காரணம்யாது என்று கேட்க, விமலை சொல்லலாயினள். என் தங்கையாகிய மாயையே! அல்லமரது மனவலையையறிந்து வாவென்று உமாதேவி உன்னையேவ, நீ அப்படியேயாகட்டுமென்று சபதஞ் செய்துவந்து இவ்விடமடைந்த பிறகு அதை மறந்துவிட்டாய். நீ உன்னையே யறிந்திலையாயின் அல்லமரது நிலையை நீ யறிவதெவ்வாறு? நீ உமாதேவி

யின் அமிசமல்லவோ? ஓடமருந்துண்டு உறங்கி விழு வார்போல நீ செய்துவந்த சபதத்தை மறந்திருத்த லால் உன்னைத்தேடியழைத்து வரும்பொருட்டு என்னை யனுப்பினாள் என்றுசொல்லக்கேட்ட மாயையானவள், விமலையின் சொல்லினால் சூரியனுதயமாகிய பகலிற் கண்ட பொருள்போல அறியாது சந்திர னுதயமாகிய இரவினிற் கண்ட பொருள்போல மனந்தெளிந்து தனது பூர்வஸ்திதியையும் தான் செய்துவந்த சபதத் தையும் அற்பமாயறிந்தாள்; அறிந்து, பிரபஞ்சத்திற்கு மூலகாரணனென்று சிலசமயத்தாரால் சொல்லப்படு கிற திருமாலும் ராமாவதாரஞ் செய்தபோது தனது பூர்வஸ்திதியை அறிந்திலனென்றால் மிகவும் அறியா மையையுடைய நான் இவ்வுலகத்தில் வந்து மயங்கு தலைக்குறித்துச் சொல்லவேண்டுமோ? அந்த அல்லம னது சுபாவ குணங்களையெல்லாம் அறியும்படி நீயெ னக்குச் சொல்லக்கடவையென்று திருவடியை வணங் கிகின்ற மாயையை நோக்கி, விமலையானவள் சொல் லத் தொடங்கினாள். கைலாயத்தில் உமாதேவியுடன் நெற்றிக் கண்ணையுடைய பரமசிவன் அல்லமனது சரித்திரங்களைச் சொல்லும்போது நான் பக்கத்திலிரு ந்து அறிந்திருக்கிறேன்; அந்தச் சரித்திரத்தை மயிற் சாயலையுடைய மாயையே! நீ கேட்பாயாகவென்று சொல்லத் தொடங்கினாள். இவ்வுலகத்தில், வள்ளி காவையென்னும் ஊரில், தனக்கு ஒப்பில்லாதவனும், இடையறாத கிருபையை யுடையவனுமாகிய நிராங்கார னென்னும் பெயரையுடையவன் ஒருவனிருந்தான். அவனுக்குக் குற்றமற்ற சுஞ்ஞானியென்னும் பெய ரையுடைய மனையாள் ஒருத்தியிருந்தாள். இவ்விருவ ரும் வேதாகமவிதிகளில் தவறாது தம்மைப் பார்த்து உலகத்தார் நடக்கும்படி நடப்பவர்களா யிருந்தார் கள். அன்றியும் இவர்கள், சிவமே யுண்மை, அதை யன்றி விரிந்த உலகம்பொய் என்றும், இம்மைமறுமை

யின்பங்கள் அழிவன வென்றும் கருதியிருப்பவர் கள். மேலும், மன முதலிய அந்தக்கரணங்களும், காமம், குரோதம் முதலிய அரிஷட்வர்க்கமும் தீநெறி யில் செல்லாமல் நன்னெறியிற் செல்லும்படி முயற்சி செய்து அவற்றைத் தடுப்பவர்கள். பொய்த் தொழில் கள் ஒன்றும் இல்லாதவர்கள். ஞானசாரியனால் உப தேசிக்கப்பட்ட சாஸ்திரப் பொருளையே உறுதியாக நம்பி மோட்சத்தை யிச்சித்திருப்பவர்கள். இத்தன் மையராய் இருக்குங்காலத்தில், தாம் இருப்பது இல் லற மாதலால் அதற்குரிய நன்மக்கட்பேறு இல்லா திருத்தல் தகுதியல்லவென்று மனந் தளர்ந்து, பிள்ளை கள் இல்லாத வாழ்வு ஈசுவரத் தியான மில்லாத மனத் தையும், ஞானமில்லாத சத்கருமத்தையும் நிகர்க்கும். இந்த உலகுக்கு உதவியாகத் தகுந்த பல தொழில் களைச் செய்கின்ற புதல்வன் வேண்டுமென் றிருப்பவன் மனிதருக்குள்ளே பதராவான். மேலுலகிற்கு உதவி யாகப் புதல்வன் வேண்டுமென் றிருப்பவன் தரும நெறி மிகுந்த ஆண்மகனாவன். அத்துவிதானந்தத்தைக் கொடுக்கின்ற புதல்வன் வேண்டுமென் றிருப்பவன் ஞானியாவன் என்று ஆலோசித்துத் துன்பத்தைச் செய்கிற பிறவிப்பிணியை அழிக்க முயலுகின்ற மன த்தையுடைய கிராங்காரன், உடம்பையும், ஐம்பொறி களையும், அந்தக்கரணங்களையும், பிராணவாயுவையும் தான் என்று நினைத்துத் திரியாமல், அவை முழுதும் ஒழித்துத் தன்னை யறிந்து, பேதாபேத மென்னும் மயக்கம் நீங்கியிருக்கின்ற மேலான மோட்சத்தைக் காட்டுகிற புதல்வன் வேண்டுமென்று விரும்பினன். நான்கும், ஆறும், பத்தும், பன்னிரண்டும், பதினாறும், இரண்டும் ஆகிய இந்த இலக்கத்தை முறையே கொண் டிருக்கிற இதழ்களையுடைய மூலாதாரம், சுவாதிட்டா னம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினையம் என்கிற ஆறுதார கமலங்களைக் கடந்துபோய், நெற்றி

யின் மேற்பட்டிருக்கிற ஒப்பற்ற ஆயிரம் இதழ்களை யுடைய கமலத்தின்மேல் வீற்றிருக்கின்ற சோதிவடிவ மாகிய சிவத்தைத் தரிசித்து, எம்முடைய எண்ண த்தை நிறைவேற்றுவோமென்று முயன்றெழுந்து, தவ த்திற்கு வேறொருவருடன் சேர்ந்திருத்தலும் கூடாது என்று பெரியோர் சொல்வதற்கு முரணாய் மனைவி யும், கணவனுமாகிய இவ்விருவரும் காட்டிற் சென்று, பத்மாசனத்திலிருந்து, தேற்றாங்கொட்டையால்தெளி ந்த நீர்போலப் பிரபஞ்சவாழ்க்கையினின்றும் தெளி ந்த மனத்தைத் திறந்துந்திறவாத கண்களோடு தமது தவப்பயனாகிய இஷ்டலிங்கத்தில் பிறழாது அமையும் படிவைத்து,உடம்பு தறிபோலசைவற இருக்க நேராய் இருந்து,சஞ்சரிக்கிற இடைபிங்கலையென்னும் இரண்டு நாடிகளின் வழியேபோய்த் திரும்புகிற வாயுவைக் கும்பித்துநடுநாடியாகியசுழுமுனையிற்செலுத்தி, அறிவு சிறிதும் சலிக்காமல் அம்ஸ மந்திரத்தை மாறிக்கொ ண்டு,குறியைக் கடந்திருந்த ஒப்பற்றபொருளைத் தியா னித்துக்கொண்டு அவ்வனத்தில் இருந்தார்கள். இவர் களது பிராணவாயு நிற்க, அதன்வழியே மனதுநின்று, மனதுநிற்க ஐம்பொறிகள் நின்று, பொறிகள் நிற்க அவற்றின் விஷயங்கள் நின்றன. அந்தப் புலன்கள் நின்றமையால், பிரபஞ்சந் தோன்றுமல் மனத்தில் பரி சுத்தமாகிய பரமானந்த பரஞ்சோதியாகிய பரமசிவம் தரிசனந் தந்துநிற்கத் தரிசித்து வந்தார்கள். குவிந்த மனத்தோடு இத்தன்மையாகிய சிவயோக சமாதியில் ஒன்பது மாதகாலம் பரிபூர்ணமாக விருந்தபொழுது, இவர்கள் நெற்றியின்மேல் பரஞ்சோதியாகிய பரசிவம் திரண்டு குழந்தைவடிவாகி வெளிப்பட்டு நிற்க, அந்தப் பரஞ்சோதி யுருவை விரும்பியிருந்த இவ்விருவரும் கண்களைவிழித்து நோக்கினார்கள்.அந்தத் தாய்தந்தைய ரிருவருக்கும் ஒருபோதும் அறியாத சந்தோஷமானது மனத்தில் அதிகரிக்க பரஞ்சோதியாகிய குழந்தை

வெப்பம் நீங்கிப் பூமியிலிறங்கிப் பிரகாசியாநின்ற சூரியனோ? பனிநீங்கி எங்களை ஆள விரும்பிவந்த சந்திரனோ? இடுகின்ற விறகை யெரிக்காத பெருநெருப்போ? அறியவொண்ணாதென்று சொல்லும்படியாகப் பிரகாசித்து, மாயை நீங்கின நிராங்காரனையும், சுஞ்ஞானியையும்போல மலவிருளைக்கெடுத்து வளராநின்ற சச்சிதாநந்த சொரூபமாகிக் கெடாத தீபமாகிய குழந்தையை, பிறவிக ளெடுத்தலைந்து ஆங்காரமும், அஞ்ஞானமும் நிறைந்த மானிடரும், தேவர்களும், முனிவர்களும் மற்றையோரும் பெறுவார்களோ? கச்சணிந்த இளமைபொருந்திய மெல்லிய முலையையுடைய மாயையே! பேராநந்தத்தையே புதல்வனாகப் பெற்ற அந்த நிராங்கார சுஞ்ஞானிகளுக்கு ஒப்பாவார் தமக்குத் தாமேயன்றி வேறொருவரிலர். ஏனென்றால், விஷயங்களுக்குள் ஒரு ஆநந்தத்தை யடைந்து அப்பொழுதே நீங்குகின்ற உலகத்தாரை நாம் ஒப்பாகச் சொல்லக்கூடாதாகையாலேதான். முற்காலத்தில் பாசம் நீங்கிய சில பெரியோர்களும் பரமசிவத்தைத் தமக்குள்ளே தரிசித்து வாழ்வடைந்தார்களல்லாமல் கண்ணுக்குக் காட்டினவர்களில்லை. அடிமைப்படுகிற இந்த நிராங்கார சுஞ்ஞானிகள் தம்முள்ளே கண்டுகொண்ட சோதியை உலக முய்யும்படி குழந்தையாக்கிக் காட்டினார்கள். பரமசிவன் குழந்தையாய்த்தோன்றினநாளில் சங்கும் தெய்வதுந்துமியும் ஒலிக்க, புஷ்ப வருஷம் வருஷித்தது; திசைகளெல்லாம் பிரகாசித்தன; மலட்டுப் பசுக்கள் கன்றை யீன்றன; உலர்ந்த தறியும்தளிர்த்தது; சேறு கலந்த நீர் தெளிந்தது; பாவிகள் மனமுந் தெளிந்தன; அருள் மிகுந்த துறவிகள் மனமுஞ் சந்தோஷித்தன. வருந்தாத மனத்தையுடைய நிராங்காரன் ஞானப்பிழம்பாகிய பிள்ளையை மெய்யாகிய அகக்கண்ணின லல்லாமலும், இந்தப் புறக்கண்ணினலும் காணப்பெற்றோமேயென்று தன்னை யறியாதசந்தோஷ

சாகரத்தில் மூழ்கிக் கரை யேறுதவனும் மார்போடு பொருந்தத் தழுவிக்கொண்டு கையா லெடுக்க, எங்கு நிறைந்த கனவானுகிய அல்லமன் கனத்திராமல் இலே சாயிருந்தான். அப்பொழுது சிவந்த அதரத்தையுடைய சுஞ்ஞானியானவள் தன் கணவனுகிய நிராங்காரனை வணங்கி, என் பிராணநாதா! இக்தப் பிள்ளையின் தன் மைகளை யெல்லாம் எனக்கு விஸ்தரித்துச் சொல்ல வேண்டுமென்று கேட்க, அந்த நிராங்காரன் அவளை நோக்கி, பெண்ணே! சைவாகமங்களும் வேதங்களும் சொல்லுதற்கரிய நமது குழந்தையின் பெருமையை நானெப்படிச் சொல்லுவேன் என்று அதிசயித்துச் சொல்லுவான். மூங்கிலாற் செய்தாற்போன்ற தோள் களையும்,கொவ்வைக்கனிபோன்ற அதரத்தையும்,விசா லமாகிய கண்களையு முடைய மாதே! நாம் பூமியிற் குழந்தையாகப் பிறவாமல் நம்மிடத்திற் குழந்தை யாகப் பிறந்தவன், மதுரமாகிய பாற்கடலில் நித்திரை செய்வோனுகிய திருமாலும், செந்தாமரை மலர்மேல் வாசஞ் செய்யும் பிரமனும் காணவொண்ணுத அடி முடிகளையுடைய பரமசிவனேயாவன், இதற்குச் சந் தேகமில்லை யென்றுன். பசும் பொன்மலைபோல வளர் ந்தும் இடையின் வறுமையை நீக்க அறியாத இள முலையையுடைய மாயையே! சுஞ்ஞானித் தாயானவள், புணர்ச்சியினுலல்லாமல் தவயோகத்தால் பெற்றபொ ழுதில், தன் மகனைச் சான்றேனென்று சொல்லக்கேட் டதனுல் உண்டாகிய உவகைக் கடலில் மூழ்கினுள். மயக்கம் பொருந்திய மனத்தோடு தமது புத்தியினுல் ஒன்றைச் சொல்லி, இதுவே உண்மைப் பொருளென் றும், இதனையே வேதாகமங்கள் சொல்லுமென்றும் யுக்திகளைக்கொண்டு சாதித்து, பிரத்தியக்ஷமான பொ ருளை நிந்திக்கிற சமயவாதிகளின் மயக்கத்தை அல்ல வென்று சொல்லுவோனுதலால் இந்தப் பிள்ளைக்கு, அல்லமாப் பிரபுவென்னும் பெயரிட்டார்கள். ஒப்பற்

றவனாகிய கடவுள் இருவினைகளைக் காரணமாகக்கொ ண்டு கொடுக்கிற சரீர முடையவனல்லாமல் அந்தக் கடவுளே யொரு மாறுட வடிவாகி நடிக்கும் திருவுரு வையுடையவனாதலால், அல்லமன் தான் நினைத்தபடி தவழ்ந்து, பின்பு நின்று, மெல்ல நடந்துபோய், அலங் கரிக்கப்பட்ட மணிமாளிகைகளையுடைய வீதியில் திரு விளையாடல் செய்தான். தாயாகிய சுஞ்ஞானியானவள், எம் முயிரே வருக, கண்ணினாலுண்ணுதற்குரிய அமிர் தமே வருக, எமது குலவிளக்கே வருக, அழியாச் செல்வமே வருக, பாசநாசனே வருக, ஞான விநோ தனே வருக என்று சொல்லி மனமகிழா நிற்க வந்து மேல் விழுவான். மணிதனைப்போலவே விளையாடுகிற அல்லமன் மாயையாலுண்டாகிய நாமரூபங்களைக்கெடு த்து என்றும் அழியாத பரப்பிரமப்பொருளை அறி யும்விதமாய் அறிவித்தல்போல, பேதைப் பருவப் பெண்கள் மணலினாற் செய்த சிறு வீடுகளைத் தன் பாதங்களால் அழித்துவிட்டுப் போயுலாவுவன். உலக மானது நான் அசைந்தால் அசையும் என்றறிவித்தல் போல, அழகிய வீதியில் பொன்னினாற் செய்யப்பட்ட சிறுதேரை யுருட்டுவன். அடக்குதற் கரிதாகிய மனமானது இதனை நகர்க்குமென்று சொல்லுவோன் போல, நயமுடையாமைபோன்ற அல்லமன் பம்பரமாடுவன். பெருமைபொருந்திய பழைய வேதங்களும் சொல்லு தற்கரிய புகழையுடைய அல்லமன், எதிரே யிருக்கிற கண்ணாடியைக்கொண்டு தம் முகத்தைப் பார்த்துக் கொள்வோர்போல, ஞானத்தையுடைய குருவைச்சேர் ந்து, அவனையெதிரே வைத்துக்கொண்டு, தனதுபெரிய வித்தைகளையாராய்ந்து நலநூல்களைக் கற்றல்போலப் பலகூத்துக்களைச் செய்தான். தாய்தந்தையருடைய மன ங்களிக்கத் தனதருளினால் பாலலீலை செய்துகொண் டிருப்பவனாகிய அல்லமன் உலகமுழுதும் போய் மனி தருடைய வலிய பாவங்களைக் கெடுக்க நினைந்து, தாய்

தந்தையரோடு இதனைச் சொல்லத் தொடங்கினன். உங்களுடைய பாவனையின் ஒருமைப்பாட்டினல் நான் ஒரு குழந்தை வடிவாகி இவ்விடத்திற் பொருந்தி யிருந்தேன்; இனி உலகமுழுதும் போய் அங்கங்கு வசிக்கின்ற முனிவர் முதலியோரது எண்ணத்தை முடிப்பேனென்று எம்பிறைவனுகிய அல்லமன் சொல் லக்கேட்ட தாய் தந்தையர் சொல்லுகிருர்கள். பிறவி யாகிய கடலிற்ருேன்றி குற்றத்தையுடைய எங்களுக் குக் கிடைத்த ஒரு தெப்பத்தை நிகர்த்தவனே! எங் களைவிட்டு நீங்குவையாயின் முத்திக்கரையில் ஏருமல் மூழ்கிவிடுவோமென்று மனம் வருந்திச்சொல்ல, ஞான சிகாமணியாகிய அல்லமன் அவர் தெளியும்படி சொல் லலுற்ருன். சிறிதுபொழுதும் உங்களைவிட்டுநீங்கமாட் டேன், நீங்கள் மனந் தளரவேண்டாம். நான் சொன் னதைக்குறித்து உங்களுக்குச் சந்தேகமா யிருந்தால் வேதாகம சாஸ்திரங்களைக்கற்ருேர்களைக்கேட்டு நிராங் காரசுஞ்ஞானிகளை இவ்விடத்திற் பொருந்திய அல்ல மன் நீங்குவானுயின்சொல்லுங்களென்று அறியுங்கள். இப்படியாகச் சொல்லி அழிதற்குரிய இந்தச் சரீரமுத லியயாவும் அந்நியமென்று த~ரி சேஷித்து நின்ற தம்முள் வேறல்லனென்கிற நிலையிலே யிருந்து தாதாத் மியம் பொருந்துந் தன்மையைச்சொல்லி அவரறியும் படி அறிவித்தான். தாய்தந்தையர் இல்லாதவனுய் எல் லாப்பொருள்களுக்கு முதல்வனுகிய பரமசிவன்பிள்ளை யாகி, குழந்தை யில்லையென்கிற மனோ துக்கத்தைப் போக்கவும் தேசிகோத்தமனுய் மேலான முத்தியைக் கொடுக்கவும் கிடைக்கப்பெற்றவர்கள் இந்தப் பெருந் தவத்தினராகிய நிராங்கார சுஞ்ஞானிக ளல்லது வேறொருவரு மில்லையென்று உலகத்தார் துதித்தார் கள். ஆதலால் அழகையுடைய அல்லமனது அருளி னல் உண்டாகிறது நன்மையாகிய மோக்ஷமே என் றிப்படி பரமசிவன் பார்வதி தேவிக்குச் சொல்லும்

போது, அவ்விடத்தில் உடனிருந்தேனென்று பேரறி வையுடையவளாகிய விமலை சொன்னாள். எள்ளில் நெய்போலவும், விறகில் நெருப்புப்போலவும், பூவில் மணம்போலவும் கலந்து எவ்விடத்திலு மிருந்தாலும் அருள் வள்ளலாகிய அல்லமன் இனிய சுவையுள்ள பாலானது முலையினின்றும் ஒழுகுதல்போல அடியாரு டைய மனத்திலிருந்து விளங்குவான்.

விமலைகதி முற்றுப்பெற்றது.

---

## ஏழாவது

# மாயை கோலாகலகதி.

சிறந்த அழகையுடைய விமலை இவ்வாறுசொல்ல, மல்லையரும்பை யொத்த வெள்ளிய பற்களையுடைய மாயையானவள், தான் வந்த காரியத்தை யாலோசித்து அந்த அல்லமனைத் தழுவுவேனென்று எழுந்தகாலத் தில், அல்லமன் நீங்கிச்சென்ற தன்மையை யாவருமறி யச் சொல்லுவோம். பாலசந்திரனையணிந்த பரமசிவன் பார்வதி தேவிக்குச் சொல்லிய சரித்திரத்தை விமலை சொல்லக்கேட்ட மாயையானவள் மனந்தளர்ந்து, விம லையை நோக்கி, அல்லமன் என்னும் பெரியோனை நாம் அடைவ தெப்படி சொல்லென்றாள். அதுகேட்ட விமலையானவள், மாயையே! நீபரமசிவனைப் பூசைசெய் வையாயின் அல்லமன் கண்ணுக்கெதிரே வந்து நீ விரும்பினதை உனக்கு அருள்செய்வனென்று சொன் னாள். அப்பொழுது மாயையானவள், விமலையே! நீ சொல்லுமுன்னமே அருள்வடிவாகிய மதுகேசனைப் பூசைசெய்து துதித்தேன். அந்தப் பூசை தரும்பயன் ஒன்றுமில்லை யென்பதை யறிந்திருக்கிறேன் என்று மனம்வாடிச் சொன்னாள். சொல்லகலும், விமலையான

வள்; இவள் பரமசிவனைப் பூசைசெய்வதில் பயனில்லை யென்று சொன்னாளே, இது என்ன புதுமையென்று காதை மூடிக்கொண்டு அர அரவென்று உச்சரித்து மனங்கலங்கிச் சொல்லுகிறாள். ஓ மாயையே! சிவ பூசைசெய்தும் பிரயோசந மில்லையென்று சொன்னாய். பிரமவிஷ்ணுக்கள் முதலாகிய தேவர்களுக் காணுவும் விருப்பத்தோடு சதாசிவன் பூசைசெய்தாலன்றி ஒரு எண்ணமாவது நிறைவேறுமோ? மேகலையை யணிந்த அல்குலையுடைய மாயையே! தேவேந்திரனும் பிரமனும் விஷ்ணுவும் மற்றைத் தேவர்களும் பந்தங்களற்ற முனிவர்களும் பூமியினிடத்தில் சிவ பூசையை விதிப்படி செய்த சிவாலயங்களைக்கண்டதில்லையா? உமாதேவியும், தெய்வப் பெண்களும், திருப்பாற் கடலிற்றோன்றிய திருமகளும், மாதவர் மனைவியரும், சரசுவதியும் நெற்றிக் கண்ணையுடைய பரமசிவன் பூசையால் தத்தமக்குரிய பதவிகளை யடைந்த தன்மையை நீ சிந்தித்தா யில்லை. தளர்கின்ற இடையையுடைய மாயையே! எமது தலைவனாகிய பரமசிவன் பூசையால் அஷ்டமாசித்திகளையும், ஆயுளையும், மேன்மையையும் காமியங்களில் விருப்பமுடையவர் அடைவார்கள். அந்தக்காமிய புத்தி யில்லாதவர்கள் மோக்ஷத்தை யடைவார்கள். பெருமைபொருந்திய மானுடப்பிறவி வாய்த்தும் நலமலர்களால் சிவபிரானைப் பூசைசெய்யாதவராகி தமது ஆயுளை யெல்லாம் பயனில்லாமற் கழிப்பவர்கள் அறிவீனரை யெண்ணும்பொழுது முதலில் நிற்பார்கள். மூங்கிலை வென்ற தோள்களையுடைய மாயையே! முக்கண்ணனாகிய பரமசிவனது பாத தாமரைகளை மணம்பொருந்திய மலர்களைக் கொண்டு அருச்சிப்பவர்களைச் சர்ப்பாபரணமில்லாத சிவபிரானென்று பாவித்து அவர்களுடைய பாதத்தை மனமகிழ்ச்சியோடு உலகத்தார் துதிப்பார்கள். நோயும் பிறப்புமில்லாத பரமசிவனைப் பூசைசெய்து தலைக்குப்பொருந்த ஒருசந்திரனைப் பெற

றுக்கொள்ளாதமனிதனுகப் பிறத்தலினும், பெரியோர் களால் இகழப்படாத ஒருநாய்ப் பிறப்பு மிகவுஞ் சிறந் தது. ஒப்பில்லாத சிவாகமங்களில் சொல்லப்பட்டமந்தி ரங்களையும் கிரியைகளையும் குற்றமறவுபதேசிக்கிறசதா சாரியனது அநுக்கிரகத்தால் பெற்றுக்கொண்டு சிவ பூசை செய்பவர்கள் மேன்மையாகிய சிவபூசையின் பயனை யடைவார்கள். பரமசிவனது ஐந்து முகங்க ளும் அருள்செய்த ஆகமத்தில் சொல்லப்பட்ட விதிப் படி நன்றாகச் செய்தாலும் அளவற்ற அன்பானது மனத்தில் இல்லையாயின், செய்த பூசை பயன்தராது. அருச்சிக்கிற தன்னையும், அருச்சிக்கப்படுகிற ஈசுவர னுடைய இயல்பையும், அவனது பூசைக்கு வேண்டிய திரவியங்களையும் அறியத்தக்கவற்றை யறிந்து உயர்ந்த ஆசாரியனது அருளினுல் அறிந்து தெளியவேண்டும். மந்திர தந்திரங்களில் குற்றங்கள் நேரிட்டனவோ, மனது வெளிப்புலன்களிற் சென்றதோ, சிவபூசையி னுல் பயனில்லையென்று சொன்னுய். அப்படி சொன்ன தற்குக் காரணம் யாது? சொல்லக்கடவா யென்றுள். இப்படி விமலை சொல்லுதலும், தான் செய்த பூசை யால் மாயையை வென்ற அல்லமன் கண்ணிற் காணப் பட்ட நன்றியை யறியாதவளாய், அந்த அல்லமன் தன் கையி லகப்படாமையால் மிகுந்த துன்பம் மனத் திற் பொருந்த, மாயையானவள் சொல்லுகிறுள். வே றொன்றையும் நான் நினைத்ததில்லை. எமது குருநாதன் சொன்ன நெறியால் இதுவரைக்கும் சிவபூசை செய் தும் பயன் சிறிது மில்லையென்று சொன்னுள். அது கேட்டவிமலையானவள், பக்குவர்களுக்குப் பெரியமந்தி ரங்களை உபதேசிப்பதன்றி அபக்குவர்களுக்கு உபதே சித்தால் அது பயன்படுமோ? யான் நன்னெறியை பல முறை சொல்லியும், அதனை ஆலோசிக்கின்றிலள்.

ஐயர்! மாயையானவள் கலங்கிய மனதை யுடையவ ளாகி மயக்கங்கொண்டிருந்தாள்; அறிவில்லாதவர்களு

க்கு அறிவிக்கப் புகுவோரும் அறிவில்லாதவ ராவ ரென்று விமலையானவள் தன் மனஞ் சோர்ந்து, இந்த மாயையினது மனம் கவலைகொண்டிருந்தது, இதற் குக்காரணம் இன்னதென்று நான் அறிந்துகொள் வேன் என்று தன் மனத்தில் நிச்சயித்துக்கொண்டு, மாயையை நோக்கி, உன்மேல் மன்மதனது புஷ்ப பாணம் பட்டதாக எனக்குத் தோன்றுகின்றது. ஆத லால் அந்தச் செய்தியை எனக்கு ஒளிக்காமல் சொல், லக்கடவை பார்வதி தேவிமேல் ஆணைப்படி என்று சொன்னாள். அதுகேட்ட மாயையானவள் ஆணைக்கு அஞ்சி, சிதம்பரத்தில் நடனஞ்செய்கின்ற சபாபதியும் விரும்புகின்ற மத்தளத் தொழிலை யுடையவனும், கண் களுக்கு உணவு என்று சொல்லத்தக்க பேரழகனும் ஆகிய ஒருவன் வந்தான். அவனைக்கண்டளவில் நான் என்னைக் காணேன் என்று ஞானிகள்போலச் சொன் னாள். அவனது பெயர் அல்லமன். அவனுக்கல்லது என் மனக் கல்லானது உருகாது. முக்கண்ணனாகிய சிவபெருமானுக் கன்றி மேருமலை வில்லுருவாவதுண் டோ? ஓ விமலையே! உன்னைப் பார்க்கவேண்டிய புண் ணியம் ஒன்றிருந்தலால் இதுவரையில் நான் உயிர் தரித்திருந்தேன் என்று சொன்னாள்.

அதற்கு விமலை சொல்வாள்: மாயையே! நீ சொல் லிய அல்லமன் நான்சொல்லிய அல்லமனே; அவன் விரும் புகிற உனக்குத் தகுதியான மாறுட வடிவங்கொண்டு வந்தனன்போலும். அவன் நல்ல ஞானக்கண்களுக் கன் றித் தன்னுண்மை வடிவைக் காட்டமாட்டான் என்று சொன்னாள். அதைக் கேட்ட மாயையானவள் விம லையை நோக்கி, தனக்குத்தானே நிகராகிய அல்ல மன் சச்சிதானந்த வடிவாகிய சிவனென்று சொன் னாய், அத்தன்மை யுடையனல்லன். இவன் மத்தளத் தொழிலையுடைய அல்லமன். நீ முன்னுக்கும் பின்னுக்

கும் விரோதமாய்ச் சொன்னாய் என்றாள். அதற்கு விமலையானவள் ஓ மாயையே! அவ்வல்லமன் தான் விரும்பிய உருவத்தைக்கொண்டு வேண்டியபடி செய்வன். அவனுக்கு இந்தக்காரியமாகுமென்றும், இந்தக் காரிய மாகாதென்றும் உன் மனத்தினால் நிச்சயிக்கக் கூடுமோ என்றாள். அப்பொழுது மாயையானவள் விமலையை நோக்கி, இனி உன்னோடு தர்க்கித்துப் பேசுதல் எனக்குத்தகாது; நடனசாலையில் என்மனத்திற்பொருந்திய அல்லமனைக்காட்டுவேன், நீ அவனைப்பார்த்துப்பின்பு இத்தன்மையனென்று சொல்வாயாக. பல நூல்களாலும் ஆராய்ந்தறிதற் கரியவனென்று நீ முன் அறிவித்தவனேயாயின் அப்படிப்பட்டவனது வல்லமையை நான் பார்ப்பேனென்று சொல்லி, ரத்நம் வாங்க விரும்புவோர் அந்த ரத்நபரீக்ஷையில் வல்லவரை உடன் கொண்டு செல்வதுபோல வந்த விமலையை உடன் கொண்டு சென்று, தான் பூசைக்குப் போவதுபோல மதுகேசரது ஆலயத்தில் பிரவேசித்து, மதுகேசனைப் பூசித்து வணங்கித் துதித்து, விமலையோடும் நடனசாலையினுள்ளே சென்று, அல்லமன் இவன்தான் இவன்தான் என்று அறியும்படி சும்மாவிராமல் சொல்லென்று அடிக்குங் காட்சிபோல வல்லவனாகிய அல்லமன் மத்தளத்தைத் தாம் தாம் என்று அடித்தளவில், மாயையானவள் தன் மனம் ஊசலாடவும், பாதத்திலணிந்த மணிச் சிலம்புகள் ஒலிக்கவும் முன்னே நின்ற ஞானவடிவினனாகிய மதுகேசனிடத்துத் தன் பார்வையையும், தன்பின்னே மத்தள மடித்துநின்ற அல்லமனிடத்துத் தன் மனத்தையும்நிலைபெறவைத்து நின்று, தன்னைப் பார்ப்போருடைய கண்களும் மயக்கமடைந்த மனங்களும் தன்மேல்வந்து விழும்படி நடனஞ் செய்தாள். இந்த மாயையின் மனத்தில் பொருந்திய விரகம் செந்நிறஞ்சேர்ந்த பளிங்குக்கொப்பாகித் தன்னிடத்தில் காணும்படி அல்லமன் விளங்கி நின்றான்.

மலையி னிடத்தில் பொருந்திய சத்துவமுதலிய குணங்கள் சேர்ந்து பிரமத்தினிடத்தில் காணப்படு மென்று சொல்லுவதும் உண்மையன்றோ? ஆட்டுவித் தற்பொருட்டு வந்த அல்லமனது மத்தளவோசையின் வரிசைக்குச் சதிதப்பிய நடனஞ்செய்து வெட்கமுறா மல் சொல்லுக்கெட்டாத ஞானக்கடலாகிய அல்லமனை. மாயையானவள் வாயாற்சொல்ல மகளிர் கூட்டத்தில் வெட்கமுற்று மனம் வெருகி நின்றாள். நின்று, பிறகு கையொடு செல்லாநின்ற கடைக்கண்ணால்மாயையான வள் காட்ட, அல்லமனை விமலையானவள் கண்டு, அதி சயமுடையவளாய் உலகத்திலுள்ள மனிதர்களுக்குள் ளே இவனைப்போல வடிவழகுள்ளவனை எங்குங்கண்ட தில்லையென்று ஆலோசித்து, விருப்பத்தைத் தருகின்ற. அல்லமனே இவ்வுருவங்கொண்டு இந்த மாயை செய் கின்ற பூசையின் பயனைக் கொடுத்தற்கு வந்தானோ? பெரிய தவத்தினால் பிறந்த மற்றொரு புருஷனோ? என்று விமலைசந்தேகித்துத் தெளியாதவளாய் நிற்கும் படி அல்லமன் அவளை மயக்கி நின்றான். இருளில்லாத போது தூரவழியில் ஒருவனைப்பார்த்து அவன்பொ ருந்தவருதலையும் போதலையும் சந்தேகித்து அறியமாட் டாதவள்போல அல்லமனை விகாரத்தையுடைய மனி தனென்றும் விகாரமில்லாத கடவுளென்றும் விம லையே மயங்குவளாயின மாயையை வெறுத்துக்கொள் வதென்னை? நீரின் ஆழத்தைக் கோலால் அறியும் தன் மைபோல இவ்விடத்தில் நின்றவனது குணத்தின் தன் மையை மாயையினால் சந்தேகமில்லாமல் அறிவே னென்று அழகுக்கிருப்பிடமாகிய வடிவத்தையுடைய மாயைக்கு அவனே அல்லமனென்று கண்ணால் காட் டினள். சர்ப்பகங்கணத்தை யணிந்த மதுகேசனது சந்நிதியில் தன் கண்களால் இளைஞரது மனவலியை நீக்கி ஆடுகின்ற மாயைக்குக் கைலாசத்திலிருந்துவந்த விமலையானவள் கண்ணினாலேகாட்ட, அந்த மாயையா

னவள், ஞானக்கண்ணிற்குக் காணப்படுகின்ற அல்லம னைக் கண்டறிந்தாள். அற்பமாகிய காமத்தைக் கருதி நின்றவளாகிய மாயை தன் மனத்திலுள்ள ஆசை கெட்டு வளம்பொருந்திய கைலாசகிரியில் சொல்லி வந்த சபதம் மனத்தில் தோன்றியவளில் சுழன்று டிக் கொண்டேபோய் அல்லமன் மீது விழுகின்றவள் போல மேல்விழுந்து பிடித்துக் கட்டிக்கொள்ள நினை த்துச் சென்றாள். அல்லமன் அந்த மாயையின் கரு த்தை யறிந்து, இந்த மாயையின் மனத்திலிருக்கிற காமத்தை இவ்வுலக மறியச்செய்து போகின்றேனெ ன்று மனத்திற்கொண்டு, கைதவறி விழுந்த குடம் போல மத்தள முடையும்படி எறிந்துவிட்டு விரை வாக ஓடினன். இந்த மாயைக்கு இத்தனை யாட்ட மெல்லாம் இதனாலேயாமென்று நினைத்து மத்தளத் தை எறிந்துவிட்டுப் போவதுபோல அல்லமதேவன் போதலும், அங்கிருந்த மாதரெல்லாம் இவன் பயித் தியங்கொண்டானோவென்று மயக்கங்கொண்டு தளிர் போன்ற தமது கைவிரல்களை முடக்கி கர்ணமூலத் தில் வைத்து நின்றார்கள். இதுவரைக்கும் மறைத்து வைத்த இந்தமாயையின் செய்கையை உலகமெல்லாம் அறியும்படி மத்தளமடித்து அதையுடைத்து வெளிப் படுத்தினன். இனி நமது அரசன் மகளாகிய மாயை க்கு உயிர் நில்லாதென்று மனம் வருந்தினார்கள். அப் போது மாயையானவள், கலவிசெய்கிற தலைவன்விட்டு நீங்க அவனிடத்திருந்து தன் கைக்கு வருந் திரவியத் தின்பொருட்டு அழுதிரங்குகிற வேசையர்போல, இப் போது மன்மதன் செய்கிற சண்டைக்கே யல்லாமல் தான் கைலாசத்தில் சொன்ன பிரதிக்ஞை வார்த்தை தவறிப்போயிற்றே யென்று அதற்காக மனங் கலங்கி னாள். இவ்வாறு கலங்கிநின்ற மாயையின் மாலைக்கால த்துத் தாமரைமலர்போன்ற முகத்தைக் கண்டு, அது வாயிலாக அவள் மனோதுக்கத்தை யறிந்து, மாயை

யே! நீ மனம் வருந்தா தொழிவாயாக, உன் பிராண நாயகன் போன இடங்களிலெல்லாம் போய் அவனைத் தேடிக் காண்போம் என்று விமலை சொன்னாள். இதைக்கேட்ட மாயை மனந்தெளிந்து ஆண்மானைத் தொடர்ந்து செல்லுகின்ற பெண் மான்போல அல்லமனைத் தேடிக்கொண்டு காட்டு வழியே சென்றாள். அவளது தோழிமாரும் அவளைத் தொடர்ந்து சென்றார்கள். அப்பொழுது கண்டோர் யாவரும், இந்த மமகாரராஜன் தவஞ் செய்து பெற்று, அரசர்க்கும் விவாகஞ் செய்து கொடாமல் முக்கண்ணனாகிய சிவபிரானுக்கென்று வைத்திருந்த அருமைப்புதல்வியாகிய மாயை, ஒரு மத்தளிகன் பின்னே போனாள், அந்தோ! பெண் பெற்றவர்கள் அந்தப் பெண்ணைப் பத்து வயதுக்கு மேல் விவாகஞ் செய்துகொடாமல் வைத்திருப்பது பாவமென்று சொல்லி யிகழ்ந்தார்கள். அற்பமாகிய காமமானது பழிபாவங்களை யுண்டாக்கும்; கீர்த்தியையும் தருமத்தையும் அழிக்கும்; தன்னால் வருஞ் சிற்றின்பத்தையும் அதனால் வருந் துன்பத்தையும் நல்ல பரம்பரையையும் சிறந்த விரதங்களையும் நல்லொழுக்கத்தையும் மேன்மையையும் இறப்பையும் எண்ணாதிருக்கச்செய்யும் என்று பெரியோர் சொல்லுவார்கள்.

பஞ்சின்மேல் மிதித்தாலும் பதைபதைக்கின்ற மெல்லிய பாதங்கள் பருக்கைக் கற்களின்மேல் மிதிப்பதைக் குறித்து அஞ்சாமலும், நீர் பருகவும் விரும்பாமலும், சூரியகிரணமாகிய வெயிலின் வெப்பத்தைக் குறித்துப் பயப்படாமலும் தன் மனத்தை அல்லமன் மேல் வைத்து அந்த மாயையானவள் சென்றாள். கொடிய காமாக்கினியினால் சரீரம் வெந்து மனங் கருகிய ராஜ குமாரியாகிய மாயை யல்லாமல் பாற்கடலிற் பிறந்த ஸ்ரீதேவியானவள் அந்தப் பாலை நிலத்தில் போவாளாகில். நீரில் தாவாநின்ற இளங் கெண்டை

யானது சுடு மணலில் விழுந்ததுபோலத் தளர்வாமா. மாயை சென்ற கொடிய பாலைநிலம், யானைத் துதிக் கையை நிகர்த்த நீர்த்தாரைகளை மேகமானது இடை யறாமல் நெடுங்காலம் பெய்தாலும் நெருப்பினாற் காய்ச்சப்பட்ட இரும்பின்மேல் நகத்தால் தெறித்த நீர்த் துளிபோல விரைவாகச் சுவறிப்போம். திருமால் இவ்வுலகத்தை யுண்டபொழுது தன் வயிற்றி லிராமல் இந்தப் பாலைநிலத்தை அப்பொழுதே உமிழாவிட்டால், சரீரம் பதைத்து, சமுத்திரத்தில் விழுந்ததனாலும், வெண்ணெ யுண்டதனாலும் வெவ்விய தாபம் நீங்கிப் பிழைத்திருக்கமாட்டான். நாயினது நாவிலுள்ள நீரைச் சிறிய முயற்குட்டிகள் நக்குகிற கொடிய பாலைநிலத் தில் தன்னை மறந்து பரவசப்பட்டு நடந்த மாயையின் பின்னே தொடர்ந்து போகின்ற மாதர்களுடைய வாயில் நீர்வற்றிக் கண்களில்வந்து சுரந்தன. அந்த மாதர்கள் கானலை நீரென்று நினைத்துச் சிறிது தூரம் விரைந்து சென்று, அது நீரல்லாமையால் மனந் தளர்வார்கள். கடைவாயை நாவினால் தடவி, ஒரு கையால் முன்றானையைத் தங்கள் முகத்துக் கெதிரே வீசிச் சரீரம் தளர்வார்கள். ஆ இந்த வேனிற்காலம் மிகவும் கொடியதேன்று தம் விதியை வெறுத்துக்கொள்வார்கள். மாதர்கள் இவ்வாறாகத் தொடர்ந்து பின்னேவர, அழகையுடைய மாயையினது தாமரைமலர்போலும் பாதங்கள் பாலைநிலத்தில் நடந்து வருந்தினவாதலால், அந்த அல்லமதேவனைத் தடுத்து உதவிசெய்து மாயையோடு உறவுசெய்து கொள்வோமென்று மான்கள் முன்னே யோடும். கூந்தலானது மேலேபரந்த மேகத்தின் தோற்றத்தைத் தருதலாலும், அதரமானது இந்திரகோபத்தைக் காட்டலாலும், தனங்களின் மேலிருக்கும் முத்துமாலைகள் மலையருவியை நிகர்த்தலாலும், அழகிய கைகள் காந்தள் மலரின் தோற்றத்தைத் தருதலாலும், கார்கால மென்றெண்ணி மயில்கள்

களிக்கும்படி மாயையானவள் காட்டிற்கு வந்தாள். சிங்கமும் யானையும் தங்களுக்கு வேலை செய்யும்படி தவஞ் செய்துகொண்டு அந்த வனத்தில் வாசஞ் செய்கிற முனிவர்கள், மாயையினது தனமும் இடையுமாகிய யானையையும் சிங்கத்தையும் கண்டு மனந் தளர்ந்து, மிகுந்த துக்கத்துட னெழுந்தோடினார்கள். கொடியதாகிய வாள்போன்ற வரிகளையுடைய புலியைக் கண்ட மான் கூட்டங்கள்போல, நீண்ட சடையையுடைய முனிவரர் மனங் கலங்குகின்ற நிலையும், மாதர்கள் வருந்துகிற துக்கமும் நீங்கும்படி அல்லமதேவன் அவர்களுக்கு அருள்செய்ய நினைத்தான். மாயை நீங்கும்படி ஒருக்ஷணத்தில் ஓட்டுவேன், நீங்கள் துன்பப்படவேண்டாமென்று ஒருமுனிபோல அல்லமன்நின்றுசொல்லி, அந்த முனிவருக்கு அநுக்கிரகஞ் செய்து பழைய அல்லமனாய் மாயைக் கெதிரே தோன்றினன். நெருப்புருவாயிருக்கிற பாலைநிலத்தில் சென்ற மாதருக்குக் கங்காநதி யெதிர்ப்பட்டதுபோலக் கண்ணுக் கெதிரே தோன்றிய அல்லமதேவனது திருவடிகளைத் தங்கள் மனத்துன்பம் நீங்கிச் சரீரமுங் குளிர்ச்சியடையும்படி அடைந்தார்கள். அடைந்தவர்கள் அல்லமனைநோக்கி, மிகுந்த சேற்றில் அழுந்தி யெழுந்திருப்பவன் பிடித்த கையை நெகிழ்த்துவிட்டு நீங்குவோன்போல, வாசனையுள்ள புஷ்ப பாணம்பட்டு மனம் வருந்துகின்ற மாயையைச் சிறிதும் அருளின்றி நீங்கினாய்; அப்படி நீங்குதற்குக் காரணம் யாதோவென்றார்கள். பற்றிவிட்டது நீங்களே, நீங்கள் விட்டாலும் நான் உங்களை இதுவரையில்விட்டிலேன். இந்தச்செய்தியை இவ்வுலகமுழுதும்சொல்லும். அயலாரிடத்தில் குற்றத்தை நாடுவோரல்லது தம்மிடத்தில் குற்றத்தை நாடுவோர் இவ்வுலகத்தில் உளரோ என்று அல்லமன் சொல்லுதலும், அந்த மாதர்கள் பிரபுதேவரை நோக்கி, எங்கள் ராஜ குமாரியாகிய மாயைக்குக் காமவியாதியுண்டாவதற்கு முன்பு

கோபிக்காமலிருந்து அதுவுண்டான பிறகு இன்றைக்குக் கோபித்தாய்; என்ன காரியஞ் செய்தாய்! நீ செய்தது ஏறவிட்டு ஏணியை வாங்குதலை நிகர்த்திருந்தது என்றுசொன்னார்கள். அப்பொழுது மாயையும் அவனை நோக்கி, உன்திருமேனிபோல மனமும் நன்றாயிருக்குமென்று நம்பினேன். நீ யிப்படிப்பட்ட வஞ்சகனென்று அறிந்திலேன் என்று வன்சொற் சொல்லி நின்றாள். அதுகேட்ட அல்லமன், தடங்கண்களையும் மெல்லடியையு முடைய மாயையே! வஞ்சகமாகிய நாடகம் நடிப்பது மாயையின் செய்கையோ அல்லமன் செய்கையோ என்று தேவரையும் முனிவரையும் நீ கேட்டறிவாயாக என்று சொல்ல, அதற்கு மாயையானவள், அல்லமன் எனது நடிப்பைத் தேவராலும் முனிவராலும் சொல்லிக்குந்தன்மை, ஒரு திருடனானவன் தன் மனைவியைத் திருடப்பட்ட பொருளைக் கண்டறியும்படியாகிய நல்ல குறிகளைச் சொல்லிப்பதற் கொப்பாகும் என்று புன்சிரிப்புக்கொண்டு சொல்லுவாள். மாயை எளியவளென்று இகழத்தகுந்த சொற்களைக் கற்ற அல்லமதேவனே! திருமாலானவன் எந்த நெஞ்சினால் என்னை நீங்க நினைப்பான்? பிரமதேவனானவன் தான் மாயை யில்லாதவனென்று எந்த வாயினாற் சொல்வான்? இந்திரன் எந்தச் சரீரத்தினால் என்னை விடுவான்? எனக்குப் பயந்து மிருகங்கள் சஞ்சரிக்கிற காட்டில் வாழ்கிற முனிவர்கள் என்னை வெல்லவல்லரோ? அவர்களே என்னை வெல்லமாட்டார்களாயின், வேறு யார் என்னை வெல்லுவார்கள், சொல்லென்று கூற, அல்லமர் சொல்லுவார். வேல்போலுங் கண்களையுடைய மாயையே! எனது ஆணையைக் கடப்பவரில்லையென்று வெற்றி கூறுவையாயின், அவர்களிருக்கட்டும். நிலைபெற்று நிறைந்த உயிரின் முயற்சியினால் சொல்லிய சொல்லிலல்லாமல், நிலைபெற்ற வேதாகமங்களினிடத்து ஆராய்ந் தறிவாயாக வென்று சொன்

னாள். அதுகேட்ட மாயையானவள், பரை, பைசந்தி, மத்திமை, வைகரி என்கிற வாக்கு நான்கினையும் நீ பார்த்தாலும்நான் அவற்றுக்கும் மூலகாரணமாவேன். நான் சொன்ன இந்தச்சொல்லை எல்லா நூல்களுஞ் சொல்லும் என்று செருக்கோடு சொன்னாள். அதற்கு அல்லமர், அறிவில்லாதவளே! இவ்வுலகங்களை யெல்லாம் ஆட்டுவேனென்று சொன்னாய், உன்னை யாட்டுவோர் யாரென்று அறிந்திலை. மூடர்மாத்திரம் உன் தன்மையைக்கேட்டு மகிழ்வார்கள்; ஞானிகள் என்னை யறிந்து புகழ்வார்கள் என்றார். பசியாதிருக்க மருந்து கொடுப்பேன், என் பசிக்கு அன்னமிடுங்கள் என்பவர் போல, மாயையானவள், யாரை யாரிருந்தாட்டுவரோ அதை யறியேம்; மன்மதன் செய்யுந் துன்பத்தை நீக்கினபிறகு என் தர்க்கவாதத்தைப் பாரென்று சொன்னாள்.

அதுகேட்ட அல்லமர் ஓ மாயையே! நீ காமிய பூசை செய்தாயாதலால் நானும் காமிபோல் நடித்தேன். நீ தீய நெஞ்சினால் சபதத்தை நினைத்தாய், ஆதலால் உன்னைத் தீண்டமாட்டேன், நீ உன்தோழியருடனே போகலாமென்றார். அதுகேட்ட மாயையானவள் பூலோகத்தில் ராஜகுமாரியானவள் ஒருமத்தளிகனை விரும்பிப் பயனடையாமல் திரும்பினாள் என்னும் பழியை நிலைநிறுத்திக் கைலாசத்துக்குப்போய் தேவர்கள் கைகொட்டிச் சிரிக்கச் சபதத்தை நிறைவேற்றாமல் உமாதேவியின் முகத்தில் எவ்வாறு விழிப்பேனென்று மிகவுந் துன்பப்பட, அதைக்கண்ட அல்லமர் மாயையை நோக்கி, முன்னே கசப்பான பொருளை விதைத்துப் பிறகு அது கரும்பாக வேண்டுமென்று முயன்று பயனடையாதவர்போல, அன்பர் பக்தியினால் பெறுதற்கெளியனாகிய என்னை ஒரு சபதஞ்செய்துவந்து வலாத்காரமாய்ப் பெறவிரும்பி நின்று மனோதுக்கமடைந்தாய், இது உனக்குத் தகுமோ என்றார். அப்

போது விமலையானவள் மாயையின் துன்பத்தை நோக்கி, அல்லமரை வணங்கி, ஐயரே! மாயையானவள் கரையைச் சேரவந்த மரக்கலம் கவிழப்பெற்ற வாணி கன்போல மனங்கலங்கி நிற்கிறாள் ஆதலால், இரத குளிகையானது தன்னைச்சேர்ந்த செம்பினது குணத் தைநோக்காத தன்மைபோல இவளது குணத்தை நோக்காமல் இவளைக் கிருபைசெய்து ஆதரிக்கவேண் டும் என்று பயந்து சொன்னாள். அப்போது அல்லமர், ஓ விமலையே! பயனற்ற வோடானது ரசகுளிகையால் பொன்னாகுமானால் மாயை என்னால் சுகமடைவாள் என்றார். அதைக்கேட்ட மாயையானவள் அளிந்த பச் சைப்புண்ணில் காய்ந்து சிவந்த வேல்பட்டதுபோல வருந்திச் சொல்லுகிறாள். சாக்கிரமே ஒரு கனவாக மயங்க நீயென்னைப் புணர்ந்ததனால் வெற்றியென் னதேயென்று சொல்ல, அல்லமர் ஓ பேதாய்! கனவி லுண்ணப்பட்ட வுணவினாற் பசிதீருமோ? நீ கண்ட கனவைச் சாக்கிரமென்று மயங்கினாய், அதையறியாது நீ செருக்கிப் பேசுதல் தகாதென்றார். அதைக்கேட்ட மாயையானவள் மன்மதனை நிகர்த்த கட்டழகனே! நீ எவ்வளவு வன்சொற்களால் என்வாயை யடக்கி என் னைத் தள்ளினாலும் நான் போகேன். உன்னைக் கட்டித் தழுவிக்கொண்டு கைலாசத்துக்குப்போய் என் சப தத்தை நிறைவேற்றுவேன் என்றாள். இவள் இப்படி சொன்னது ஆகாயத்தைத் திரட்டி விழுங்குவே னென்று ஒருவன் சொல்லுவதுபோ லிருந்தது. இப் படி யிவள் சொல்லுதலும், அல்லமர், ஓ மாயையே! நீ யென்னைப் பற்றவல்லையாயின் பற்றென்று மறைந்தார். கண்ணுக்குப் புலப்படாமையால் மாயை மதிகலங்கி நிற்க, அவளுடைய தோழியரும் நமது தலைவியா கிய மாயையை இழந்தோமென்று துக்கித்தார்கள். சந்திரகிரணம் வாயில் வந்து நுழைந்தாலும் சகோர பக்ஷியன்றி வேறொன்றால் அது உண்ணப்படுமோ?

அதுபோல, அல்லமர் வந்து மாயையின் கையி லகப்பட்டாலும் அன்பராலன்றி அவளால் பற்றப்படுவரோ? பற்றப்படவில்லை. இப்படி மாயையை அல்லமர் வாதித்துவென்று தன்னியல்பில் நின்றதைக் கண்ட முனிவரெல்லாரும் அல்லமரைவணங்கித் தமது தவத்தைச் செய்யத் தொடங்கினார்கள்.

மாயை கோலாகலகதி முற்றிற்று.

---

## எட்டாவது

## வசவண்ணர் வந்தகதி.

நிலைதிரியாத அல்லமரைக் காணும்பொருட்டு, உமாதேவியின் சத்துவகலையும் வசவேசனும் சிவகணங்களும் கைலாசத்திலிருந்து தென்றிசையில்வந்த விதத்தைச் சொல்லுவோம்.

உயிர்கள் பசியால் வருந்துதற்குரிய சிறுவிலைக் காலத்தில் கடன்வாங்கின பொருளை யிழந்த தரித்திரர்போல, ஞானவடிவினனாகிய அல்லமன் மறைந்துபோதலும் மாயையானவள் மூச்சடங்கி நின்று விசனப்படுகிறாள். இவளது நிலையைச் சிலர்போய் இவளுடைய தாய் தந்தையர்க்குச்சொல்ல, அவர்கள் வெட்கமும் துக்கமும் அதிகரித்த பித்தர்போல மாயையின் பின்னே தொடர்ந்துபோனார்கள். இந்த வுலகத்தில் தாய் தந்தையர் தலைசாய்த்தற்குரிய பழியை விளைக்கிற மக்களைப் பெறுதலினும் மக்களைப் பெறாத மலடாயிருத்தலும் வலிய நோயை யடைந்திருத்தலும் நன்றென்று மனந்தளர்ந்து அரசனோடினன். மிகுந்த பசிக்குத் தசையைத் தின்ன வாய் பதைக்கின்ற வேடருடைய வலையில் மான் கன்று அகப்பட்டுக்கொள்ளப் பார்த்த தாய்மான் அங்கேபோய்ப் பதைப்பதை என் மகள் காண்பளோ? வேடர்கள் சுருக்குகளைச் சேமக்

கண்டுபிடித்துக் கொண்டுபோய்விட அவற்றின் தாய் தந்தையராகிய பறவைகள் கூண்டில்வந்து பார்த்துக் குஞ்சுகளில்லாமையால் ஏங்கி தமது மூக்கினலகிற் பொருந்திய இரை சோர்ந்து விழ மிகுந்த துக்கத்தால் வருந்திச் சுழல்வதை என்மகள் காண்பளோ? மத யானைகள் தூறுகளைவழியாக மிதித்திட்டு மரங்களை முறித்துநடக்கக்கண்டு என்மகள் அஞ்சியோடுவளோ? என்மகள் கூர்மையாகிய பருக்கைக் கற்களின்மேல் தன் மென்மையாகிய பாதங்களை வைத்துத் துன்பம் பொறுக்கமாட்டாமல் ஓடிப்பளோ? பாலை நிலத்தில் மேனி துவண்டு தாகத்துக்குத் தண்ணீர் கேட்பளோ? என்று எண்ணித் தாயானவள் துன்பமடைந்து சென்றாள். திருமகளை யொத்த மாயையென்கிற மகள் பொருட்டு அரசர்க் கரசனாகிய மமகாரன்படுகிற துன்பத்தைக் காணுதற் கேதுவாகிய கணெழான்றிருந்த தென்றெண்ணி மயங்கி அந்தவனவசை மாநகர ஜனங்கள் அவ்வரசன்பின் தொடர்ந்து சென்றார்கள். பிறகு மமகாரன் தன் மகளாகிய மாயையை நோக்கி, நான் அருந்தவஞ்செய்து உன்னைப் பெற்றதற்கு நீ நல்ல உதவிசெய்தாய் என்றான். தாயாகிய மோகினி, என் மகளாகிய மாயையே! நீ என்னை நீங்கி இழிந்தவனாகிய ஒருமத்தனிகனை விரும்பி ராஜபுத்திரியென்னும் மேன்மையை யிழந்து யாதுகாரணத்தாலோ கொடிய காட்டுக்கு வந்தாயென்று புலம்பியழுதாள்.

அப்பொழுது விமலையானவள் அரசனை நோக்கி, அவ்விமன் மனிதனல்லன், மாயை உங்கள் மகளுமல்லள். ஆதலால் உன் மனைவியும் நீயும் இவ்விடம்விட்டு நீங்கிப்போங்களென்றாள். அன்றியும் தாம் முற்பிறப்பிற்செய்த வினைகளின் பயனை யநுபவிக்க விரும்புவோர் தமக்கு விதிக்கப்பட்ட ஓரிடத்தை யடைய அந்தச் சம்பந்தமாத்திரத்தாலே இவர் எனக்கு இன்ன முறையினரென்று ஓர் அபிமானத்தை யடைந்து அறி

யில்லாதவர் வருந்துவார். உனக்குப் புத்திரராகியும் தந்தை தாயராகியும் உன்னைச்சேராத வுயிர்கள் இவ் வுலகத்திலில்லை ஆதலால் இன்னார் எனக்கு உறவினர், இன்னார் எனக்கு அயலார் என்று நீ நினையாதே என் றிவ்வாறு விமலை சொல்லும்போது, மாயையானவள் தன் பிதாவாகிய மமகாரனுக்கு முன்னேதான் கைலா யத்திலிருந்துவந்த செய்தியைச் சொல்லி, உமாதேவியா லனுப்பப்பட்ட நான் என் சபதத்தை முடித்திலேன் ஆதலால் இந்த விமலையோடு கைலாயத்துக்குப் போ வேன் நீங்கள் என்னை நினைந்து வருந்தா திருங்க ளென்று சொல்லி, விரைந்தெழுந்து விமலையோடு புறப் பட்டு அந்தக்காட்டில் தன்பொருட்டு வந்திருந்த பரி ஜநங்கள் அழுமோசைதன்பின்னே தொடர்ந்துசெல்ல, சிவபுண்ணிய மில்லாதவர்கள் அடைதற்கரிய கைலாய மலையை யடைந்தாள். மமகாரராஜன் தன் மகளைக் காணாமையால் வாய்திறந்து அழாமலும் சரீரத்திற் புழுதிபடப் புரளாமலும் எழுதின சித்திரம்போல அசைவற்று நின்றான்.

தாயாகிய மோகினியானவள் நிலத்தில் விழு வாள், மீளவும் எழுவாள், மெலிந்துநைந்து அழுவாள், சரீரம் நடுங்கி நிலத்தைக்கையால் உழுவாள், வாயால் மூச்சுவிடுவாள், இறந்துபோவேனென்று எழுந்திருப் பாள், கைநெரித்து ஏங்குவாள்; பாடுகின்ற மாதரும், பந்தும் அம்மனையுங்கொண்டு விளையாடுகின்ற மாத ரும் ஆகிய அரிவைப்பருவப் பெண்களோடு என்மகள் வாசஞ் செய்திருந்த கன்னியா மாடத்தை நான் பார் த்து உயிர்வாழ்வேனோ? சோலைகளும் தடாகங்களும் பளிங்கு மாடங்களும் பாழாகும்படி, என்மகள் பெரிய காட்டில் எங்களைவிட்டு வந்து ஒளிக்கும் வகையை ஒரு சிறிதும் அறிந்திலேன், மகளே! நீயென்னைப் பிரிந் திருக்கவில்லையாயினும் நான் உன்னைவிட்டுப் பிரிந்து உயிர்வாழேன் என்று வருந்துவாள். அப்போது மம காரனுடைய வமிசத்திற்குப் பாரம்பரையாய் வருகிற

ஆசாரியன் வந்து, உங்கள் புதல்வியின் பெருமையை உங்களுக்கு ஆதியில் நான் சொல்லவில்லையா, சொல்லியிருந்தும் நீங்கள் துக்கசாகரத்தில் மூழ்குதல் தகாதென்று சொல்லுவான். அருந்தவஞ்செய்யுமுனிவரும் அடைதற்கரிய கைலாயத்துக்கு மாயைபோன செய்தியைப் பிரத்தியக்ஷமாகக்கண்டும், மனச்சந்தேகமற வுணர்ந்தும் நீங்கள் வருந்துதல் அறியாமையின் காரியமேயாம். உமாதேவியினது தமோகுணுமிசம் உங்களுக்குப் புதல்வியாகும்படி நீங்கள் தலைமையடைந்ததுபோலும். இனி இவ்வுலகத்தில் உங்களுக்கு நிகரானவர் ஒருவருமில்லையென்று குருவானவர் சொல்ல, மமகாரராஜன் தன் மனைவியாகிய மோகினியோடு துன்பம் நீங்கிச்சென்று தனது நகரத்தில் புகுந்து பெரிய மதில் சூழ்ந்த அரண்மனையை யடைந்தான். மாயையும் விமலையோடு சென்று கைலாயத்தையடைந்து, சிவபிரானையும் உமாதேவியையும் வணங்கி வாழ்த்தி அருகே நின்றாள். அப்போது உமாதேவி மாயையின் முகவாட்டத்தினால் அவளது மனமெலிவை யறிந்தும், நீபோன காரியம் என்னாயிற்றென்று வாயினாற் கேட்டதும், மாயையானவள் தான் போனநாள் முதலாக நடந்த செய்தியையெல்லாம் குறிப்பாகத் தெரிவித்தாள். அதை உமாதேவியானவள் கேட்டறிந்து நாணி முகங்கவிழ, அப்பொழுது சிவபெருமான் உமாதேவியின் செருக்கழியும்படி புன்னகை செய்து, திருமால் முதலிய தேவர்கள் நெருங்கின சபையில் வீற்றிருந்தான். பிறகு உமாதேவியைநோக்கி, அன்று நான் உனக்குச்சொன்ன அல்லமன் அரியனோ, எளியனோ, நீசொல்லென்று கேட்க, உமாதேவியானவள் சந்திரனைக்கண்ட தாமரைமலர்போல முகம் வாடினாள். பிறகு சிவபிரானைநோக்கி, தன் வல்லமையைச் சொல்லிச் சபதஞ்செய்து போய் அவமானமடைந்து வந்த மாயையின் சொல்லால் வருந்துகின்ற என்னை நீ நகை

த்துப் பரிகசித்தல், மூக்கில்லாதவனுடைய முகத்துக் கெதிரே கண்ணாடியைக் காட்டுதல்போலிருந்ததென்று மனவருத்தத்தோடு சொன்னாள். அப்போது பரமசிவன், உமாதேவி நாணினால் வருந்தினளென்று அறிந்து திருவுளமிரங்கி, அந்த மாயையானவள் சபதத்தால் அல்லமனுக்கெதிரேபோன நிலையே விசேஷமாகும். அது எப்படியென்றால், ஆடுகளைக் கொலைசெய்வோனொருவன், சிங்கத்துக்கெதிரே அதனை வெல்வேனென்று சொல்லுதலே பேராற்றலன்றோ? உமையவளே! அல்லமன் பெருமையெல்லாம் யாவரும் அறியும்படி நீ நன்றாகத் தெரிவித்தனையென்று சொல்பவரல்லாமல் உன்னை நிந்திப்பவர் ஒருவருமில்லையென்று சொல்லக்கேட்ட உமாதேவியானவள் சொல்லுகின்றாள். அறிவிலியாகிய நான்செய்த தீமையைப்பொறுத்து, அருள்புரிந்து, உண்மையாகிய ஞானத்தையருளிச்செய்கின்ற ஆசிரியனாகிய அல்லமனைக் கண்டறியத்தகுந்த நெறியை அடியேனுக்கு அருள்செய்யவேண்டுமென்று வணங்கிச்சொல்ல, பரமசிவன் சொல்வானாயினன். பெண்ணே! மயக்கமிகுந்த குணத்தையுடைய மாயையை அனுப்பினதனால் அல்லமனை நீ யறிந்திலை; இனிச் சத்துவகுணமிசமாகிய மாதினை நீ யனுப்புவையாயின், உள்ளங்கை நெல்லிக்கனிபோல அந்த அல்லமனைக் காண்பாயென்றான். தரித்திரம் தன்னை வருத்துகையால் இறக்கக்கடவேனென்று செல்லுகின்ற ஓரிடத்தில் செம்பொன்னைக் குடத்தோடிருக்கக் கண்டதரித்திரன்போல, உமையவள் நாணத்தைவிட்டு மகிழ்ந்து பரமசிவனை வணங்கி, சத்துவகுண மடந்தையை அல்லமனைக்கண்டறியும் பொருட்டுப் பூமியினிடத்தில் போவென்று சொல்லினள். அப்பொழுது அருகேநின்ற நந்திதேவனானவன், தாயே! பக்தியெனப்படுகிற அஞ்சனத்தைக்கொண்டு அல்லமதேவன் என்னும் நிக்ஷேபத்தை எளிதிற் காணலாமென்று

சொன்னான். அதுகேட்ட பரமசிவன் நந்திதேவனை நோக்கி, அழிவற்ற நிக்ஷேபத்தை அஞ்சநத்தைக்கொண்டறிகின்ற நேத்திரத்தையுடையவன்போல, ஞானசாரியனை முன்கண்டு மயக்கம் நீங்கிய சரணர்காணும்படி தெரிவிப்போன் இவனென்று நந்திதேவனைப்புகழ்ந்து, நான் எனது மாயாசத்தியாற் கட்டிய பந்தத்தைத்தனது பக்தியால் அவிழ்க்கவல்லவன் இந்த நந்திதேவனே யாவன். இந்தக் காரணத்தால் ஒருவனுக்கு விலங்கு பூட்டுகிற அரசனே, அதை விடுவிக்கிறவனே, இவ்விருவருள்ளே அருளுடையோன் யார்? சொல்லுக என்று மேலுஞ்சொல்லுவான். அல்லமன் என்னும் ஞானயானையை அகப்படுத்தவல்ல அறிவுடைய பார்வை மிருகம் நீயேயாதலால், பூமியிற்சென்று எண்ணிறந்த அடியார்களுடைய மனத்தில் இன்பத்தையருள் செய்கவென்று பரமசிவன் சொன்னான். இறைவன் இப்படி சொல்லக் கேட்டிருந்த சிவகணங்களுள்ளே சிலர் நகைத்து, அந்த அல்லமனைக் காண இந்த நந்தி வல்லவனோவென்றுகேட்க, சிவபிரான் சொல்லுகிறார். நந்தியின் பெருமையை நானறிவேன், என் பெருமையை அவனறிவான். எமது தன்மையை நீங்கள் அறியீரென்றுசொல்ல, இகழ்ந்தோரெல்லாரும் துன்பமடைந்துநிற்க, மீளவும் பரமசிவன் சொல்லுகிறார். குற்றமற்ற நந்திதேவனது பக்தியை நாம் சொல்லும் வார்த்தையாலே நீங்களறியமாட்டீர்கள். நீங்கள் பூமியிற் சென்று பிறந்து உங்கள் கண்களாரக்கண்டு, பின்பு வந்து சொல்லுங்களென்று சொல்லி, நந்தி தேவனோடுசிவகணங்களையும் அனுப்பினார். அப்படி அனுப்பப்பட்ட சிவகணங்கள் எழுநூற்றெழுபது பேரும் பூலோகத்தில் தத்தமக்கு விருப்பமான தலங்களில் நரவடிவாய்வந்து அவதரித்தார்கள். அப்பொழுது இந்திரன் முதலான தேவர்களெல்லாரும் நந்தியென்கிற ஞானசூரியன் பூலோகத்தில் உதித்தால், சமணரென்

கிற லல்லிருள் நீங்கியோடும்; பரமசிவனது புகழென்கிற வெண்டாமரை மலர் மலரும் என்று மனமகிழ்ந்தார்கள்.

பசவண்ணர் வந்தகதி

முற்றிற்று.

---

ஒன்பதாவது

## அக்கமாதேவி உற்பத்திகதி.

ஸ்ரீ கைலாசபதியாகிய சிவபெருமானது இடப்பாகத்திலமர்ந்திருக்கிற உமாதேவியின் சத்துவ கலையும், நந்திதேவனும், கணநாதரும் பூமியில் வந்து அவதரித்த விதத்தைச் சொல்லுவோம். நீர்வளம் நிலவளமுதலிய பல வளங்களும் நிறைந்த உடுதடியென்று சொல்லப்படுகிற ஒரு நகரத்தில், நற்குணங்களெல்லாவற்றையு முடையவனும், தீக்குணங்க ளெல்லாவற்றையும் ஒழித்தவனும், தன் பெயராலேயே தனது தன்மையை யாவரு மறியத் தகுந்தவனும் ஆகிய நின்மலனென்னும் பெயருள்ளவன் ஒருவ னிருந்தான். அவன் தன் மனையாளாகிய சுமதி யென்பவளோடு கூடி இல்லற நெறியில் வழுவா தொழுகிவருங்நாளில், அந்தத் தம்பதிகளுக்கு உமையவளது சத்துவகுணாம்சமாகிய பெண்ணொருத்தி அவதரித்தாள். அந்தப் பெண்ணினது அழகு முதலானவற்றைக் கண்ட தாய் தந்தையர், உமையவளைப் பெற்று மகிழ்ந்த மலையரையன்போல மிகு களிப்படைந் திருந்தார்கள். பிறகு நின்மலனென்பவன் அந்தக் குழந்தைக்கு வேதநெறிக் கிணங்கவும், தன் மதத்துக் கிணங்கவும் விபூதிதரித்து, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை யுபதேசித்து, இஷ்டலிங்கக் குறியையும் மார்பிலணிந்து, அவளுக்கு மாதேவியென்று பெயரிட்டான். அந்தப் புதல்வி நாளுக்குநாள் வளர்

ந்து வருவதுபோலவே அவளோடு நற்குண நற்செய்கைகள் யாவும் கூடி வளர்ந்துவந்தன. இந்தப் புதல்வியின் குணாதிசயங்களையெல்லாம், மாயை பிறந்தநாளில் தவத்தினரை யெல்லாம் தவங்கலைத்த மன்மதன் கண்டு, தன் கையிலுள்ள கருப்புவில்லைக் கைசோர விட்டு மயங்கினான். கொடிய தீவினைகள் யாவும் நசித்தன. நல்ல தருமமார்க்கங்களெல்லாம் தலையெடுத்தன. சிவாகமங்களெல்லாம் எவ்விடத்தும் முழங்கின. மாதேவி யிப்படி யிருக்க, வந்த சிவகணங்கள் தாங்கள் விரும்பின இடங்களில் நற்றவ முயன்று செய்த புண்ணியவான்களுக்குப் பிள்ளைகளாகப் பிறந்து சித்தராமையர் முதலிய பெயர்களைக்கொண்டு வாழ்ந்திருந்தார்கள். இவர்கள் செய்தி இப்படியிருக்க, நந்திதேவர் சமண முதலிய சமயங்கள் தலைகாட்டா தொழியும்படி யவதரித்த செய்தியைச் சொல்லுவோம்.

வேறு சமயங்களிற் சிறிதும் புத்தியைச் செலுத்தாது சைவசமய மொன்றையே மதித்துச் சிவாகம நெறியி லொழுகுகின்ற மறையோர்களுக்கு உறைவிடமா யிருக்கிற விங்குளாபுரியென்றொரு பட்டணமுண்டு. இந்தப் பட்டணத்தில், மறையோர்களுக்கெல்லாம் தலைமை பூண்டுள்ள மாதரசன் என்னும் பெயரையுடையோன் ஒருவனிருந்தான். இவன் தனது நினைவு முழுதும் சிவபெருமானது திருவடியிலும், சொற்கள் யாவும் அவனது தோத்திரத்திலும், தொழில் முழுதும் அவனது பூசையிலும் வைத்திருப்பவன். இவனது மனையாள் மாதாம்பிகை யென்னும் பெயருடையவள். அருந்ததி முதலானோர் தமது கற்புநிலைக் கிடையூறு நேரிடாதிருக்கும்பொருட்டு, நாள்தோறும் இவளை நினைத்துக் கைகுவித்து வணங்கிப் பிறகு பாயிற் படுப்பார்கள். ஏனைய மனைமாட்சி முதலிய நற்குண நற்செய்கைகளிலும் இவளுக்கு நிகராவார் மூன்றுலகத்திலு மில்லை. இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த

இவள் வயிற்றில் நந்திதேவன்வந்து அவதரித்தான். அபரசிவன் எனப்படுகிற நந்திதேவன் இவள் வயிற்றில்வந்து அவதரித்தது, "தக்கார் தகவில ரென்பதவரவர்—எச்சத்தாற் காணப்படும்" என்ற பெரியோர் வாக்கியத்தை நிலைக்கச் செய்தது. இப்படி ஸ்ரீ நந்திதேவர் அவதரித்தநாளில் தேவர்கள் பூமழை பொழிந்தார்கள்; தேவதுந்துமி முழங்கின; கண்டுமுட்டு என்று சொல்லுகிற சமணருள்ளத்தில் சிவபக்தி யுண்டாயிற்று; கொலை, களவு, அழுக்காறு, அவா, வெகுளி, கடுஞ்சொல், பொய், பயனில் சொல் முதலிய தீமைகள் யாவும் இவ்வுலகி லெவ்விடத்து மில்லாதொழிந்துபோயின. இந்த நந்திதேவன் தாய் வயிற்றிலிருந்து பிறப்பதற்கு முன்பே, கூடலசங்கமம் என்னுந் தலத்திலுள்ள பரமசிவன் குருமூர்த்தமா யெழுந்தருளி நெற்றியில் விபூதி தரித்து மார்பில் இஷ்ட லிங்கத்தையும் தரித்தான். தரித்த பிறகு தன் வடிவங் காணப்படாமல் தாயி னெதிரே நின்று இடபத்தின் பேரைத் திரித்து வசவதேவன் என்று பேரிட்டுப் போயினன். சிவனைப்பாவனைசெய்யென்று ஒருவரிடத்தில் குருவாய் வந்து உபதேசிப்பவரது உபதேசங் கெடத் தானே அருளோடு கூடிய குருமூர்த்தமாக வந்து அநுக்கிரகித்த விஷந்தங்கிய சூலபாணியாகிய பரமசிவன் இவ்வாறு தரித்துப்போன பிறகு அவதரித்த மெய்ஞ்ஞான வடிவமாகிய குழந்தையின் நெற்றியில் விபூதியையும், கழுத்தில் இஷ்டலிங்கத்தையுங் கண்டு அங்கே கூடிநின்றவ ரெல்லாரும் அதிசயித்து, பரமசிவன் குருமூர்த்தமாய் நமது கண்ணுக்குத் தோன்றாமல் மறைவாய் வந்து இவற்றைச் செய்து குழந்தைக்குப் பேரிட்டுப் போனானென் றறிந்தார்கள். அவர்கள் அவ்வாறு அறிதற்குக் காரணமா யிருந்ததும் அவனது திருவருளேயாம். நந்திதேவர் தமது பழமையாகிய இட பவடிவந் திரிந்துவந்திருந்தவரெனி

னும், கண்டோர் யாவரும் இவர் கைலாசத்திலுள்ள நந்திதேவரே யென்றறிந்து மனமகிழ்ந்தார்கள். பெற்ற தாய் தந்தையருக் குண்டான சந்தோஷத்துக்கோ ரெல்லையில்லை. மாதரசன் தான் செய்யவேண்டிய கடன்க ளெல்லாவற்றையுஞ் செய்தான். அதற்குமேல் குருவானவர் வருதலும் குழந்தையானது அவர் முன்னிலையில் தான் முன்னமே யறிந்திருந்த கலைகளையெல்லாம் பூர்ணமா யறிந்துகொண்டது. சிவபெருமானை யிகழ்ந்து நெறியல்லா நெறியிற் செல்லுகிற பரமதயானைகளை யடக்குதற்பொருட்டு அவைகட்கு அங்குசம்போலவும், சிவனடியா ரென்கிற பசுக்களுக்குக் கன்றுபோலவும் இந்த வசவதேவர் ஒழுகும்நாளில், கலியாண்புரம் என்னும் பட்டணத்தில் விச்சலன் என்னும் அரசன் சமணர் கூட்டம்தன்னைச் சூழ வாழ்ந்துகொண்டிருந்தான். அப்படி யிருக்கும்நாளில், வசவதேவர் கைலாசத்திலிருந்து தன்னுடன் வந்த நாகாம்பையோடு விச்சலராஜனது கலியாணபுரத்திற் செல்ல, அந்த விச்சலராஜன் இவர் வசவேசரென்றும், கைலாசத்திலிருந்துவந்து இங்கே அவதரித்தவ ரென்றும் பலர் சொல்லக்கேட்டு, இவரைத் தனக்கு மந்திரியாக அமைத்துக்கொண்டான். இப்படி யிவரை மந்திரியாக அமைத்துக்கொண்டது நீறு பூத்த நெருப்பை ஒருவனெடுத்துத் தன் மடியில் வைத்துக்கொண்டதுபோன்றிருந்தது. இவ்வாறு விச்சலராஜன் வசவதேவன் என்னும் மந்திரியோடு கொலுவீற்றிருக்குஞ் சமயத்தில், தேவராஜனாகிய இந்திரன் சபையில் நடிக்கின்ற அரம்பையின் காதினின்று அழகிய வோர் பொன்னோலை கழன்று விழுந்ததுபோல ஓலைச் சுருளொன்று ஆகாயத்தினின்றும் அரசனது சபையில் விழுந்தது. அங்கிருந்தவர்கள் அதிசயித்து அச்சுருளை யெடுத்துவந்து அரசன் கையிற் கொடுக்க, அவன் அதை விரித்துப் பார்த்து, அதிலுள்ள எழுத்தானது தன் தலையெழுத்

துவ போல்வதென்று தான் ஒன்றுந் தோன்றுதலு ளாய் மனங்கலங்கி, சமணர்களுக்கு யமன்போன்ற வசவதேவர் கையிற் கொடுத்தான். அவர் அதைப் பார்த்து, ராஜாதிராஜனே! உன் சிங்காதனத்தின் கீழே ஒரு சுவர்ணநிக்ஷேப மிருப்பதாக இதில் எழுதப்பட்டிருக்கின்றது. அதனை யிப்பொழுதே காட்டுகிறே னென்று சொல்லிச் சிங்காசநத்தின் கீழே தோண்டுவித்துப் பொற்புதையலைக் காட்ட, அரசன் அந்தப் புதையலை யெடுத்துக்கொண்டு, இந்த மந்திரி வந்தவுடனே இப்படிப்பட்ட பெரும் பய னடைந்தோமே யென்று மிகவும் அதிசயித்தான். மேலும் இந்த வசவேசர் நமக்குக் கிடைத்தது நாம் செய்த புண்ணியத்தின் பயனேயாகும்; ஸ்ரீகைலாசத்திற்கு இரண்டாவது கடவுள் இவரேயென்று மனமகிழ்ந்தான். இதைக்கண்டோர் யாவரும் அதிசயித்தார்கள். அரசன், வசவேசருக்கு மந்திரித்தனத்தைக் கொடுத்து, தாயானவள் குழந்தையைக் காப்பாற்றுதல்போல நீ யென்னைக் காப்பாற்ற வேண்டுமென்று இன்சொற் சொல்லி அவரை மனமகிழ்வித்தான். அன்றியும் அவரை மிகுதியாக நட்புக்கொண்டிருந்தான். சிலநாள் சென்ற பிறகு வசவேசருக்குச் சகல ஆடம்பரங்களோடு கலியாண முடித்துவைத்தான். அன்று தொடங்கியே அந்தப் பட்டணத்துக்குக் கலியாணபுரமென்னும் பெயருண்டாயிற்று. இந்தப்பிரகாரமாக கல்யாணபுரத்திலிருக்க, நாகாம்பை யென்னும் பெயருள்ள இவரது தமக்கை இவரது பிரசாதத்தினால் ஜீவன்முத்தியைத் தருகின்ற வீரசைவ நன்னெறியை வளர்க்கின்ற ஒரு புதல்வனைப் பெற்றாள். அந்தமைந்தனுக்கு வசவன் என்னும் பெயரிட்டாள். அந்த மைந்தன், விளங்குகின்ற திருமுகங்களாறும் அழிவற்ற தமது தலங்களாறென்று அறிவிக்கும்பொருட்டு இந்தவுலகில் அவதரித்த முருகக்கடவுளென்று யாவரும் நினைக்கும்படி வளாநதான். வீரமா

கேசர் என்னும் மெல்லிய பயிரை வளர்க்கும்பொரு ட்டு வந்த மழைபோலச் சென்னவசவதேசிகன் இருக் குங்காலத்தில் அவனுக்கு ஓர் புதல்வன் அவதரிக்க, அவனுக்குச் சங்கமேசதேசிகன் என்னும் பெயரைத் தரித்தனன். வாக்கு முதலிய திரிகரணங்களாலும் சிவ னடியார் வேண்டிய பொருள்களை ஓயாதுதவித் தாய் போலக் காப்பாற்றி அன்னிய மதத்தாருடைய வழிக ளெல்லாம் மாறும்படியாகவும் சிறந்த புகழையுடைய சைவமென்கின்ற நிந்தையில்லாத வழியில் நடக்கவும் பண்ணினன். அன்றியும் சிவனடியாராகிய கன்றுகளுக் குத் தாய்ப் பசுப்போன்ற வசவனது கீர்த்தியானது விஸ்தாரமான நிலவுலக முழுதும் மூடிக்கொள்ளும்படி கைலாயத்தை நீங்கி நிலவுலகத்தில் வந்திருந்த தவத் தினராகிய சிவகணங்களெல்லாம் அறிந்து கலியாணத் துக்குப் போதல்போலக் கலியாணபுரத்துக்குச் சென் றார்கள். பலரோடு வந்தாலும், தனியே வந்தாலும், மிகுந்த சிறப்போடு வந்தாலும், அருவருக்கத் தகுந்த சரீரத்தோடு வந்தாலும், சிவனடியார் வரக்கண்டால் எதிரே சென்று வணங்கி நந்திதேவர் அவர்களை உப சரிப்பார். அன்றியும் அவர்களுடைய சாதிபேத முத லியவற்றைக் கருதாமல், சிவனடியார் என்றளவில் அவர்களைச சிவபெருமானாகவே பாவித்து அவர்களு க்கு எல்லாப் பணிவிடைகளுஞ் செய்வார். பெண்ணா சையை விட்ட துறவினர் அநேகர்; இல்லறத்தி லிருந் தும் மாதர் பற்றற்றவர் அநேகர்; சிவபூசையிலே காலம் போக்குவோர் அநேகர்; பலவகையான விரதங் களை யநுஷ்டிப்பவர் அநேகர்; இவ்வாறு பலவகையான வர்களும் நந்திதேவனது அன்புசெய்து வாழாநின்ற மாகேசுரர்களாம். வசவேசர், வாது செய்கிற சமணர் களுக் கெதிரே அநேக அதிசயங்களைக் காட்டி அவர்க ளுடைய கர்வத்தை யடக்கிச் சிவனடியார்க் கெல்லாம் பலவகையாகிய பணிவிடைகளைச் செய்துகொண்டிருப்

பார். இப்படி யிருக்குங்காலத்தில், அல்லமதேவனது மகிமைகளைக் கேள்வியுற்று, மழையை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கிற பயிர்போல அவனது வரவை யெதிர்பார்த்திருந்தார்.

அக்கமாதேவி யுற்பத்திகதி முற்றிற்று.



## பத்தாவது

# அக்கமாதேவி துறவுகதி.

தனது யதார்த்த நிலையைக்காண விரும்பி, தன் கணவனாகிய அரசனைக் கக்கினசோறுபோல அருவருத்துவிட்டு, அல்லமதேவர் காட்டில் விளையாடும் பெருமைகளைக் கண்டுய்தற்பொருட்டுக்காட்டுக்குச்சென்ற மாதேவி சரிதத்தைச் சொல்லுவோம். மாதேவியென்பவள்பேதைபெதும்பையென்னும் இரண்டுபருவங்களையுங்கடந்து பன்னிரண்டாண்டாகிய மங்கைப் பருவத்தை யடைந்து, அந்தப் பருவத்திற்குரிய முலைமுதிர்வு முதலிய இலக்கணங்கள் நிரம்பப் பெற்றும் தன்மனத்தில் சிறிதும் காம மயக்கத்தை யுடையாதவளாகி, அர்த்த நாரீசுவரனென்னுங் கடவுளைப் பத்திசெய்து அவனோடு ஐக்கிய மெய்தும்படியான முயற்சி செய்யத் தலைப்பட்டாள். தன்னைத் தானறிந்து பரசிவனோடு பொருந்துதற்கு முயலும்படியான பெரும்பருவ மடைந்த இவளை, மனத் தெளிவில்லாதவர்கள் இளமையாகிய மங்கைப்பருவப்பெண் என்பார்கள். நின்மலனது மகளாகிய மாதேவி, வண்டுகள் மொய்க்கப் பெறாமல் மலர்கிற சண்பகப் பூவைப்போல, மன்மதபாணம் படாத தன் சரீரத்தில் சூரியப் பிரகாசம்போல அழகு மிகுந்துவரும் நாளில், ஒருநாள் கௌசிகராஜன் சகல ஆடம்பரங்களுடனே யானை மீதேறி உலா வந்தான். இவன் வந்த உலாவானது இந்திரன் உலாவந்தாற்போ

விருந்தது. இந்த வுலாவைக்கண்ட மாதர்கள் காமத்தால் நாணிழந்தும், ஆடையிழந்தும், ஆபரணங்களையிழந்தும் உயிரைமாத்திரம் இழக்காமல் உடன் சென்றார்கள். அப்படி சென்ற மாதர்கள், அந்த அரசனேறிச் செல்லுகின்ற யானையின் மதத்தை யுண்ணும்பொருட்டுச் செல்லுகிற வண்டுகளை நோக்கி, ஓ வண்டுகளே! நீங்கள் அந்த யானையின் கர்ண கபோல மதத்தை யுண்ணச் செல்லுகின்றீர்க ளல்லவா? மெல்ல நடக்கும்படி அதின்காதிலே சொல்லுங்கள் என்று பிரார்த்தித்தார்கள். மாதர்கள் காமமயக்கத்தால் இவ்வாறு வருந்தும்படி உலாவந்த கௌசிகராஜன் இந்த மாதேவியைக்கண்டு மிகுந்த மோகங்கொண்டு மனமயங்கிப் பரவசப்பட்டுச் சிறிதுநேரத்தில் தெளிவடைந்து, தனக்கருகே நின்ற ஒருவனை நோக்கி, நீ போய் மின்கொடிபோல அந்த வாய்தலினின்று புறப்பட்டு மறைந்துபோனமடமங்கை யாரென்று அறிந்து வாவென்றுகட்டளையிட, அவன் அப்படியேபோயறிந்துவந்து சொன்னான், அவன் சொல்லால் அவள் இன்னான்மகளென்று அரசனறிந்து, இவளை யெவ்விதத்தாலாயினும் நான் கூடுவேனென்று தன் மனத்தில் நினைத்துக்கொண்டு போய்த் தன் அரண்மனையை யடைந்து, உயர்ந்தஞான லக்ஷ்யார்த்தத்தை யுபதேசிக்கிற ஆசாரியரும், மாதரும் வலாத்கரித்தால் இன்பஞ் செய்பாரென்றும், தூதுவிடுத்து அதுவாயிலாக அவளைப் புணர்வேனென்றும் ஆலோசித்துத் துணிந்து, தூதுசொல்வதில் மிகுந்த வல்லமையுள்ள சில மாதரை நோக்கி, நீங்கள் போய நின்மலன் மகளாகிய மாதேவியை எனக்கு மனைவியாகும்படிபேசித் தீர்மானித்துக்கொண்டு வரக்கடவீரென் றனுப்ப, அவர்கள் அவ்வாறே சென்று நின்மலனைக்கண்டு, இந்தச் செய்தியைச் சொல்லுதலும், அவன் சம்மதிக்காமல் மாதர்களே! நீங்கள் இந்தக் காரியத்தைக் குறித்து வந்து சொல்லவுந்தகாது;

நான் அதற் குடன்படவுந் தகாது, போங்களென்று மீறுத்துச் சொல்ல, அந்த மாதர்கள் நின்மலனை நோக்கி, உன்மகள் அரசன் மனைக் கிழத்தியானால் அந்த அரசன் செல்வ முழுதும் உங்களுடையதே யென்றறிந்திலீர்கள். தானேவந்தசீதேவியைப்புறம் போக்குவோர் யார் என்று மாதர் சொல்ல, அவன் சொல்லுகின்றான். இம்மைப் பயனொன்றையே விரும்பித் தகாதவர்க்குத் தம் மகளைக் கொடுத்தவர் மறுமையில் ஆழ்ந்த நரககூபத்தி லழுந்தித் தம்மை நோக்குவோ ரொருவரு மில்லாமல் தளர்வார்கள். தகாத காரியஞ் செய்து உயிர் வாழ்தலைப் பார்க்கிலும் உயிர் விடுதலே நன்மையென்று பெரியோர் சொல்லுவர். ஆகலால் எமக்குத் தகாத காரியத்தைச் சொல்லுதல் உமக்கு அடாது என்று சொல்ல, மீட்டும் அந்த மாதர்கள் சொல்வார்கள். உறையினின் றுருவிய வாளாயுதத்தோடு மறவனென்னுஞ் சாதியான் மிருகங்கள் சஞ்சரிக்கிற காட்டில் விரைந்துசென்று வழிநடப்போரை ஓர் பொருள் தருகவென்று இரத்தலை நிகர்க்கும், அரசன் தன் கீழ்வாழுங் குடிகளிடத்தில் ஒரு பொருளை யிரந்து கேட்டலென்பது. நீதிமானாகிய நீ யிதனையறிந்திலைபோலும் என்று மாதர் சொல்லுதலும், நிருமலன் என்போன் எங்களுடைய வாசனைபொருந்திய நீண்ட கூந்தலையுடைய பெண்ணே யோசனையிற் சிறந்தவள். உங்கள் கருத்தை அவளுக்கு அறிவியுங்கள், அவள் மன மிசைவாளாயின் எமக்குச் சம்மதமே போங்களென்று சொன்னான். அந்த மாதர்களும் அவ்வாறே மாதேவியினிடத்திற் போய், மன்மதனது வலி குன்றும்படி தனங்களென்னும் பெரிய அரும்பையுடைய பூங்கொடிபோல்பவளே! நீ தயைவைத்து, எங்கள் அரசனது உயிரை நிறுத்தினையாயின் இந்தப் பூமியிலுள்ள எல்லா வுயிர்களுக்கும் தாயாவாய் என்று சொல்ல, மாதேவியானவள். மாதர்களே! உங்கள் அரச

னால் குடும்பத்தைத் துறக்கவேண்டுமென்கிற வேராக்லோசனையைத் தீர்மானித்து அரசன் எனக்கு ஒரு பிரதிக்கினையைச்செய்து கொடுத்துச் சம்மதித்து ஒரு வார்த்தைசொல்லுவனாயின், நீங்கள்சொன்ன காரியத்துக்கு நான் உடன்படுவேனென்றாள். அதுகேட்ட மாதர்கள், தாயே! நீமாத்திரம் சம்மதிப்பையாயின், எங்கள் அரசன் நீயிட்ட கட்டளையை மறுக்கமாட்டான் என்று சொல்லி, அரசனிடத்திற் சென்று மாதேவி சொன்னதைச் சொல்ல, அரசன் மனமகிழ்ந்து மாதேவியிருக்கு மிடத்திற்குப்போனான். காமநோய் கொண்டவன் என்னதான் செய்யச் சம்மதிக்க மாட்டான்! எல்லாஞ் செய்யச் சம்மதிப்பான். சென்று, மாதேவியின் தனங்களை மேருமலையென்று மதியாதவனாய் வீட்டிலுள்ள குடமென்றேநினைத்தான். அவளது நெற்றியைப் பிறையென்று நினையாதவனாய் வில்லென்றே நினைத்தான். தனக்கெளிதிற் கிடைக்கும் பெண்ணாகத் தீர்மானித்துக்கொண்டு வாயினாலும் பிதற்றுகிறான். பூங்கொடிபோல்வாளே! நீயென்னை ரக்ஷிப்பதற்காக நான்செய்ய வேண்டியது இன்னதென்று கட்டளையிட்டால் அப்படியே செய்கிறேன் என்றுசொல்ல, மாதேவியானவள் அரசனை நோக்கி, மலைபோன்ற தோள்களையுடையவனே! என்னை நீ வலாத்காரமாகத் தழுவாமையைக் குறித்துப் பிரதிக்ஞைசெய்து கொடுத்தால் நான் உன் விருப்பத்தின்படி நடந்துகொள்வே னென்றாள். அதுகேட்ட அரசன் அப்படியே யாகட்டுமென்று, உன் சம்மதமில்லாமல் உன்னை நான் வலிந்து தழுவமாட்டேனென்பதற் குறுதியாகச் சூளுறவு செய்கிறேன் கேளென்று சொல்லுகிறான். தன்னை நோக்கிவந்த நல்விருந்திருக்கத் தன் னுள்வீட்டிற் புகுந்து காணமற் புசிப்பவனும், பந்தி போஜனத்தில் பேதஞ்செய்யும் பாவியும், தாய்தந்தையர் பசித்திருக்கத் தானுண்ணும் பாவியும், உச்சிக்காலத்தில் பசியால் வருந்தி வந்த

அதிதியரை உண்பித்து உண்ணாத கொடியோனும், பிறர் நிந்தித்தற்குரிய உணவையுண்பவனும், சிவபூசை செய்யாமல் உண்பவனும், பெரியோர்களாலும் நூல்களாலும் மறுக்கப்பட்ட மாமிசபோஜநஞ் செய்விப்பவனும், தாம் செய்த புண்ணியத்தாற் செல்வராயிருப்பவர்களைப் பார்த்துப் பொறாமைப் படுதலும் அவர்கள் வறுமை யடையப் பார்த்து மகிழ்தலும் ஆகிய தீக்குண முடையவனும், கன்றுக்குப் பால் விடாமல் கறந்து கொள்வோனும், ஒருவர் செய்த நன்றியை மறந்தவனும், ஒருபக்கத்திற் சாய்ந்து நடுநிலை தவறுவோனும், உயிர்களைக் கொன்று அவை பதைக்கக்காண்கிற கொடியோனும், போர்க்களத்தில் தன் தலைவனைவிட்டு ஓடிப்போகிறவனும், அடைக்கலமென்றுவந்தவனை ஆதரிக்காமல் நீக்கிவிடுவோனும், கொடுப்போமென்று சொல்லிக் கொடாதவனும், ஒருவனுக்கொருவன் கொடுப்பதை விலக்குவோனும், பாவத்தொழில் செய்யுமிடத்தில் அதற்குதவியாயிருப்பவனும், தெளிந்து சிநேகித்தபின் வஞ்சிப்பவனும், ஆசாரியர்களுடைய வசனத்தை மீறிநடக்கிறகொடியோனும், துறவினர்கள் வரவைக்கண்டு எழுந்திராத பாவியும், பிறர்க்குத் தான் கல்வி நிரம்பினவன்போலக் காணப்பட்டு இரகசியத்தில் நூல் கற்போனும், இராக்காலத்தில் புதியராய்வந்த நல்லோர்க்கு இடங்கொடாதவனும், கண்டபோது புகழ்ந்து காணாதபோது இகழ்வோனும், தன் சுற்றத்தார் வறுமையால் வருந்தத் தான் செல்வத்தாற் செருக்கிவாழ்வோனும், நம்பிக் கையா லொருவன் வைத்தபொருளைக் கவர்ந்துகொள்வோனும், துன்பமடைதற்குரிய கஷ்டமான வேலையைச் செய்வித்துக்கொண்டு பின் அவனுக்குப் பேசின கூலி கொடாதவனும், கற்பழிந்த தன் மனைவியோடு கூடி வாழ்பவனும், அன்னியருடைய மனைவியரை விரும்புவோனும், கல்விகற்பித்த ஆசிரியனைக் கொ...

நாணுவோனும், விற்கத்தகாதவைகளை விற்றுத் தன் சரீரத்தை வளர்த்து இறப்பவனும், நன்மை மிகுந்த வயலிலும் நதியிலும் நந்தவனத்திலும் தேவாலயத்திலும் ஜலமலங்களைக் கழிப்பவனும், யாவரும் நடக்கும்வழியை முள்ளிட்டுத் தடுப்பவனும், பொய்சொல்லி அதிகவிலைக்கு விற்கும் வர்த்தகர்களும், தாழ்ந்த ஜாதியானிடத்திற் கூலிபெற்றுக் கொண்டு அவனுக்கு வேலைசெய்பவனும், ஒருவனிடத்து உறவுசெய்து அறிந்த ரகசியத்தை அவரிடத்து வெறுப்புப் பிறந்தகாலத்தில் எடுத்துச்சொல்லுவோனும், கோபம் வந்த காலத்தில் முறைவழுவாகிய கடுஞ்சொல்லை உபயோகிப்பவனும், புத்தியில்லாத மனைவியின் சொல்வழியில் நிற்கின்ற அறிவில்லாதவனும், இரண்டு அன்னியோன்னியமான சிநேகிதர்களைப் பிரித்துக் கலகம் உண்டாக்குவோனும், நூலில் இல்லாத பொருளை எடுத்துச்சொல்லுவோனும், நன்மையைப் பொறாமையால் தீமையென்று சொல்லுவோனும், எளியவரிடத்துத் தனது மிகுந்த கோபத்தைக்காட்டுவோனும், பிறர்பொருளைக்கொண்டு புண்ணியஞ் செய்வோனும், இம்மையின்பத்தின் பொருட்டு மறுமையின்பத்துக்கேதுவாகிய நற்செயல்களை விடுத்தவனும், தபோதனரை யிகழ்வோனும் அடைகிற நரகத்தை நானடையக் கடவேன். அன்றியும், நீ கட்டளையிடுவதை நான் தவறாது செய்வேன் என்று அரசன் சொல்லக்கேட்ட மாதேவியானவள் மனமிசைந்து அப்படியானால் வா போவோம் என்றாள். அதுகேட்ட அரசன் மனமகிழ்ந்தவனாய் அவளைச் சிவிகையிலேற்றித் தாதியர் பலருஞ் சூழும்படி அரண்மனைக்கு அனுப்பித் தானுந்தன் வாகனம் ஊர்ந்து உடன்போயினான். அப்படிப்போனவன் மாதேவியைத் தனியேகண்டு நெருப்பைக்கண்ட அரக்குப்போல மன முருகி அவளை நோக்கி, பூங்கொடி போல்வாளே! கடப்பதற்கரிதாகிய காமக்கடலைக்கடந்

தேறும்படி உன்னுடைய கொள்கைக்குடங்களைத் தரு தற்குத் திருவுளம் பற்றவேண்டும் என்று வணங்க, மாதேவியானவள் அரசனது காமமிகுதியாற் சொல்லு கின்ற சொற்களைக் கேட்டுப் புன்னகைசெய்து, ஓ அர சனே! யான் உனக்கு இடுகின்ற கட்டளையைச் செய்து முடித்த பின்பு என்னோடு பேசக்கடவை என்றாள். அதுகேட்ட அரசன் நான் செய்யத்தக்கது இன்னதெ ன்று கட்டளையிடக்கடவை யென்றான். அப்பொழுது மாதேவி இவ்விடத்தி லிருக்கின்ற ஜோதிவடிவமாகிய சிவலிங்கத்தை உன் கரபீடத்தில் வைத்துப் புஷ்பங்க ளைக்கொண்டு அர்ச்சித்துப் பூசித்து வந்தபிறகு என் னைக் கூடுவாயாக என்றாள். அளவற்ற காமமிகுதியி னால் இளமுலைகள் அழுந்தும்படி தன் தோள்களால் தழுவவேண்டு மென்றெழுந்த அரசனை மாதேவியான வள் தடுத்துச் சொன்னது பாலை நிலத்துள் நீரை மொண்டுகொண்டு வாயின் சமீபத்துச் செல்லுகிற கையை ஓடிப்போய்ப் பிடித்துக்கொள்வதை நிகர்த் திருந்தது. பூவரும்பில் வாசனையும், முளையில் விளை வும், குழந்தையினிடத்தில் காம இன்பமும் உண் டாகுமானால் சைவசமயத்துக்கு விரோதியா யிருக்கிற இவ்வரசனுக்குச் சிவபூசையில் விருப்ப முண்டாகும். இவன் சைவவிரோதியாதலால் வலிந்து புணரேன் என்று தான் முன்னேசெய்த சபதத்தை நினைத்து அவ னைத்தீண்டாதவளாய் நின்று, உங்கள் சிவனை யாம் எக் காலத்தும் பூசை செய்யோம் என்றான். அதைக்கே ட்ட மாதேவியும் அப்படியாயின் யாம் உன்தோள்க ளைத் தொடமாட்டோம் என்றாள். மாதேவியின் சொல்லானது அரசனது வாயையும், கையையும் கட் டிவிட்டது என்று சொல்லும்படி காமமடங்கி விறகி ல்லாத நெருப்புப்போலத் தணிந்துபோதலால் சும்மா இருந்துவிட்டான். பிறகு மாதேவியானவள் அல்லம தேவனைத்தேடிச்செல்ல நினைத்து, இல்லறத்தை நீக்கி

விட்டு ஆடை ஆபரணங்களை ஒழித்து நெடிய கூந்தலை யவிழ்த்துத் தன் உடம்பு முழுதும் மறையும்படி விரித்துவிட்டுக்கொண்டு மனத்தெளிவோடு தன்உள்ளங்கையில் வைத்த இஷ்டலிங்கத்தோடு தானினைத்த பொருள்கிடைத்தாற்போல மகிழ்ச்சியதிகரிக்க, இவள் மனமருட்சியடைந்தாளோ என்று அரசன் திகைத்து நிற்க வீதியிற்சென்றாள். இந்தச்செய்தியைக்கேட்ட அன்னையும் பிதாவும், அந்தோ! எங்களுடைய அருமைப் புதல்விக்கு நேரிட்டது என்னேவென்று நினைத்து வந்து இவளைக்கிட்டி நின்று வருந்தும்போது, அவர்களை நோக்கி, என்னை உங்கள் புதல்வியென்று மனமயங்கி இரங்குதல் உங்களுக்குத் தகாது. நான், என்னை அறிதற்பொருட்டுச் சற்குருநாதனைத்தேடிச்செல்லா நின்றேன் என்று சொல்லி, அவர்களைக் கண்ணெடுத்துப் பாராமல் அயலார்போல நீங்கிச்சென்றனள். செல்லுதலும் தாய்தந்தையராகிய சுமதியும் நிர்மலனும் இவள் நினைந்தது மிகவும் உத்தமமான காரியம், இவளால் நமது மரபு முழுதுக்கும் பெரும்புகழ்வாய்த்ததென்று மனமகிழ்ந்திருந்தார்கள். அதன்பிறகு இவள் செல்லும் நெறியில் கண்டவர் யாவரும் மனங்கரைந்து கண்ணீர் ததும்ப நின்று கவுசிக ராஜன் பின்னே சிவிகையேறித்திருமகள்போலச் சென்ற மாதேவியானவள் இப்பொழுது இந்தப்பேய்க்கோலங்கொண்டு செல்லுதற்குக் காரணம் யாதோ அறியேம் என்றார்கள். மற்றுஞ் சிலர் இந்த மாதேவியை இவ்வண்ணமாகக் கண்ட யாம் விசனமேலிட்டால் வயிறெரிய நின்றோமே, இவளைப் பெற்றோர் என்னபாடு படுவரோ என்றார்கள். மற்றுஞ்சிலர் இவளது மங்கள வடிவத்தைக் கண்டு மகிழ்ந்த நமது கண்கள் இந்தக் கோலத்தையுங் கண்டு துன்புறுதற்கு எப்படிப்பட்ட பாவத்தைச் செய்திருந்தோமோ என்றார்கள். இவ்வாறாக நகரத்தாரெல்லாரும் இரங்கும்படி மாதேவியானவள்

வெயிலில் வெப்பம் பொறுமல் நிழலை விரும்பிச் செல்வோர்போலக் கருப்பஞ் சர்க்கரையும், அமுர்தமும், தேனும் கைக்கும்படி பேரின்பத்தைக் கொடுக்கின்ற தனக்குத்தானே நிகராகிய அல்லமதேவனை நாடிச்சென்றுள். அப்படிச் சென்றவள் காடுகளிலும், மலைகளிலும், நகரங்களிலும்போய் அன்பு மிகுதியால் அல்லமனுகிய சற்குரு நாதனைத் தேடாநின்றுள்.

அக்கமாதேவி துறவுகதி
முற்றிற்று.

---

## பதினொன்றுவது
## கொக்கிதேவர்கதி.

அல்லமதேவர் அநிமிடன் என்னும் பெயரையுடைய ஞானசிரியனைத் தனது உண்மை வடிவோடு கலந்துகொண்டு தன்னைப் பூசிக்கின்ற அடியார்களுடைய பிறவியை நீக்கிச் சஞ்சரிக்கிற நிலைமையைச் சொல்லுவோம். சிறப்புப் பொருந்திய அல்லமதேவன் கார்கால மேகத்தை எதிர்பார்க்கின்ற மயில்போலத் தன்னையே எதிர்பார்த்துக்கொண் டிருக்கிற அடியார்களை ஆட்கொள்ள வேண்டுமென்கிற எண்ணத்தோடு உலாவிக்கொண்டிருக்கும் நாள்களில் ஒருநாள், ஓர்திசையில் அவ்வல்லமதேவன் ஓர் வேடங்கொண்டு சென்றுன். அவனெதிரே வாசனைபொருந்தியமிருதுவாகிய புதிய மலர்கள் நிறைந்த ஓர் நந்தவனம் அலங்காரமாகக் காணப்பட்டது. சிறுபொழுதாகிய ஐந்திலும் மாறுபடாத பெரிய அறுபொழுதிலும் இதழ்விரிந்து தேனைப்பொழிகின்ற மணமலர்கள் நிறைந்த அந்த நந்தவனத்தை ஒருவரடைந்தால் அவர் தேவேந்திரனது பெருஞ் செல்வத்தையும் பெற விரும்பார்.

இந்த வுலகத்தில் பல தவங்களைச் செய்து வருந்தின வர்கள் வடதிசையிலுள்ள கைலாயத்தில் போய்ச்சேர விரும்புதல் யாதுக்கெனின், இந்தப் பூஞ்சோலை யின் மணத்தோடு கூடிய தென்றற் காற்றானது வந்து தமது உடம்பின்மீது தவழ்தலை மாத்திரம் நினைத்தே யாம். தேன் நிறைந்த பல மலர்களையும் கண்டுபோய் நல்லதேனை யுண்ணும்பொருட்டு அங்கு மிங்குமாக வுழலுகின்ற அளவற்ற வண்டின் கூட்டங்கள் இரைத லால் அந்த நந்தவனம் வண்டின் சந்தையை யொத்தி ருந்தது. அந்த நந்தவனத்தைக் கொக்கிதேவன் என்னும் பெயருள்ளவன் காவல் செய்துகொண் டிருப் பவன். அவன் அவ்விடத்தில் அந்த நந்தவனத்தை விருத்தி யடைவிக்கும்படியான முயற்சியைச் செய்து கொண்டிருந்தான். அவனை அருள்நிறைந்த மனத்தை யுடைய அல்லமதேவன் கண்டு இவன் தனது அற்ப மாகிய தொழில் விடும்படி அறிதற்கரிய பொருளை இவனுக்கு அறிவிப்பே னென்று அவன் அருகே சென்று, ஐயனே! சரணம் என்று சொன்னான். அப் பொழுது அந்தநந்தவனத்தை யுடையவனாகிய கொக்கி தேவன் நிர்மலனாகிய அல்லமதேவனைச் சரணமென்று சொல்லி வணங்கி, உன் செய்கை யாது, உன் பெயர் யாது சொல்லுக என்று கேட்க, ஞான விளக்காகிய அல்லமதேவன் சொல்லலுற்றான். அன் பர்களுடைய வீடுகடோறும் வரிசையாகச் சென்று பிச்சையேற்று எந்தத் தொழிலுமில்லாமல் இருப் பேன். என்பேர் அல்லமனென்று சொல்லுவார்கள், என்று சொல்லிப் பிறகு உத்தமனே உன் பெயர் யாதென்று வினவ, அவன்தன் பெயர் கொக்கிதேவன் என்று சொல்லி, அருமையாகிய குருலிங்க சங்கமங்க ளுக்காகச் சரீரம் வருந்துகின்ற தொழில் சற்றுமின் றிச் சும்மாவிருப்பவன் உணவை யுண்ணுகின்ற பிண மென்று சொல்லுகின்ற சொல்லை நீ யறிந்திலையோ

என்று சொல்லத்தொடங்கினான். பெறுதற்கரிய மானுடசரீரத்தை ஒருவன் பெற்றால், அந்தச் சரீரத்தைக் கொண்டு செய்தற்கரிய பல தர்மங்களையுஞ் செய்து, துன்பமிகுந்த பிறவியினின்று நீங்கி உய்யும்பொருட்டு ஐக்ய நிலையை யடையாமல் உழல்வோனது சரீரம் பொற் பாத்திரத்தில் பெய்துவைத்தற்குரிய பாலை நில வெடிப்பில் கவிழ்த்தாற்போலாகும். மின்னலைப்போல நிலையில்லாதழியு முடம்பைக் கொண்டு சற்கருமங்களைச் செய்து அழியாத வுடம்பைப் பெற்றுப் பேரின்பத்தை யடைந்திருத்தற்கு முயற்சி செய்யாமல் சரீரம் வருந்துமென்று எண்ணி அந்தச் சரீரத்துக் குறுதியாகிய உணவையுண்டு சும்மாவிருப்பவன்போல மூடர் இவ்வுலகத்தி லில்லையென்று பூஞ்சோலையை யுடைய கொக்கி தேவன் சொன்னான். அவன் சொன்ன சொல்லை அல்லமதேவன் கேட்டுக் கைகொட்டிச் சிரித்து, புண்ணிய கருமங்களைச் செய்து அழியாத இன்பத்தை ஒருவன் பெறுவானானல் துன்பத்தைச் செய்தற்குரிய மும்மலங்களுக்குள் ஒரு மலமாகிய ஆணவத்தாலும் நாம்பேரின்பத்தை யடையலாமென்று சொல்லி,தான்செய்யுஞ் சற்கருமத்தால் ஒரு பிறப்பிற்றானே பேரின்பமுண்டாகு மென்றால், அந்த மாமிச சரீரம் நீங்க அந்த இன்பமு முடனேநசிக்கும்; அந்தச் சரீரம் நசிக்காமல் மேலான மோக்ஷ பதத்திலிருக்கு மென்றால் அது மாயாகாரியமாகாது; வாசனை வீசுகின்ற மலர்களைத் தருகிற நந்தவநத்தை வைத்து அதனால் பிறவியை யொழிக்கக் கருதுகிற கொக்கி தேவனே! பேரின்பத்தைத்தருகிற சற்கருமத்தின் முடிவில் சரீரத்தில் அதிகமான துன்பத்தை யுண்டாக்குகிற தீவினையுண்டாகும்; அந்தத் தீவினையின் முடிவில் முன் செய்த நல்வினை தோன்றும்; இம்முறையாக நல்வினை தீவினைகளாகிய இரண்டும் இவ்வுலகில் பகலும் இரவும்போல மாறி மாறி வருமென்று அறிஞர் சொல்லு

வர்; புறத்தே யாகாதி சற்கருமங்கள் பலவற்றைச் செய்து மலையைக் கல்லி எலியைப் பிடித்தாற்போல மிகவும் அற்பமாகிய தேவபோகத்தை யடைபவனோ, வருந்தாமல் சகல சங்கற்பங்களையும் விட்டுச் சும்மா விருந்தே பேரின்பத்தை யடைபவனோ, இவ்விருவருள்ளே மூடனென்று எவனைச் சொல்லலாம்? மனமானது பொறிவழியாகப் புறத்துவிடயங்களிற் செல்லுமானல் விடயமயமாகிய உலகமேதோன்றும்; அகத்தே ஒடுங்குமாயின் பேரானந்த ரூபமாகிய சிவமே தோன்றும். சிவம் தோன்ற அறிவினிடத்து வியாபித்தவிடயமயமாகிய உலகம் காணப்படாமல் துன்பவடிவாகிய பிறவிக்கடலைக் கடந்து பேரின்பத்தை யடைவார்கள் என்று சொல்லி, பிறகு நமதுமகிமையை இவனுக்குப் பிரத்தியக்ஷமாகக் காட்டி இவன் கருத்தைத் திருத்த வேண்டுமென்று திருவுளங்கொண்டு கொக்கிதேவனை நோக்கி, இவ்விடத்தில்தோண்டக்கடவையென்று கட்டளையிட, அப்படியே அவன்தோண்டுதலும் அவ்விடத்தில் செய்யுட்பொருள்போல ஒருபொற்சிகரங் காணப்பட்டது. அதன்மேலும் தோண்ட வறியனுக்குக் காணப்பட்ட பொற்குவைபோல அந்நிலத்தினுள்ளே மனம் புறத்து விடயங்களிற் செல்லாமலும் சரீரமசையாமலும் பரவசப்பட் டிருக்கிற ஒரு சிவயோகியைக் கண்டார்கள். உள்ளங்கையி லமர்ந்த இஷ்டலிங்கத்தின்மேல் திருஷ்டிவைத்து தேகத்தில் எலும்பையன்றித் தசை சிறிதுமின்றி யோகநித்திரையி லிருக்கிற அநிமிஷன் என்னும் மஹாயோகியை நோக்கி, கொக்கிதேவனே! சற்கருமஞ் சிறிதுமின்றி யிருக்கிற சிவயோகியைத் தரிசித்தாயா வென்று அவன் மனத்திலுள்ள சந்தேகம் நீங்கக்காட்டி அறிவிக்க, தவறிக்கடலில் விழுந்து கரைகாணுமல் துன்பப்படுவோர்க்கு மரக்கலமொன்று சமீபத்து வந்ததுபோல பரமாசாரியர் எனக்குக் கிடைத்தாரென்று ஆச்சரிய

மடைந்து, சரீரம் நடுங்கவும் கண்களில் ஆநந்த பாஷ்ட மொழுகவும் நெஞ்சுருகி, குருசிஷ்ய க்ரமத்தை விளக்கும்பொருட்டு வணங்கினான். வணங்குதலும், சிவயோகியின் கையிலிருந்த இஷ்டலிங்கமானது காந்தத்தைக் கண்ட இரும்பைப்போல அல்லமதேவனது கையில் வந்து அமர்ந்திருந்தது. அப்போது அந்தச் சிவயோகியின் சிவகளையும் அந்தச் சிவலிங்கத்தோடு அல்லமதேவனிடத்திற் சேர்ந்துவிட்டது. இவ்வாறு இஷ்டலிங்கமானது அல்லமதேவனிடத்தில் வந்து சேர்ந்ததையும் அந்த இஷ்டலிங்கத்தோடு எழுந்தருளியிருந்த சிவயோகியையும் கொக்கிதேவன்கண்டு மனமகிழ்ந்து, இவ்விருவரது பெருமையைச் சொல்லுதற்கு வேதாதிகாரியாகிய பிரமதேவனாலும் முடியாதென்று சொல்லி, அல்லமதேவனைநோக்கி, சிவலிங்க நிஷ்டையையுடைய ஞானயோகியைத் தேவரீரது கிருபையினால் தரிசித்தேன்; இனிச் செய்யவேண்டிய கருமங்களெல்லாவற்றையும் இப்பொழுதே முடித்துவிட்டேன்; ஞானயோகத்தில் நிலைத்துவிட்டேன்; தேவரீர் செய்த வுதவிக்கு அடியேன் செய்யத்தகுந்த கைம்மாறொன்றுளதோ? மேகத்துக்குக் கைம்மாறு இவ்வலகத்தில் யார்செய்வார்கள்? தேவரீரையும் உமதுகையி லெழுந்தருளியிருக்கிற இஷ்ட லிங்கத்தையும் அநிமிஷனென்னும் சிவயோகியையும் இப்பொழுது ஒப்பற்ற பரம்பொருளாக அறிந்தேன் என்று அல்லமதேவனது செந்தாமரை மலர்போன்ற திருவடியை வணங்கிச் சொல்லுவான். ஐயனே! என்னை யெனக்கு அறிவித்ததுபோல இந்த இஷ்டலிங்கமானது அகத்திலும் புறத்திலும நிலைபெற்றிருக்குந் தன்மையை உமது திருவடியை வணங்குகின்ற அடியார்களுக்கெல்லாம் நன்றாயறிவித்துச் சரவுயிர்களைப்போல உலகத்திற் சஞ்சரிக்கக் கடவையென்று வணங்கினான். கொக்கிதேவன் இப்படிச் சொல்லி வணங்கக்கண்ட அல்லமதேவர் தாம்

பெற்ற பேற்றை உலகத்தாரெல்லாரும் பெற விரும்பு தல் பெரியோர்களுக்கு இயற்கைக் குணமேயாமென்று புகழ்ந்து கொக்கிதேவனைத் தமது தாமரை மலர்போ லுந் திருக்கரத்தால் தீண்டித் தழுவிக்கொண்டு அநுக் கிரகஞ் செய்தார். இவ்வாறு அல்லமதேவரால் அநுக் கிரகிக்கப்பெற்ற கொக்கிதேவன் உள்ளங்கையிலமர்ந்த இஷ்டலிங்கத்தி லழுந்திய பார்வையும் மனமும் பிறழா மல் நிலைத்திருக்கச் சிவயோகத்தையடைந்து சித்திரப் பாவைபோல அசைவற்றிருந்தான். அடியார்கள் விரும் பினதையே அநுக்கிரகிக்கிற அல்லமதேவர் பரிசுத்த மாகிய இஷ்டலிங்கத்தைக் கையிலேந்திக் கொண்டு பூமியில் நிஷ்காமிய தவத்தைச் செய்கின்ற அன்பர்களு டைய மனத்தில் பேரின்பமதிகரிக்க இளமையாகிய மாமரங்கள் தழைக்கும்படி வந்துலாவுகின்ற தென்றற் காற்றுப்போலச் சஞ்சரிக்கலாயினர்.

கோக்கிதேவர்கதி முற்றிற்று.

---

## பன்னிரண்டாவது

# முத்தாயியம்மைகதி.

அசகண்ணனென்பவனைக் கண்டிலேனென்று துன்பமடைந்து வாடுகின்ற முத்தாயியம்மையின் துன் பமொழியும்பொருட்டு அல்லமதேவர் விரைவாகவந்து பூர்வத்தில் சொன்னவிதத்தைச் சொல்லுவோம்.

விபூதியணிந்து அதனால் அழகுமிகுகின்ற அல்லம தேவன் அடியார்களுடைய மனோதுக்கத்தை ஆடை யிழந்த ஒருவனது கையைப்போல விரைந்துபோய் நீக்கி யருள்செய்துகொண் டிருக்குங்காலத்தில், தனது பாசபந்தங்களைச் சேதித்த அசகண்ண னென்பவன் மறைத்துக்கொண் டிருந்த மிக்க சிவபக்தியைப் புறந் துக் கண்டபொழுதே உடம்பை வெறுத்து நீங்கிச்

சிதாகாச ரூபமானன் என்று அறிஞர் சொல்லுவர், அப்படிச் சிதாகாச ரூபமான அசகண்ணன் தேஹபா வம் நீங்கிப் பரிபூர்ண ரூபமான தன்மையை அவனு டன்பிறந்தவளாகிய முத்தாயியம்மை யறியாதவளாய்ச் சென்று, அசகண்ணன் உயிர் நீங்கினனென் றெண்ணி மனந்தளர்ந்து மயங்கிப் புலம்பி வருந்திக்கொண்டிருக் குஞ் சமயத்தில், இஷ்டலிங்கமும் உள்ளங்கையும் பிர காசிக்க அல்லமதேவர் அவ்விடத்திற்குவந்தனர், வரு தலும் மனங்கலங்கி நின்ற முத்தாயியம்மை அவரைக் கண்டு, அவரது திருவடியில் விழுந்து வணங்கி, அச கண்ணனைக்குறித்துத் தான்கொண்ட துன்பந்தணியும் பொருட்டுக் கதறியழுதாள். பாவியாகிய நான் எனது சகோதரனை யிழந்து வருந்துகிற வருத்தமெல்லாம் ஒழியும்படி தேவரீர் பெருங்கருணையால் இவ்விடத் திற் கெழுந்தருளினீர் என்று சொல்லி மறுபடியும் வணங்கினள். வணங்கின முத்தாயி யம்மையின் முகத்தை அல்லமதேவர் பார்த்து, தெய்வப்பெண்ணை நிகர்த்தவளே! நன்மையையுடைய அசகண்ணனது தன் மையையறியாமல் வருந்துதல் அறிவுடையார்க்கு அழ கல்ல என்று சொல்லிப் பின்னுஞ்சொல்லுகிறார். என் றும் இறவாத அசகண்ணனை இறந்தவனாக நீ யெண் ணிக் கண்ணீர்விட்டுக் கலங்கினாய்; எங்கும் ஒழிவில்லா திருக்கிற ஆகாயம் ஒழிந்து போயிற்றென்று கலங்கு வாருமுண்டோ? தன்னைச்சச்சிதாநந்தரூபமாகிய பரம சிவனாகவே யறிந்தவன், அற்பமாகிய தோலாற் செய் யப்பட்ட சரீரத்தை நானென்று விரும்பமாட்டான். இவ்வுலகத்தில் சற்குருவருளால் தன்னை யறிந்தவன இந்தச்சரீரத்தைச் சோறுண்ட இலைக்குநிகராயெண்ணி யொழிப்பான். பூமியில் மானிடனாய் எழுந்தருளின பரமகுருவின் அநுக்கிரகத்தால் தனது யதார்த்த ரூபத்தை உள்ளபடி யறிந்தவன் சரீரத்தை விடுங்கா லத்தில் மட்குட முடைந்தகாலத்தில் அந்தக் குடத்தி

லிருந்த ஆகாசத்தை நிகர்ப்பான். பந்த பாசங்களெல்லாம் முறிந்தோடுதற் கேதுவாகிய சிவஞானத்தை யுடையவன் உலகிலுள்ள மாநுடர் உய்யும்வண்ணம் அவர்கள் கண்ணுக்கெதிரே வெந்த ஆடையைப்போலக் காணப்படுவன். எல்லாப் பொருள்களும் தானேயாயிருக்கிற சிவத்தோடு பொருந்துதற்குரிய ஞானக் கண்ணுள்ளவனுக்கு உறவு பகையென்னும் எண்ணமில்லை. சரீரமே நாமென்றெண்ணி யிருந்து அழிகின்றவர்கள் அழியாத அறிவே வடிவாகி உடம்போடு கூடியிருந்தும் தாக்கற் றிருப்பவர்களையும் தம்மைப் போலவே பார்ப்பார்கள். அவர்களுடைய யதார்த்த நிலையையறியார்கள். கூத்தனது நாடகக்கோலத்தோடு கூடிய நடிப்பை உலகத்தார் பார்த்து உண்மையென்றெண்ணுர். மிக்க தவத்தினை யுடையவர் யாவராலுந் துதிக்கப்பெற்ற ஞானவானுடைய சரீரநடிப்பை அநுபவத்தாலறிந்து சத்தியமென்று நினையார். அசகண்ணனது தன்மையை அறியாமல் அவன் இறந்தானென்றெண்ணி யிரங்கிஞய், இந்த எண்ணத்தை மறந்துவிடுவாயாகவென்று சொல்ல, பூர்ணஞானத்தை யுடைய முத்தாயியம்மை சொல்லுவாள். பாம்பின் காலைப் பாம்பு அறிவதன்றி அறிவோர் வேறிலர்; அதுபோல அசகண்ணனது யதார்த்த நிலையை யான் அறியவல்லேனே? என்பிழையைப் பொறுத்தருள வேண்டும், எமது சந்ததியார் செய்ததவப்பயனுய் தேவரீர் இங்கே யெழுந்தருளினதை நோக்குமிடத்தில் கங்காநதியானது முடவனிருக்கு மிடத்தைத் தேடிவந்தாற்போலிருக்கின்றது; என்று பூசனை முதலிய வழிபாடுகள் செய்து, பந்தநாசத்திற்கேதுவாகிய மோக்ஷபதத்தைப் பெறும்படி எனக்கு அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, அவளது பிரார்த்தனைக்கு அல்லமதேவர் மகிழ்ந்து அவளைநோக்கி, நீபந்தபாசங்களை யொழித்து முத்திநிலையபடைய விரும்பினையாதலால் இவ்வுலகத்தில்

உன்னை நிகர்ப்பவர் யாருளர்? ஒருவருமில்லை. ஒரு கோடி பிறப்புப் பிறந்து பிறந்து புறக்கருமங்களைச் செய்தாலும், செய்தவர்கள் ஆணவவிருள் நீங்கினாலன்றி மேலான முத்தியையடைவார்களோ? அடையார். பிறப் பிறப்புக்களையாம் ஒழிப்போமென்று தமதுகருத்தைப் புறக்கருமங்களிற் செலுத்தித் திரிவதெல்லாம் எரியா நின்ற நெருப்பை நெய்வார்த்து அவிக்க நினைப்பதை நிகர்க்கும்; எல்லை கடந்தோடுகின்ற மனத்தைநிறுத்திக் கட்டுதலே வீடு, மனத்தை நிறுத்தாமல் விடயங்களிற் செல்லவிடுதலே கட்டு என்று முத்தாயியம்மைக்குச் சொல்லி அநுக்கிரகஞ்செய்தார். பொய்யாகிய குப்பை யைக் கிளறியொழித்து அதனுள்ளிருந்த முத்தினை யெடுத்துக் கொடுத்தாற்போல மயக்கத்துக் கேதுவாகிய தத்துவங்களையெல்லாம் தள்ளி மெய்யாகிய தன்னைப் பெறும்படி முத்தாயியம்மைக்கு அருள் செய்தலும், அவள் அல்லமதேவரைநோக்கி, சுவாமீ! மோக்ஷத் தைவிரும்பிச் சரீரத்தை வெறுத்தேனில்லை; எவ்விடத் திலும் சற்குருவைத் தேடித் திரிந்தேனில்லை; அப்படி யிருக்கவும் நான் உய்யும்படி என்னைத்தேடி யெழுந்தருளி எனக்கு அநுக்கிரகஞ் செய்தீர் என்று அல்லமதேவரது திருவடியை வணங்கிப் பிறவித் துன்பம் நீங் கப்பெற்றுச் சிதம்பரத்தை யடைந்து எல்லையற்ற பேரின்பத்தோடு வாழ்ந்திருந்தாள்.

முத்தாயியம்மைகதி முற்றிற்று.

---

## பதின்மூன்றாவது

# சித்தராமையர்கதி.

அழகிய சித்தராமைய ரிடத்திற்கு அல்லமதேவர் [redacted]ன்று அவர்க்குச் சொல்லியருளின சிறந்த நிலையைச் சொல்லுவோம். தம்மையடுத்த அன்பரெல்லாருக்

கும் கொடிதாகிய பிறவித் துன்பத்தை யொழித்து மெய்ஞ்ஞானத்தையும் அதனாலுண்டாதற்குரியபேரின்பதையும் அருள்செய்வோராகிய அல்லமதேவர், கரும யோகத்தையும் மற்றைக் கிரியைகள் எல்லாவற்றையும் அநுஷ்டித்து வாழ்கின்ற சித்தராமையரது பட்டணத்தை யடைந்து, அவரது ஏவலாட்கள் செய்கிற கோயில் திருப்பணி, தடாகம் சோலை நந்தவனம் முதலியவற்றையுண்டாக்கல் முதலிய கிரியைகளைக் கண்டு, இந்தச் சித்தராமையர் பயனில்லாத செயல்களைச் செய்துகொண்டிருப்பவர், அறிவென்பது இவர் இருக்கும் ஊரிலுமிருக்காதென்று இகழ்ந்து, இவர் இல்லறத்தை வெறுத்துத் துறவறம் பூண்டிருந்தும் இந்த வீண்காரியங்களில் பிரவேசித்திருப்பதை நோக்குமிடத்து இரும்புவிலங்கை நீக்கிப் பொன்விலங்கு பூண்டுகொண்டாற்போ லிருக்கின்றதென்றுநினைந்து, அங்கே ஒரு தடாகத்தைத் தோண்டிக்கொண் டிருப்பவர்களிடத்திற்போய், அவர்களை நோக்கி, இந்தச் சித்தராமையர் உமியைக் குத்துவோர்போலப் பயனற்ற வீண்காரியங்களிற் பிரவேசித்திருக்கிறாரே; விழலுக்கு முத்துலைபோட் டிறைப்பதுபோல உங்களை யிந்தக் கஷ்டமானதொழில் செய்யும்படி யேவினாரே; இந்த ஒட்டராமரது கருத்து யாதென்றுவினவ, இவர் வினவின சொற்கள் அந்த வொட்டரது காதுகளில் கொல்லனுலைக்களத்திற் காய்ந்த வேல்போல நுழைதலும் அவர்கள் பிரபுதேவரை நோக்கி, நீ பித்தனாயிருக்கிறாய்; எமது குருநாதனை யிகழ்ந்து தகாதவார்த்தைகள் சொல்லினை; தேவர்களும் சிஷ்டனென்றுபுகழ்தற்குரிய எங்கள் சித்தராமையரை ஒட்டனென்று இகழ்ந்துரைத்தாய்; நீதுஷ்டனா யிருக்கிறாயென்று சொல்லிக் கோபித்து முகஞ்சுளித்துக் கொண்டார்கள். அப்போது அல்லமதேவர் அந்த வொட்டரைநோக்கி, நீங்கள் ஏன் வீணாகக் கோபித்துக் கொள்ளுகிறீர்கள்?

உமது குருவாகிய ராமரிடத்தில் சித்தர் செயல்சிறிது மில்லாமையால் அவரை உங்களைப்பார்க்கிலும் சிறந்த வொட்டரென் றழைக்கிறேன் என்றார். இதைக்கேட்ட வொட்டர்கள் அல்லமதேவரை யழைத்து, பெரியோர்களால் நியமிக்கப்பட்டு உலகத்தில் நிலைபெற்றிருக்கிற நல்ல தருமங்களைச் செய்வோன் தேவனென்றும், அவற்றை யிகழ்ந்தவன் நரகத்தை யடைவானென்றும் நல்லோர் சொல்லுவர். தீக்கருமங்களை யொழித்து நற்கருமங்களைச் செய்வோரை யறிந்து அவரோடுறவு செய்தாயில்லை; ஆதலால் நீ தர்ம மார்க்கத்தை விட்டவனா யிருக்கிறாயென்று சொன்னார்கள். அதுகேட்ட அல்லமதேவர் ஒட்டரைநோக்கி, இருவினை யொப்பு மலபரிபாகங்களை யுடையவர்கள் என்னைக்கொண்டாடுவார்கள்; நீங்கள் வினைவசப்பட்டுழல்வோர்களாதலால் என்னையறியீர்களென்றார். அதுகேட்ட ஒட்டர்கள் சற்கருமமும்எனக்குடன்பாடில்லையென்றுசொல்லினையாதலால்,உனக்கொருநற்கதியுமில்லையென்று அல்லமதேவரைச் சினந்துரைத்தார்கள். அதற்கு அல்லமதேவர் அந்த வொட்டரைவிளித்து, கல்வியில்லாதமூடர்களே! நீங்கள் வீணாய் என்னோடு வன் தர்க்கம் பேசுகிறீர்கள்? நீங்கள்போய் உங்கள் குருவாகிய கற்றறி மூடனுக்குச் சொல்லுங்கள்; அவன் இங்கே வருவானாயின் அவன் சொல்லுஞ் சொற்களைக் கொண்டு அவனது அறிவி னெல்லையுங் காண்போ மென்றார். சித்தராமனை மூடனென்று அல்லமதேவர் சொன்ன சொல்லானது, அந்த வொட்டர்களுடைய கோவமாகிய நெருப்பில் வார்த்தநெய்போலிருந்தது. அதனால் அவர்கள் யாவரும் தமது அழுக்குத்துணியை யிறுக்கிக் கட்டிக்கொண்டு, கோவமிகுதியால் பல்லைக்கடித்துப்பெருமூச்செறிந்து மீசையை முறுக்கி நகைத்து, தமது முரட்டுக் கைகளால் கற்களைப் பொறுக்கி மடியில் கட்டிவைத்துக்கொண்டு, நமது குருவை யிகழ்

ந்தவனாகிய இவனைக் கல்லாலெறிந்து கொல்லுவோ மென்று அல்லமதேவரைச் சூழ்ந்துகொண்டு, கட்டுங் கள், பிடியுங்கள், உங்கள் கையிலிருக்கிற மண்வெட்டி யினால் வெட்டுங்கள், நிந்தித்தவாயிலுள்ள வெண்பற் களைத்தட்டுங்கள், தலைவீங்கும்படி குட்டுங்கள் என்று மனங்கொதித்துக் கூடி, அல்லமதேவரது திருமேனி யின்மீது தம் கை சலிக்கும்படி கல்மழை பெய்தார் கள். பெய்தும் ஒரு கல்லாயினும் இவர் திருமேனி யின் மீதுபடவேயில்லை. முற்காலத்தில் சாக்கியநாய னாரெறிந்த கல்லேயன்றிப் பிறரெறியுங்கற்கள் பரமசி வரூபமாகிய அவர் திருமேனியிற் படுமோ? ஒருவன் தனது சரீரநிழலைப் பூமியிற் புதைக்குந்தோறும் அந்த நிழலானது புதைபடாமல் மேலெழுந்து நிற்பதுபோல அந்த ஒட்டரெறிந்த கற்குவியலின்மேல் அல்லமர் நின் றார். ஒருவன் தீங்குசெய்தால் அவனைத் தண்டிப்பவன் அதமனென்றும், அந்தத் தீங்கைப் பொறுத்துக்கொள் வோன் மத்திமனென்றும், அதனை மறந்துவிடுவோன் உத்தமனென்றும்பெரியோர் சொல்லுவார்கள். எதிரே நின்று பல தீமைகள் செய்தாலும் அவற்றையெல்லாம் உடனே மறந்துவிட்டு, தாமரை மலர்போல முகமலர் ச்சியுள்ளவனாய் நிற்கிற இவன் யாவனோ? எங்கிருப்பவ னோ? தாமரை மலரில் வாழ்கின்ற பிரமனோ? தாம ரைக்கண்ணனாகிய திருமாலோ? இடபவாகனனாகிய சிவபெருமானோ என்று சொல்லவு மொண்ணாது. ஏனென்றால், அவர்கள் தீமைசெய்வோரைத் தண்டிப் பவராயிருக்கிறார்கள். இவன் தீமைசெய்வோரிடத் திலும் நன்மைசெய்பவனாயிருக்கிறான் என்றிவ்வாறு கண்டோர் சொல்லி நின்றார்கள். கல்லெறிந்து கைச லித்து நின்ற ஒட்டர்களோவென்றால், அல்லமர் மீது கல்லெறிபடாமையைக் கண்டு, இவன் மந்திர வித்தை யில் வல்லவனென்று நினைந்து, இவனை வலிந்து பற்றி க்கொல்லுவோமென்று கிட்டிவந்தார்கள். வருதலும்,

பல குடங்கள் தோறுமுள்ள நீரில் சந்திரன் பிரதிபிம் பித்துத் தோன்றுதல்போல, அநேக சரீரங்களுண்டா க்கி, அவையாவினும் அல்லமர் பிரதிபிம்பித்துத் தோன் றிநின்றார். அப்போது அந்த ஒட்டர்கள் திகைத்து நின்று, இத்தனை அல்லமர்களுக்குள்ளே நாம் எந்த அல்லமனைப்பற்றுவோம்? உண்மையான அல்லமன் இன்னானென்று தெரியவில்லையேயென்று மனமயங்கி த்தங்கள் தலைவனாகிய சித்தராமனிருக்குமிடத்தையடைந்து, ஐயனே! நாங்கள் வேலைசெய்யுமிடத்தில் யாரோ புதியன் வந்து உன் பெருமையை அறியாமல் உன்னைப் பலவாறு இகழ்ந்து பேசினான்; அப்படி அவன் இகழ்ந்துபேசக் கேட்டும், இன்னமும் நாங்கள் உயிர்விடாமலிருக்கிறோம் என்றார்கள். அதுகேட்ட சித்தராமனுக்கு அல்லமதேவரது திருவடியையடைந்து உண்மை ஞானம்பெறுதற்குக் கருவியாகிய ஒரு பெருங்கோவமுண்டாயிற்று. உண்டாதலும், என்னையிகழ்ந்தவன் யாவனோ அவனது நாவையறுத்துவிடுகிறேன் என்று சொல்லிக்கொண்டேயெழுந்து, என்னை வைதவன் யாரென்று நெருப்புப்போல அல்லமருக்கெதிரே வந்தான். அல்லமதேவரும் அவனது கோவத்தைத்தெரிந்துகொண்டு, தலையையும் கையையும் அசைத்துப்புன்னகைசெய்து, தோண்டுகின்றவர்களைத் தாங்கும் நிலம்போலப் பொறுமையுடையையாதலால் நீ பெரிய தவத்தையுடைய யோகியாவாய்; பிறவிநோயை அனலிலிட்டபஞ்சுபோல உருவழித்தற்குரியது பொறுமையே யாமென்று துணிந்திருக்கின்றனை போலும்; காலன் உனக்கெதிரே பொறுமையுள்ளவனாவன்; ஆலாகலவிஷம் நல்ல அமிர்தமாகும்; என்றிவ்வாறு அவனது பொறுமையையும் தவத்தையும் புகழ்பவன்போல இகழ்ந்தார். அதைக்கேட்ட சித்தராமன் அடிக்குந்தோறும் பந்து விசை கொண்டெழுவதுபோல முன்னினும் கோவமதிகரித்து அல்லமரை

நோக்கி, உனக்கு நான் ஒரு அபராதமும் செய்யாதிரு க்க, என்னைக் குறிப்பாயும் வெளிப்படையாயும் நீ யிகழ்ந்தமையால் நான் பொறுக்கமாட்டேன்; எனது நெற்றிக்கண்ணாகிய நெருப்பினால் உன்னை வறுத்துப் பொடியாக்கிவிடுகிறேன்; ஒருவன் வீணாயிகழ்ந்து பேசினால் யார்தான் பொறுப்பார்கள் என்றான். அது கேட்ட அல்லமர் சித்தராமனைநோக்கி, தன்னைக்கொ ல்லினும் பிறிதோருயிரைக்கொல்லுதல் பாவமென்று அறிஞர் சொல்லுவார்கள். உனக்குத் தருமத்தைப் போதித்த என்னைக் கொல்லுவேனென்று நீ சொன் னதனால் நீ தருமவானே. சாதநங்களுள் நீறும் பெரிய தவங்களுள் உயிர்க் கொலை செய்யாமை யும், பாவங்களுள்ளே உயிர்க் கொலை செய்த லும் சிறந்தனவென்று பெரியோர் சொல்லுவர், இதனை நீயறிந்திலைபோலும் என்றார். என்று சொல்லு தலும் சித்தராமன் மறுபடியும் அல்லமரைநோக்கி, நீ உன் செருக்கொழிந்தாயில்லை, என்னெதிரே செவி சுடுசொற்களைச்சொல்லி நின்றாய், உன்னைவிடமாட் டேன், என்று மிகவுங்கோபித்துத் தனது நெற்றியி லுள்ள நெருப்புக்கண்ணைத் திறந்தான். நெற்றியிலுள் ளநெருப்புக் கண் காமனையெரிப்பதன்றிக் காமமில் லாத யோகியைச் சுடாததலால், அந்த நெற்றிக் கண் ணெருப்பானது அல்லமதேவரது திருவடிக்கீழ்ச்செ ன்றுவணங்கியது. அப்படிவணங்கிமீண்டநெற்றிக்கண் ணெருப்பானதுஒருவீரன்மேற் பாயத்துணிந்துபோய், அவனதுவீரத்தன்மையைக்கண்டுவலிகுன்றி,வேறொரு பேடியின்மீதுபாயச் செல்லுதல்போல சித்தராமனது பட்டணத்திற் பற்றிக்கொண்டது. சிவபெருமானது நெற்றிக்கண்ணெருப்பானது முப்புரத்தையெரித்தாற் போலச் சித்தராமனது நெற்றிக்கண் ணெருப்பானது அவனது நகரையே யெரிக்கத் தலைப்பட்டது. அப்

யேரிந்து அந் நகரத்திலுள்ள ஆபரணங்களெரிந்தன, சிறந்த ஆடைகளெரிந்தன, சந்தனமரத் துண்டுகளெரிந்தன, பரிமள திரவியங்களெரிந்தன, ரத்னங்களெரிந்தன, இதைப் பார்த்தவர்களுடைய வயிறுகளும் எரிந்தன. அந்நகரத் துள்ளவர்கள், குழந்தைகளை யெடுப்பவரும், முதியோரை யிழுப்பவரும், புதையலை யெடுப்பவரும், புகவொண்ணுமல் மண்ணிற் புரண்டு வாயடித்துக் கொள்பவரும், நெருப்பை யவிப்பவருமாகிப் பதைத்துக் கடல்போல இரைந் தழுதார்கள். இந்த நெருப்பின் வெப்பத்தால் ஆகாய கங்கையுங் கொதித்தது. அப்பொழுது, அருட்கடலாகிய அல்லமதேவர், அந் நகரத்தாரது துன்பத்தை யொழிக்க நினைத்து, முற்காலத்தில் ஆலாகல விஷத்தையுண்டு தேவர்களைக் காத்ததுபோல, இந்த நெருப்பை யொரு இமைப்பொழுதில் தணித்து அந் நகரமானது முன்னிலும் அதிகமாகப் பிரகாசிக்கும்படி செய்தருளினர். ஒருகம்மியன் கண்டபடி செய்த ஒரு பொன்னுபரணத்தை, மற்றொருகம்மத் தொழிலிற் சிறந்தவன் வந்து அழித்து நன்றாகச் செய்ததுபோல அந்நகரத்தை முன்னிலும் நன்றாகப் புதுக்கினதைக் கண்ட சித்தராமன் தன் செருக்கொழிந்து, நாணமடைந்து, முகங்கருகி நின்று, இவன் என்னை யாட்கொள்ளவந்த பரமசிவனே யாவனென்று மனத்திலெண்ணி, அல்லம தேவரைநோக்கி, நீயேன் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டும்; குழந்தைகள் செய்த பிழையைத் தாயன்றிப் பொறுப்பவர்யார் என்று சொல்லி அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கினன். அப்பொழுது பரமசிவ வடிவாகிய அல்லமர், முற்காலத்தில் கைலாய மலையை அசைத்தெடுத்த ராவணன் வலி தொலைந்து பிரார்த்திக்க அவனது பிழை பொறுத்து அவனைக் காத்தருளினற்போல இந்தச் சித்தராமன் செய்த பிழையைப் பொறுத்தருளிக்கையினு லெடுத்தணைத்து, கல்வியையும் தவத்தை

யும் அழிக்கின்ற கோவத்தைப் பற்ற விட்கூவா யென்றுசொல்லிப் பின்னும் சொல்லுகிறார். கோவம தன்னின்வலியவனிடத்திலும்சமானமானவ னிடத்தி லும் செல்லாதாதலால் அவரிடத்தில் கோவத்தைக் காப்பது அறமெனப்படாது; செல்லுமிடமாகிய மெலி யாரிடத்திற் கோவத்தைக் காப்பதே அறமெனப்படும். வைதவனை வாழ்த்தினவனாகவும், தீமைசெய்தவனை நன்மை செய்தவனாகவும் கொள்வோன் முத்தியைக் கண்டவனுவன்; அவ்வாறு கொள்ளாதவன் பாமரனே யாவன். பெரியோரைக் கோவிப்பவன் மலையைக் கல் லியகோலை கிகர்ப்பான்; சமானமானவர்களைக் கோவி த்தவன் தன்னால் செய்யப்பட்ட தீங்குகள்யாவும் அவ ர்களால் செய்யப்பட்டு வருந்துவன். இழிந்தவரைக் கோவித்தால் எரிவாய் நிரயத்தில் வீழ்வான்; ஆதலால் மிக்கார் ஒத்தார் இழிந்தவர் என்னும் மூன்றிடத்தும் கோவங் கொள்ளா திருத்தலே நன்மையாகும். இந் தக்கோவமில்லா திருத்தல் நமக்குமாத்திரமே யன்று, தேவர் முனிவர் முதலியோர்க்கும் நன்மையேயாம் என்று சொன்னார்.

அதுகேட்ட சித்தராமன் அல்லமரை நோக்கி, சுவாமீ! முத்தி யடைதற்குரிய சாதனங்களொன்றும் என்னிடத்தி லில்லையாயினும் என்னை வலியவந் தாட் கொண்ட நன்மையே நன்மையாகும். மதயானையை வலிந்து பற்றித் திருத்திக் காலாவிட்ட வேலையைத் தலையாலே செய்யும்படி செய்து கொள்வதன்றி அது தானேவந்து உறவாவதுண்டோ? அதுபோலவே அடி யேனையும் தேவரீர் திருத்தி யாட்கொள்ளுதல் தகுதி யாம். வெற்றி மிகுந்த மஹாவீரனது வீரத்தன்மை எதிர்ந்தோரது படைமேற் செல்லும்போது விளங்கு தல்போல, தேவரீரது அருள்வலி என்தீமைத் திரட் கொலையால் அணைப்படும் என்றுசொல்லிவணங்கினன்.

வணங்கின அந்தச் சித்தராமனை அல்லமதேவர் அருளோடுபார்த்து, பக்குவியாகிய இவனுக்குப் பேரின்ப முத்தியுண்டாகும் வழியைத் தெரிவிப்போமென்று திருவுளம்பற்றிச் சொல்லத்தொடங்கினார். பக்குவி யல்லாதவனுக்கு வேதாகம முடிவாகியபொருளை உபதேசிப்பவன் அநாசாரியனாவன். அவன் ஆசாரியரிற் பதடியென்றுஞ் சொல்லப்படுவன். பக்குவம் பார்த்து உபதேசிப்பவன் ஆசாரிய சிங்கமென்று சொல்லப்படுவன். பரமஞான மொன்றுமாத்திரம் முத்திக்கேதுவாகும். மற்றைச் சரியைகிரியை யோகங்கள் ஞானமுண்டாவதற் கேதுவாகும் என்று வேதங்கள் சொல்லா நின்றன. ஆதலால் இந்தச் சரியைகிரியை யோகங்களை மேலான பொருளா யெண்ணிக் களிப்பவர் கீழ்மக்களேயாவர். கருமமும் யோகமும் மனத்தைப் பரிசுத்தமாக்கி விடயங்களிற் செல்லாது தடுக்கும். அந்த மனத்தால் ஈச்சுரன் நித்தியன் என்கிற ஞானந்தோன்றும். ஞானந்தோன்றுதலும், அநித்தியமா யழிந்தொழிகின்ற பொய்யுடம்பும் அதற்குரிய பொருள்களுமாகிய இவற்றை வெறுத்துச் சற்குருவைச் சென்றடைந்து, தத்துவங்களை யெல்லாங் கடந்து நின்ற ஒப்பற்ற பிரமப்பொருளையே தரிசித்துக் கொண்டிருப்பான். ஐம்புலன்களையும் களைந்தவுடனே ஐம்பொறிகளும் ஐம்பூதங்களும், கரணங்கள் நான்கும், மற்றைக்கலை முதலியஐந்தும், சுத்தமுதலியஐந்தும் அடியில் வைக்கப்பட்டகுடம் விழுந்தால்மேலேவைக்கப்பட் டிருக்கிற குடங்களெல்லாம் ஒருங்கே விழுவதுபோல அழிந்தொழியும். பஞ்சேந்திரியங்களையும் ஒவ்வொன்றாய் விட்டால் ஏனையவிடயங்களிற்சாரும். முதன்மையாகிய மனத்தை யொழித்தால் எல்லாமொழியும். அது எதுபோலவென்றால், ஐந்தலை நாகத்தின் தலையொன்றை யறுத்தால் மற்றைத் தலைகள் விஷத்தைச் சிந்திக்கொண்டேயிருக்கும்; கழுத்தை யறுத்துவிட்டால், விஷ

முழுதும் நீங்கிப்போம் அதுபோல வென்று சொன்னார். அன்றியும் மனமடங்கினால் உடலுயிர்கள் ஒன்றற்கொன்று பேதமானவையோ அபேத மாயினவோ என்னும் பித்து நீங்கிவிடும் என்று உண்மைஞானத்தை உபதேசித்தருளினார். அப்போது சித்தராமன் அல்லமதேவரை அடிவணங்கி, என்போல உன்னருள் பெற்றவர் ஒருவருமில்லை யென்று புகழ்ந்து குற்றேவல் செய்யாநிற்க, அல்லமதேவர் சொன்னலாபுரத்தி லெழுந்தருளி யிருந்தார்.

சித்தராமையர்கதி முற்றிற்று.

---

## பதினொன்காவது

# வசவண்ணர்கதி.

சித்தராமனோடு, ஆசாரிய சிரேஷ்டராகிய அல்லமதேவர், பக்தர்களாகிய பயிர்களை விளைவிக்கின்ற கல்யாணபுரியென்னுங் கழனியில்பாய்ச்சிய நீர் என்று சொல்லுதற்குரிய வசவண்ணரைப் பயிரிடுமோர்தர் போலக் கண்டு உண்மையாகிய தமது விருப்பத்தை அந்தக் கல்யாணபுரியின்மீது வைத்த செய்தியை யாம் இனிச் சொல்லுவோம்.

எப்படியென்றால், சொன்னலாபுரம் தவஞ்செய்ததென்று விண்ணுலகத்தாரும் துதிக்கும்படி அல்லமதேவர் அவ்விடத்தில் எழுந்தருளி யிருக்குங்காலத்தில், அழகுபொருந்திய கல்யாணபுரியாகிய நந்தனவனத்தில் வசவண்ணரென்னும் தாமரைமலரின் அவரது கீர்த்தியாகிய வாசனை அவரது இனிய மொழியாகிய காற்றினால் வந்து காதென்னும் மூக்கில் நுழைய இந்தப் பெரியவுலகமானது மிகவும் சந்தோஷமடைந்தது. வசவண்ணரது மேலாகியபுகழ்கள் பரமசிவனது

கிர்த்தியாகிய சோற்றை யுண்பதற்குத் தகுதியாகிய இனிய சுவையையுடைய வியஞ்சன பதார்த்தமாக வசவண்ணரது சிறந்த புகழ்கள் அமையப் பெற்றன. அவற்றைப் பெருந்தவத்தினர் கூடி யுண்ணுதற்குரிய காவினால் பிறவிப் பசி தொலையப் புசித்தார்கள். பிறவியை நீக்குகின்ற சித்தராமனுக்கு முன்னே சொல்லிய சச்சிதானந்த முதலிய இலக்கணங்களுக்கு வசவண்ணரென்னும் இலக்கியத்தை யுதாரணங் காட்டுதற்பொருட்டு அல்லமதேவர் திருவுள்ளத்தில் நினைத்தருளினார். அடியவர்க் கெளிபவரென்று சொல்லப்படுகின்ற அந்த அல்லமதேவர் சித்தராமனை யழைத்துக்கொண்டு கலியாணபுரிக்குப் பிரயாணப்பட்டுப்போய் அங்கே வசவண்ணரைக் கண்டு இருவரும் மனமகிழ்ந்து, அந்த வசவண்ணர் உண்டாக்கிவைத்த தருமசத்திரத்தில் தங்கித் தமது வழிநடந்த இளைப்பை மாற்றிக்கொண்டு, சிவனடியார் கூட்டம் செல்லக் கண்டு அதன்பிறகு அலங்காரகாண்ட மென்னும் கலியாணபுரத்தைக் கண்டு செல்லும்போது, சித்தராமனை நோக்கி, இந்த நகரத்தின் அலங்காரம்போல வேறெந்த நகரத்திலாயினுங் கண்டதுண்டா வென்று அவ்வலங்காரங்களைத் தனித்தனியே காட்டிக்கொண்டேபோய் வசவண்ணரது திருமாளிகைக்கெதிரே மலைபோலுயர்ந்து தோன்றுகிற கோபுரவாயிலையடைந்து, அவ்விடத்தில் பெருந்தவத்தினரது கூட்டத்தைக் கண்டார்கள். அவர்களில் சிலர் அறுசுவை யுணவை யுண்ண வருவாரும், உண்டு தெருவில் வந்து நிற்பாரும், பெரியோரிருக்கு மிடத்திற்கு அன்னக்காவடி சுமந்து செல்வாரும், மணம்பொருந்திய மலர்களை யெடுத்துக்கொண்டு பரமசிவனைப் பூசை செய்யப்போவாரும், தமக்குக் கொடுத்த ஆடையைத் துண்டு துண்டாகக் கிழித்துக் கோவணமாக்கி மீதியானதை அங்குள்ளார்க்குக் கொடுத்துவிட்டுப் போவாரும், பொன்ரத்நங்கள் ஆடை

முதலியவைகளைத் தமது தேவியர்க்குக் கொடுக்கப் பெற்றுக்கொண்டு போவாரும், நிந்தித்து எம்மோடெதிர்த்த சமணருடைய வலியை வசவண்ணருக்குத் தெரிவிப்போமென்று போவாரும், வசவண்ணரைக் கண்டு வணங்கும்பொருட்டு சிவிகையேறிவந்து இறங்கிப் போவாரும், வசவண்ணரைப் புகழ்ந்து பாடும்பொருட்டு வீணைகொண்டு செல்வாரும் இவ்வாறு அடியவர் கூட்டம் நெருங்கின. வசவண்ணர் தலைவாயிலில் அல்லமதேவரும் சித்தராமனும் நின்று அந்தக் கோலாஹலத்தை நோக்கிக் களிப்படைந்தார்கள். அப்பொழுது அங்கிருந்த அப்பணன் என்னும் பெயரையுடைய ஒரு பரிசுத்தன் இவர்களைக்கண்டு வசவண்ணருக்கு இவர்களுடைய வரவைத் தெரிவிக்கப்போய், வசவண்ணர் பூசை செய்துகொண்டிருக்கையில், பரமசிவனே யிரண்டுருவங் கொண்டுவந்தாற்போல இரண்டு மஹான்கள் நமது தலைவாயிலில்வந்து நிற்கிறார்களென்று சொல்ல, வசவண்ணர் அவனை நோக்கி, கன்றுக்கிரங்கிவந்த தாய்ப்பசுவுக்கு ஒரு தடையுண்டோ? நீபோய் அவர்களை யிங்கே யழைத்துவாவென்று கட்டளையிட, அவனும் அப்படியேபோய் அல்லமதேவரையும் சித்தராமனையும் வணங்கி, ஐயன்மீர்! உங்கள் வரவை அடியேன்போய்ச் சொன்னமாத்திரத்தில், வசவண்ணர் மிகவுங் களிப்படைந்து நான் செய்த பரமசிவலிங்கபூசையின் பயன் இதுவாமென்று உங்களையழைத்துவரும்படி அடியேனுக்குக் கட்டளையிட்டார். எழுந்தருளக் கடவீர்களென்று பிரார்த்திக்க, அல்லமதேவர் கோபிப்பவர்போல வெளிக்குக்காட்டி புன்னகைசெய்து, அப்பணனை நோக்கி, ராஜரீக முடையோரிடத்தில் ஐயமேற் றுண்பவர்களாகிய எங்களுக்கு ஒரு காரியமுமில்லை, நீ போவென்றார். இந்தச் செய்தியை அப்பணன் வசவண்ணருக்குச் சொல்ல, அவர் மிகவும் மனம் வருந்தி, ஐயோ! தாய்ப் பசுவின் வருகையைக்

கேட்ட கன்று தும்பறுத்தோடி யணைவதுபோல நானெழுந்து விரைந்தோடி அவர்களை யடையா திருந்தேனே யென்று துக்கிக்கும்போது, மாச்சிதேவன் அருகேவந்து நின்று, ஏன் துக்கிக்கிறீர்? திருப்பாற் கடலிற் பிறந்த அமிர்தமானது கிடைத்தால் அதனை யுண்ணாது சோம்பியிருப்பவர்க்குச் சமானமாயிருக்கிறீரே என்று சொல்லுதலும், அந்தச் சொல்லானது தூண்டுகோல்போலவுதவ, விரைவாயெழுந்து மாச்சிதேவரை யடிவணங்கி, நான் பெரும் பிழை செய்தேனென்று சொல்லி அருந்தவத்தினரோடு கூடி அல்லமதேவர்க்குச் சமீபத்தில் வந்து, அடியேனது குணம் பாவமேயாகி, யான் அந்தக் குணத்தினின்றும் மாறுபடாதிருக்கிறேன். அதுபோலவே தேவரீரும் உமது குணமாகிய அருளில் நின்றும் மாறுபடாதிருத்தல் வேண்டும். புதல்வர் செய்த பிழையைப் பொறுக்காத தாய் உலகிலுண்டோ? யான் சூத்திரப்பாவை; தேவரீர் அந்தப்பாவையை யியங்குவிக்குஞ்சூத்திரியாயிருக்கிறீர்? என்பிழையைப் பொறுத்தென்னையாட்கொள்ள வேண்டும் என்று அல்லமதேவரது திருவடிமேல் வீழ்ந்துவணங்கினர். நிலமகள் தாங்காமல் தள்ளிவிட்டால் தாங்குவோர் வேறுயாருளர்? கடல் புரண்டால் அதைத்தடுப்பவர் யார்? அதுபோல தேவரீர் கோபித்தால் அதைத் தடுத்துக் கொள்ளவல்லார் உலகிலுண்டோ வென்று சொல்லி மீட்டும் வணங்கினர். மாச்சிதேவரும் அல்லமதேவரை வணங்கி, இந்தச் சிறுவன் தேவரீரது திருவடிக்கு அன்பு செய்யத் தொடங்கு முன்னே இவனை முனியத்தகாது என்று சொல்லினர். அதன்பிறகு கிந்நரப்பிரமனென்பவன் வந்து வசவண்ணரை யநுக்கிரகிக்கவேண்டுமென்றுபிரார்த்தித்தான். மற்றும் அங்கிருந்த சிவனடியார் யாவரும்வந்து எங்களையெல்லாம் அடிமைகொள்ளத் திருவுளமாயின் இந்தவசவண்ணர் செய்த பிழையைப் பொறுத்தருள

வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அவர்களை அல்லமதேவர் நோக்கி, நீங்கள் பேசக் கற்றுக்கொண்டீர்களேயன்றி அவ்வாறு ஒழுகக் கற்றீரில்லை. இப்படி மன மொருவகையாயும் வாக்கொருவகையாயும் செயலொருவகையாயு மிருக்கிற நும்மினும் கூத்தாடிகள் சிறந்தோராவர். அன்பில்லாதவர் கொடுத்த பொன் மலையளவாயினும் ஒருபயனுமில்லை. அன்புள்ளவர் கொடுத்த பொன் அணுவளதாயினும் அது புண்ணியத்தைத்தரும். அன்பில்லையாயின், இல்லறம், துறவறம், தானம், தவம், கல்வி, நல்லோருறவு, யாகம், விரதம், பூசை முதலிய யாவும் புண்ணியப்பயனைத் தரமாட்டா. அன்புடையான் செய்யும் தீமையும் நன்மையாகும்; அன்பில்லாதவன் செய்யும் நன்மையுந் தீமையாகும். அன்பினால் முத்திப்பேற்றையு மடையலாம். ஆதலால் அன்பேயன்றிச் சொற்கள் மனமகிழ்விக்கமாட்டா, என்றிவ்வாறு சொல்லியருளுதலும், வணங்கிநின்ற மாச்சிதேவர் முதலானோர் மீட்டும் அல்லமதேவரை வணங்கி, தேவரீரது கருணையாலன்றி வேறு எதனால் நாங்கள் நல்லவர்களாவோம் என்று பிரார்த்தித்தார்கள். அப்போது சித்தராமர் அல்லமதேவரை வணங்கி, எட்டிக்கனியைத் தின்றாற்போலக் கடையேனது பிழையைப் பொறுத்தருளினாய்; அதுபோலவே இந்த அன்பனாகிய வசவண்ணரையும் அநுக்கிரகிக்க வேண்டும் என்று வணங்கினார். அதன்பிறகு வசவண்ணரும், அடியேன் உன் அடைக்கலம், என்னை யாண்டருளவேண்டும் என்று திருவடியில் வீழ்ந்து வணங்கினார். சென்னவசவரும் மற்ற அன்பர்களும் அல்லமதேவரைச் சூழ்ந்து வணங்கினார்கள். அப்போது அல்லமதேவர் தமது திருக்கரத்தால் வசவண்ணரை யெடுத்து அணைத்து அநுக்கிரகஞ் செய்து, அவரது திருமடத்தில் அளவில்லாத அடியார்களோடு இனிதெழுந்தருளியிருந்தார்.

வசவண்ணர்கதி முற்றிற்று.

# பதினைந்தாவது

# மருளசங்கர தேவர்கதி.

மலைபோல வுயர்ந்த பிரசாத குண்டத்தில் மருள சங்கரன் என்பவரை அல்லமதேவர் கண்டு, அவருக்கு ஞானோபதேசஞ்செய்த சரிதத்தைச் சொல்லுவோம். அளவற்ற பெருந்தவத்தினர் புடைசூழ்ந்துவர, வசவண்ணர் வறிஞர்க்குக் கிடைத்த புதையல்போலத் தமக்குக் கிடைத்த அல்லமதேவரை உடன்கொண்டு தமது திருமாளிகைக்குப்போகத் தொடங்கினர்.

பற்பல அவஸ்தைகளை நீங்கிப் பரசிவத்தையடைவோரது செய்கைபோலப் பல வாயில்களையும் கடந்துபோய்ப் பிரசாத குண்டத்தை யடைந்து அதன் கரைமீது பித்தரைப்போலத் திரிகிறமருள சங்கரனைக்கண்டு அவனது உண்மை நிலையை அறிந்து நிற்கிறபோது, இவரைக்கண்ட மருள சங்கரன் ஒருவறிஞன் தேவாமிர்தத்தைக் கண்டாற்போல மனமகிழ்ந்து விரைந்தோடிவந்து இவரது திருவடியின் மீதுவீழ்ந்து வணங்கினன். வணங்கின மருளசங்கரனை அன்போடு அல்லமதேவர் தமது திருக்கரத்தால் எடுத்து மார்போடணைத்து அநுக்கிரகித்து, அருள்நிலையை யுடைய சித்தராமரைநோக்கி,மருளசங்கரனது குணங்களை வியந்து சொல்லத் தொடங்கினர். பிரசாதகுண்டத்திற் பொருந்திய பிரசாதத்தை மிகுதியாய் உண்டு வாழ்கின்ற மருள சங்கரதேவரது உண்மைத்தன்மையை வசவண்ணர் முதலாகிய அடியார்கள் எல்லாரும் கண்டிலர். இனி காணவல்லார்யார்? சரியை, கிரியை, யோகம் என்கிற இவற்றை அநுஷ்டிப்பவர்களை அவரது செய்கையால் அறிந்துகொள்ளலாம். ஓர்செயலுமின்றி வாழ்

கின்ற ஞானியை அறியலாகுமோ? ஒரு சிவஞானியான வன் இல்லறத்தையாயினும் துறவறத்தையாயினும் தாங்கி இலைமறைகாய்போல இருப்பனென்று அறிஞர் சொல்லுவர்.

அன்றியும் வல்லவனென்று இருப்பினும் இருப்பன்; வல்லவனல்லாதவனாயிருப்பினும் இருப்பன்; யாவரும் இகழும்படி அற்பனா யிருப்பினும் இருப்பன்; புண்ணியத்தையுடைய நல்லவனா யிருப்பினும் இருப்பன். அறியவேண்டியவற்றை அறிந்த ஞானியாலன்றிக் கருமியால் வலியபிறவி நீங்காது. அது எதுபோலவென்றால், சூரியோதயத்தினா லல்லாமல் இருள் நீங்காததுபோலாம். இந்தமருளசங்கரரது உண்மை நிலையை நீயும் காணக்கடவையென்று சொல்ல, சித்தராமர் அல்லமரை வணங்கி, ஐயனே! இந்த மருளசங்கரர் பித்தர் போலிருப்பதற்குக் காரணம் யாதென்று வினவுதலும், அல்லமதேவர் சொல்லத்தொடங்கினார். யாதாயினும் ஓர் தொழிலைச்செய்து பொருளீட்டி அதனால் உயிர் வாழ்வோமென்றால், அதில் அநேகதுன்பங்கள் விளையுமென்றெண்ணி அதனை யொழித்து, பரிசுத்தராகிய சரமூர்த்திகளாகிய சரீதுக்கள் உண்ட மிச்சிலையுண்போமாயின் அதனால் பழியொன்றுமில்லை, நமது பிறவியும் ஒழிந்துபோம் என்று அறிந்து, இந்த மருளசங்கரர் பிரசாதக்குழியை நீங்காமல் இருக்கிறார். பிறவித்தளை நீங்கின சிவபக்தருடைய திருவடியை விளக்குகின்ற நீர்க்குழியில் வந்து பிறந்து முழுகி அதில் வாழ்கின்ற புழுவின் பெரும்பேற்றைக் கங்கைமுதலாகிய புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கித் தமது தீவினைகளை யொழித்துக் கொள்ளுகின்ற அந்தணரும் அடைய மாட்டார்கள் என்று வேதங்கள் சொல்லா நிற்கும். தாய்க்கும் மாதருக்கும் தந்தைக்கும் பசுவிற்கும் குழந்தைகளுக்கும் வேதியருக்கும் துன்பஞ்செய்த கொடிய பாவங்களையும் இமைப்பொழுதில் ஒழிக்கும்;

அந்தக்கரணத்தைச் சுத்திசெய்து சிவசொரூபமாக்கி விடும். ஆதலால், சிவப்பிரசாதத்திற்கு நிகரான பொருள் வேறொன்றுளதோ? பசிக்கு மருந்துமாகி முத்தியைத் தரும் பெருமை வாய்ந்து பிறவியை யொழிக்கின்ற சிவப்பிரசாதத்தின் பயனை யறிந்து இவ் விடத்தில் வசிக்குந் தன்மை இந்த மருளசங்கரர்க்கே யன்றிப் பசிக்குச் சோறுண்ணும் மனிதர்க்கு உண்டா குமோ என்று சொல்லியருளினார். அதுகேட்ட சித்த ராமர், ஐயனே! மருளசங்கரரே தேவரீரை அறிவார், தேவரீரே அவரை யறிவீர்; இவ்வுலகில் வேறு யாவர் அறியவல்லார்? பாம்பின்காலைப் பாம்பேயறியும் என்று சொல்லி, அல்லமதேவரது திருவடியில் வீழ்ந்துவணங் கினார். அப்போது வசவண்ணர் வந்து அல்லமதே வரை வணங்கி, ஐயனே! பொற்புதையலின் மீதிருந்தும் துன்பப்படுவான்போல மருளசங்கரரை நான் அறியா திருந்தழிந்தேன். தேவரீர் இங்கே எழுந்தருளி அவ ரதுபெருமையை எனக்கு அறிவித்தீர் என்றுபுகழ்ந்து நிற்க, அல்லமதேவர் அந்த வசவண்ணரை நோக்கி, நீ பரசிவபக்தியில் சிறந்தவன்; மருள சங்கரர்போல் அளவற்றவர்கள் உன்வீட்டு வாசலில் இரவும் பகலும் நீங்காமல் காத்துக்கொண் டிருப்பாராயின், அவ்வாயில் புண்ணியவான்கள் தாம் செய்த தவப்பயனால் போய்த் தங்குகின்ற கைலாய மலையே யன்றோ? வெப்பமுளதன் கண் உண்டாயினும் அது வெவ்விய தீயின் குண மென்று சொல்லப்படுவதுபோல மூன்றுலகத்தும் எவ் விடத்தாயினும் சிவபக்தி யுண்டாயின் அது உனதே யென்று இவ்வுலகத்தார் சொல்லா நிற்பர். ஆதலால் உன்பெருமையை யார் அறிவார்? பக்திக்கடலே! குண க்குன்றே! பாசப்பகையே! எம்முறவே! முத்திக்கரசே! சிவானந்த முதலே! ஞானமணி விளக்கே! சித்திப் பொருளே! அருள்நந்திதேவே! உன்னைத் தொழும் அடியார்புத்திக்கு அமுதே! உன்னைப்போல்வார் வேறு

யாருளர் என்று சொல்ல, வசவண்ணர் அல்லமரை நோக்கி, தேவரீர் அடியேனுக்குப் போதித்தருளிய நன்மைகளெல்லாம் உன்னைக் காணுது கழிந்த நாட்களில் இல்லை; உமது செந்தாமரை மலர்போன்ற திருவடியை வணங்கப்பெற்ற இன்று தொடங்கி யுளவாமென்று சொல்லி வணங்கி எழுதலும், அவ்விடத்து நின்ற சிவசரணரெல்லாரும் மனமகிழ்ந்தார்கள். உலகத்தாரது அறிவை பந்தப்படுத்தின மலவிருளைத் தமது வாக்கினுலும் திருவுளக் கருத்தினுலும் அருளைக்கத்தாலும் முழுதும் ஒழிக்கும்பொருட்டு உதயஞ்செய்த ஞானசூரியனுகிய அல்லமதேவர், தேவர்களாலும் அறியப்படாத பொருளாகிய பேரின்ப அநுபூதி விளக்கத்தைத் தமது பெருங்கருணையால் மருளசங்கர தேவருக்கு அருள்செய்தார்.

மருளசங்கர தேவர்கதி முற்றிற்று.

---

## பதினுருவது
# இஷ்டலிங்ககதி.



அல்லமதேவரானவர் அருள் சுரந்து அன்போடு வசவண்ணர் ஞானத்தை யடையும்படி இஷ்டலிங்கத்தினியல்பைச் சொல்லியருளின சரித்திரத்தை நம்முடைய வல்வினைகளெல்லாம் அற்றெழியும்படி சொல்லுவோம்.

மருள சங்கர தேவர்க்கு ஒப்பற்ற பேரின்ப வீட்டை அநுக்கிரகித்த அல்லமதேவர் வசவண்ணரது திருமாளிகையில்போய் அநேக சிவபக்தர்களைக் கண்டார். அப்போது வசவண்ணர் இவரைக் கண்டமாத்திரத்தில் ஒருதிவ்வியமான ஆசநம் சமர்ப்பிக்க அதின் மீது வீற்றிருந்தார். இருத்தலும் வசவண்ணர் இவ

ரதி திருவடியை வணங்கி, நறுமலர்களா லருச்சித்துத் துதித்து நின்று, அடியேன் சிவபத்தியை யறிந்து கொண்ட தன்மையானது ஊமன் கண்ட கனாப்போ லும்; இந்தச் சிவபத்தி மேன்மேலும் விருத்தியாகும் படி அடியேனுக்குக் கிருபைசெய்ய வேண்டுமென்றார். அப்போது அல்லமதேவர் வசவண்ணரை நோக்கி, நீ சிவபக்தர் கூட்டத்தோடு அமர்ந்திருக்கிறாய்; உனக்குச் சிவபக்திமார்க்கத்தை ஒருவர்காட்டவும் வேண்டுமோ? சூரியனுக்கு இருளை யொழிக்கும்படியான சத்தியை ஒருவர் தரவும்வேண்டுமோ என்றார். அதுகேட்ட வச வண்ணர்அல்லமதேவரைநோக்கி,சுவாமீ! தேவரீர் அடி யேனை யிகழ்ந்து என்மனச் செருக்கை யழிக்காமல் புகழ்ந்தீர்; இப்படி புகழ்ந்தது புளிங்கறியிட்டு வியா தியை அதிகரிக்கச் செய்வதுபோ லிருக்கின்றது என்று சொல்லித் திருவடியில் வீழ்ந்து வணங்கி, உன் திருவடியை அர்ச்சிக்கும்படி எனக்கு நற்புத்தி யருள் செய்யவேண்டும் என்று பிரார்த்தித்தலும், அல்லமதே வர் சொல்லுவாராயினர். புல், மரம், நெளிகின்ற புழு, பறவை, மிருகம்,முதலிய பல பிறவிகளினின்றும் தப்பி மானுடராய்ப் பிறத்தல் புண்ணியான்மாக்களுக்கே யன்றி மற்றையர்க்கு அருமையாகும். அவ்வாறு மானு டராய்ப் பிறந்தாலும், நல்லறஞ் செய்யுஞ் சந்ததியிற் பிறத்தலருமை; அறஞ்செய்யுஞ் சந்ததிவாய்ப்பினும் அறத்தை வளர்த்தற்குரிய சரீரத்தைப் பெறுதலருமை யாகும். அதுபெற்றாலும் அன்போடு அறஞ்செய்த லருமையாகும். செய்தாலும் புறச்சமயங்களை விட்டு ஆகம நெறிச்சமயங்களை யநுசரித்த லருமையாகும். ஆகமநெறியை யடைந்தாலும் நன்மையாகிய சைவ சமய நெறியை யடைவது அருமையாகும். அடைந்தா லும் ஏகலிங்க ஐக்கியமுறுதல் அருமையாகும். புண் ணிய விசேடத்தால் இஷ்டலிங்கத்தை உள்ளங்கையி லமைத்து எப்பொழுதும் அன்போடு பூசிப்பவன்பக்த

னென்று சொல்லப்படுவான். கரியகாகத்தின் இருவிழி பினும் ஒருமணியேயிருந்து விளங்குவதுபோல இஷ்ட லிங்கமானது அகத்திலும் புறத்திலும் நீங்காது விளங் கிக்கொண் டிருக்கும். இஷ்டலிங்கமாகிய மேலான பொருளிலே இடையறாது விழித்துக்கொண் டிருப்ப வன் இந்தப் பிரபஞ்சமாயையை வென்றவனென்று வேதங்கள் சொல்லா நிற்கும். ஒன்றோடொன்று பொ ருந்த மூன்று உபாதிகளையும் வஸ்திர மடிப்பாகச் செய்து அதன்மீது இஷ்டலிங்கத்தை யமைப்பானாயின் அவன் அப்பொழுதே சிவரூபமாய் விடுவான். அரு ளென்கிற நீரினால் அபிஷேகஞ் செய்து உபசாந்தமா கிய சந்தநத்தோடு பொருந்த பஞ்சேந்திரியங்களாகிய நறுமலர்களைக் கொண்டருச்சித்து அறிவாகிய நிவேத நம் சமர்ப்பித்தால் அவன் பரமசிவனுக்குச் சிறந்த பக்தனாவான். குற்றமற்ற மனத்திலுண்டாகிற அன் பையன்றி வேறுபூசைகள் செய்யவிரும்புதலால் என்ன பயன்? மநோசாஞ்சல்ய முடையவன் அபிஷேகஞ் செய்யும் நீரானது சிவபெருமானது சடையிலுள்ள கங்கை நீரினும் சிறந்ததோ? எப்போதும் பூவோடு கூடிய கையினையும் பரமசிவனது புகழைச் சொல்லு கிற நாவையும் படைத்தவனே அந்தப் பரமசிவனே யென்று தேவர்கள் தோத்திரம் பண்ணுவார்கள். திரி புராந்தகனாகிய பரமசிவனைப் பூசைசெய்யாத கையினை யும் அவன் புகழைப் பேசாத நாவினையும் படைத்தவ னாகிய நீசனைப்பார்க்கிலும் காட்டிற் சஞ்சரிக்கிற குர ங்கு சிறந்ததென்று சொல்லலாம். குடிப்பன, விழுங்கு வன, கடிப்பன, நக்குவன என்னும் நால்வகை யுண வையும் உள்ளங்கையி லமர்ந்திருக்கிற இஷ்டலிங்கத் துக்குச் சமர்ப்பித்து உண்பவன் மேலே வரக்கடவன வாகிய வினைகளெல்லா வற்றையும் ஒழித்தவனாவன். தனது உடல் பொருள், ஆவி என்கிற மூன்றினையும் குருலிங்க ஜங்கமங்களுக்குக் கொடுத்து யான் எனது

என்றும் அகங்கார மமகாரங்களை யொழித்திருப்ப வன் மேலான சிவமென்னும் பொருளோடு வேறுபட் டவனல்லன்,

குருலிங்க சங்கமங்கள்ஏற்கும்படி அவர்களுக்குத் தத்தஞ்செய்த உடல் பொருளாவிகளை மீட்டும் நம்மு டையனவென்று நினைப்பவனைப்பார்க்கிலும் உண்மை யில் தவறாமையால் வழிகட்டிப் பறிப்பவனாகிய வன வேடன் மிகவும் நல்லவனாவன். ஐம்புலன்களையும் வென்ற தவவலியுள்ள வசவண்ணரே! தொன்றுதொட் டுவரும் சனனங்களை விஷமாக நினைத்து அஞ்சுகின்ற கருத்துடையார்களுக்கு விடத்தருவன காமமும் கோபமும் மயக்கமும் ஆகிய இவைகளே. ஏற்கத்தக் கவை குருலிங்க சங்கமங்களே. உள்ளங்கையில் அமர் ந்திருக்கின்ற பரசிவலிங்கத்தைவிட்டு வேறே கொ டிய தேவதைகளை விரும்பி வழிபடுவோர் கங்காநதி யைவிட்டு உப்புக்கழியில் மூழ்குவோருக்குச் சமா னமாவார். சிவவேடம் தாங்கின பெரியோர்கள் தனது பொருளைக்கொள்ளையிட்டாலும், தன்னைநிந்தித் தாலும், பிள்ளையையறுத்தாலும் பல பிழைகளைச்செ ய்தாலும் அவர்களை யிகழாதவன் பரமசிவனுக்கு அன்பனாவன், அடியார்களுக்கு ஒரு சாதியை நிரூபிப் பவன் உள்ளங்கையில் அமர்ந்திருக்கின்ற பரமசிவனு க்கும் சாதி நிரூபணம் பண்ணினவனே யாவன். பரம சிவனையும் அடியாரையும் வேறென்றெண்ணுவோன் ரவுரவாதி நரகங்களில் மூழ்குவன், குருலிங்க சங்கம ங்கட்காகவே உலையிற்போடும் அரிசியானது தேவாமி ர்தத்துக்குச் சமமாகும். தமக்கென்று உலையிற்பெய் யும் அரிசியானது நஞ்சினுங்கொடியதாகும். பரமசிவ னையிருத்திவைக்கிற இருதயத்தை யுடையவர்கள் ஆசையையும் அவ்விதயத்தில் வைப்பார்களாயின் அந் தச்செய்கை ஒரு அந்தணன் வாசஞ்செய்கிற வீட்டில்

ஒரு நீசனையும் கொண்டுபோய் வைப்பதற்குச் சமான மாகும்.

காலமும் கருமமும் கடந்தமுதல்வனுகிய பரமசிவனிடத்துச் செலுத்தாமல் மாதர்களிடத்துத் தம் மனத்தைச்செலுத்துவோர் செய்யும் விரதம் முதலியன பயன்படா. கொலை களவு பொய் கோபம் ஆசை என்று சொல்லப்பட்ட இந்தத் தீக்குணங்களை யுடையவர்களுக்குக் கரதலாமலகம்போலப் பரமசிவன் உள்ளங்கையில் இஷ்டலிங்கமாயிருந்தாலும் அவர்களுக்குத் தூரமா யிருப்பவனேயாவன் என்று இவ்வாறு அல்லமதேவர் வசவண்ணருக்கு அனுக்கிரகித்துவந்தவைகளைக்கேட்ட வசவண்ணரும் அல்லமதேவரைப் புகழ்ந்து பாடிப்பணிந்து, ஆனந்தக் கூத்தாடிச் சந்தோஷசாகரத்தில் முழ்கினர். இவ்வாருக உபதேசஞ்செய்து அளவிறந்த பெரியோர் கூட்டத்தோடும் இருந்து வசவண்ணர் மகிழும்படி அல்லமதேவர் எல்லா வளங்களும் நிறைந்த கல்யாணபுரியில் எழுந்தருளியிருந்தார்.

இஷ்டலிங்ககதி முற்றிற்று.

---

## பதினேழாவது

# கதலிவனகதி.

மலைகளிலும் புண்ணிய வனங்களிலும் புண்ணிய நதிதீரங்களிலும் மாதேவியென்பவள் அருளையுடைய ஞானசிரியனைக் காணும்பொருட்டுத் தேடித்திரிந்து இறுதியில் கல்யாணபுரியில் வந்து தரிசித்து மீண்ட சரித்திரத்தை யினிச் சொல்லுவோம். எப்படியென்றால், மாதேவியென்பவள் காடு மலை நதி முதலிய விடங்களிலும் பிறவிப்பிணிக்கு மருந்தாகிய ஞானசிரியனைத்தேடிக் காணுதவளாய், அம்மருந்தானது கல்யாணபுரியில் இருப்பதாகக் கேள்விப்பட்டு அந்நகரத்தை

பூண்டு, பரமசிவனிடத்தில் மிக்க அன்புடையவளாகிய இவள் அவர்போலத் திகம்பரையாய் அந்தக் கல்யாணபுரியின் வீதியில் பிரவேசித்தாள். அவ்விடத்திலுள்ள பலரும் இவளைக்கண்டு, இவள் உலகியலையறியாதவளாய், மாதர்க்குரிய நற்குணங்களுள் சிறந்து முந்திவிளங்குகிற நாணத்தை விடுத்து இவ்வாறு திரிகிறாள். இவள் பித்துடையவள், உலகத்திலுள்ளோர்களை மூடரென்று எண்ணினளோ, இப்படி ஆடையில்லாமல் திரிகின்றாளே என்று பலவாறு பேசிக்கொண்டிருக்க, உலகத்தார்களுக்கு நாணுமலும் ஆடையில்லாமலும் வசவண்ணரது மடத்தில் வந்து சேர்ந்தாள். அந்த மடத்தில் வசவண்ணரோடு பல அடியார்களும் நெருங்கிச் சூழ்ந்திருக்க உயர்ந்து சிறந்த ஆசனத்தின் மீது எழுந்தருளியிருந்த அல்லமதேவரைக் கண்டு, அவர்க்கருகே சென்றனள். அங்குள்ளாரெல்லாரும் இவளது திகம்பர ரூபத்தைப் பார்த்துத் தாம் என்றுமடையாத பெரிதாகிய ஆச்சரியத்தை யடைந்தார்கள். அப்பொழுது மாதேவியானவள் நெருப்பிலிட்ட அரக்குப்போல மனம் நெகிழ்ந்து, மிகவும் வாய்ச்சொற்கள் தடுமாறவும்வாள்போலும் கண்களில் நீர் சிந்தவும் நின்று அல்லமதேவரைக் கைகூப்பி வணங்கி, சுவாமீ! பிறவிப்பிணிக்கு அஞ்சினேன், இனித் தேவரீர் அருள்செயல்வேண்டும் என்று சொல்லி அழுதாள். மோக்ஷவிருப்பமுள்ளவர்கள் ஆணாயிருந்தாலும் பெண்ணாயிருந்தாலும் சரியே; இவள் உமாதேவியின் அம்சமே; இவள்போல அதிதீவிர பக்குவமடைந்தவர்கள் ஒருவருமில்லை. இவள் ஞானோபதேசம் பெறுதற்கு உரியவளேயாவள் என்று அல்லமதேவர் தம் திருவுளத்தில் நினைத்தருளினர். இன்றுகாமனை வென்றவளிவளே, அன்று காமனை வென்றவன் அப்பரமசிவனே. இவள்போலத் தேகாபிமானம் முழுதும் விட்டவர்க்கேயன்றி இளமைசெல்வ முதலியவற்றை விரும்பிப் பொய்யாகிய

உலகவாழ்க்கையில் விருப்பம்வைத்த அற்ப மனிதர்க்கு அவர்கள்செய்த இருவினைகள் அவர்களைவிட்டு நீங்குமோ என்று அங்குள்ளார் சிலர் பேசிக்கொண்டார்கள். அப்போது அல்லமதேவர் இந்த மாதேவி போலப் பக்குவப்பட்ட சிஷர்கள் கிடைப்பது அரிதென்றெண்ணி, இவளுக்கு ஞானோபதேசஞ்செய்யத் திருவுளம்பற்றி, இவளைநோக்கி, நீ பூதங்களல்லை, பொறிகளல்லை, புத்தியல்லை; இவைகளெல்லாவற்றையும் நீயென்று மயங்குவதற்கேதுவாகிய அற்பவுணர்வையொழித்துச் சோதிசொரூபமாய் விளங்குகிற பிரமமே நீயாவாய் என்று சொல்லி, மேலும் ஞாதுரு ஞானம் ஞேயம் என்னும் இவை இருக்குமாயின் அந்த நிலை முத்திநிலையன்று, அது ஜகமாகும் என்று, இது அது என்கிற சுட்டற்ற நிலையை மாதேவிக்கு அநுக்கிரகித்தார். அப்போது மாதேவியானவள் தேற்றாங்கொட்டையால் தெளிவிக்கப்பட்ட நீர்போல என்மனம் தெளியும்படி செய்தருளின ஞானாசிரியனே! எனது உடல் பொருளாவிகளேயன்றித் தேவரீருக்குக் கைம்மாறாகச் சமர்ப்பிக்க வேறு பொருளுடையேனல்லேன் என்று ஆனந்தக்கண்ணீர் ஒழுக அல்லமதேவரது திருவடியைத் தொழுது நின்றாள். அல்லமதேவரும் அவளைநோக்கி, தாயே! நீ கதலிவனத்தை யடைந்து என்னையடைந்தாய்; நீ கேட்ட இந்த அர்த்த விசேஷங்களையெல்லாம் உறுதியாகமனத்திற்கொண்டு நிதித்தியாசனத்தில் அமர்ந்திருக்கக் கடவை என்று அவளையனுப்பிவிட்டார். அந்த மாதேவியும் அவ்வாறே அவரைத்திருவடிதொழுது விடைகொண்டு, ஸ்ரீசைலத்தை யடைந்தாள். வசவண்ணரிடத்து அல்லமதேவர் எழுந்தருளி விளங்குவதுபோல அந்த ஸ்ரீசைலத்தில் ஒரு கதலிவனம் விளங்கும். அந்தக் கதலிவனத்தை மாதேவியானவள்கண்டு, முனிவர் தேவர் முதலிய எல்லாரும் புகழும்படி அக்கதலிவனத்திலுள்ள செவந்த கனிகளை விரும்பி ஒரு புறத்தே வாழ்ந்திருந்தாள்.

கதலிவனகதி முற்றிற்று.

---

# பதினெட்டாவது
# சாதகாங்கத்தி.

எமது பிறவித் துன்பத்தை யொழித்து எமக்குத்தாய்போல அருள் செய்பவராகிய அல்லமதேவர் வசவண்ணருக்கு மனவடக்க முண்டாம்படி யுபதேசித்த சரித்திரத்தைச் சொல்லுவோம். கதலிவனத்தில் மாதேவி செல்லும்படி திருவருள்செய்து அவ்விடத்தில் தங்கியிருந்த ஞானதீபமாகிய அல்லமதேவரை வசவண்ணர் வணங்கிச் சொல்லுகின்றார். பித்தராது தர்க்க வாதங்கள் அற்றொழியும்படி சிறந்த முக்தி சாதனமொன்றை அடியேனுக்கு உபதேசித்தருளவேண்டுமென்று திருவடிதொழுது நிற்க, அவருக்கு அல்லமதேவர் சொல்லுவாராயினர். பரமமுத்திப் பதம் பெறுதற்குஹேதுயாதெனின், அந்தக்கரண சுத்தியாம். அதற்குக் காரணம் திரிபுராந்தகனுகிய பரமசிவனது பூசையேயாம். இவ்வாறு வேதங்கள்சொல்லாநின்றன. மனத்தைப் பரமசிவன் திருவடியில் அழுந்தும்படி நிறுத்திய வசவண்ணரே! மனம் இஷ்டலிங்கத்தில் பொருந்தாவிடில் தேகத்தில் இஷ்டலிங்கந் தரித்தும் பயனில்லையென்று சிவாகமங்கள் சொல்லாநிற்கும். மேலும் உலகத்தில் அபிஷேகஞ்செய்யும் புனலும், அருச்சிக்கின்ற அழகிய பூவுங்கொண்டு தினந்தோறும் விதிவழுவாமற் செய்கின்ற பூசையானது, பரிசுத்த மனத்தோடு சேராது நீங்குமானல், அது உயிர் நீங்கிய பிணத்துக்கு ஒப்பாகும். அறிவில்லாதவன் பரமசிவனைப் பகிர்முகமாகத் தரிசிப்பன்; தன்னைத்தானறிந்த ஞானியானவன் அந்தர் முகமாகத் தரிசிப்பன். அது எது போலுமெனின், யானை கரும்பையே தின்னும், ஆடு பலவகையான இலைகளைத்தின்னும், அதுபோலாம் என்று அறிஞர் சொல்லுவர். கைகள் சிவபூசை முத

லிய புண்ணிய கருமங்களைச் செய்துகொண் டிருக்கும் போதும் மனமானது செல்லத்தகாத விஷயங்களில் சென்று உழலா நிற்கும் ஆதலால் மனத்தைப்போல வேறொரு பகையுமில்லை. உறங்கும்போது சுகமாயிரு க்கின்றதென்று சொல்லுதல் ஐம்பொறிகளின் வழி யேசென்று உழலாநின்ற மனம் இல்லாமையாலன்றோ. ஆதலால் மனம் விஷயங்களில் வியாபித்துத் திரிகின்ற சாக்கிராவஸ்தையில் சுகமென்பது சிறிதுமில்லை. மன மானது ஒருவன் வசப்படுமானால் அவன் இனிவரும் பிறவிகளை யடையமாட்டான். வசப்படாமல் விஷயங் களில் ஓடுமானால் பல பிறவிகளில் சென்றுழன்று வருந்துவான். தரும மார்க்கத்துக்கும், அதிகபொருளை யும் இன்பத்தையும் பெறுவதற்கும், பெருங்கல்வி கற் றுச் சமர்த்தனாவதற்கும், வீரத்தன்மைக்கும், துறவ டைதற்கும் ஒருவனுக்குத் துணையாயிருப்பது மனமே யாகும். நற்கருமங்களைச் செய்து மனிதரை உயர்த்த வும் தீக்கருமங்களைச் செய்து நரகத்தில் மூழ்குவிக்க வும் வல்லது இந்த மனமேயன்றி வேறொன்று மில்லை யென்று வேதங்கள் சொல்லா நிற்கும்.

ஒருவனது மனமானது உமா நாயகனாகிய பரம சிவனை யுடையுமானால், பெரும்பாதகங்கள் அநேகமாக அவனால் செய்யப்பட்டாலும் அந்தப் பாதகங்களெல் லாம் நெருப்பிற்பட்ட பஞ்சுபோல அழியுமாதலால் அவன் அஞ்சவேண்டுவ தில்லை. மனத்தூய்மையால் மனிதர் மேன்மை யடையாராயின் அவர்கள் மிருகங்க ளுக்குச் சமானமாவார்கள். ஒருவனைக் கெடுக்க வல்ல தும், கெட்டவனை யெடுக்கவல்லதும் இந்தமனமேயாம் என்று அறிந்து அதனை அடக்கவல்லவன் பிறவிக் கடலைக்கடக்க வல்லவனாவன். ஆராயுமிடத்து மனத் தை விஷயங்களிற் செல்லாது தடுத்தலே பெரியோர் செய்கையாகும். நீரானது நின்றால் துரும்பும் தடை பட்டு நிற்கும்; அதுபோல வாயுவானது நின்றால் மன

முன் தடைபட்டு நிற்கும். விரைந்தோடுகின்ற குதிரையை நிறுத்தக் கருதினால் அதன் வாயைப்பூட்டி யிருக்கிற கடிவாளத்தை யிழுத்துப் பிடிப்பார்கள். அது போல விஷயங்களில் மேல்விரைந்து ஓடுகின்ற மனத்தைத் தடைப்படுத்தக் கருதினால் ஓடா நின்ற வாயுவையுள்ளே யிழுப்பார்கள். மூன்று நாடிகளினுள்ளும் வாயுவை விடுத்து வாங்கியும், அசைவற நிறுத்தியும், அது போனபடி போகவொட்டாமல் தடுத்தும் ஒருவன் தன்வசப் படுத்திக்கொண்டால் அவனுக்கு மனமும் வசப்பட்டு நிற்கும். ஓட்டையும் பொன்னையும், உறவையும் பகையையும், வறுமையையும் செல்வத்தையும், கீர்த்தியையும் அபகீர்த்தியையும், வீட்டையும் காட்டையும் சமானமாக நோக்குகின்ற மனமே நல்ல மனமெனப்படும். நிலைபெற்ற காம வெகுளி மயக்கங்களோடு கூடி அலைகாற்றின் முன் வைக்கப்பட்ட தீபத்தைப்போல அலைந்துகொண் டிருக்கின்ற மனமே தீ மனமெனப்படும். அதனை யொருவராலும் தடுக்க முடியாது. மனமும் பிராணவாயுவும் அடங்கி விடுமாயின், அப்படி யடங்கப் பெற்றவன் சிவமயமாவன். இதனையறிந்து மனத்தையும் பிராணவாயுவையும் அடக்கினவன் என்றுமழியாத இலிங்கப் பிராணியென்று சொல்லப்படுவன். தனக்குத்தானே சமானமான சைவப்பயிரை வளர்க்கும் இயல்பையுடைய மேகம்போன்ற வசவண்ணர்க்கு இந்தப் பிரகாரமாக ஞானசாதனங்களாகிய பலவற்றையும் அல்லமதேவர் அருளிச்செய்தார். அப்பொழுது வசவண்ணர் அல்லமதேவரை நோக்கி, தேவரீரைத் தரிசிக்கவும் வணங்கவும் வாழ்த்தவும் தேவரீரது திருவாய் மொழியைக் கேட்கவும் நானென்ன மாதவஞ் செய்தேனோ என்று சொல்லித் திருவடியில் வீழ்ந்து வணங்கினார். சித்தராமரும் சென்னவசவரும் அருளையுடைய மாச்சிதேவர் முதலிய பக்தர்களும் அல்லமதேவரது திருவடிகளை வாழ்த்தி

னார்கள். அப்பொழுது அல்லமதேவர் இவ்வுலக முழு தும் சென்று அங்கங்குள்ள பெருந் தவத்தினர்க்குப் பேரின்பத்தை யான் தரக்கடவே னென்று திருவுளம் பற்றினார்.

சாதகாங்ககதி முற்றிற்று.

---

## பத்தொன்பதாவது
# கோரக்கர்கதி.

வசவண்ணர் முதலிய அன்பர்களை நீங்கி ஸ்ரீசைலத்தையடைந்து கோரக்கர் என்னும் பெயரையுடைய சித்தருக்கு உண்மைநிலையை அல்லமதேவர் உபதேசித்தருளின சரித்திரத்தைச் சொல்லுவோம்.

மனமானது பொறிவழியிற் செல்லாமல் பரிசுத்தமாகும்பொருட்டு நான் சொல்லிய நெறியினின்றும் தவறாதிருங்கள்; துறவினராகிய மஹான்க ளிருக்குமிடங்களிற்போய் அவர்களைக்கண்டுவருகிறேனென்று சொல்லி அல்லமதேவர் மறைந்துபோனார். கன்றின் வாயிலுள்ள முலையை நெகிழ்த்துக்கொண்டு நீங்கிப்போன சுறவைப் பசுப்போல அல்லமதேவர் மறைதலும், வசவண்ணர் முதலிய அடியார்களெல்லாம் நெருப்பிலிட்ட வெண்ணெய்போல மனமுருகிக் கண்ணீர் சோர நின்று துக்கித்தார்கள். அன்றியும், நல்லாரைக் காணாதிருத்தல் வேண்டும், கண்டாலும் அவர்களோடு நட்புச் செய்யா திருத்தல்வேண்டும். நட்புச் செய்தால் பின் அவர்களை விட்டுப் பிரியாதிருத்தல்வேண்டும். பிரிந்தால் உயிர்விடல்வேண்டுமென்றிவ்வாறுசொல்லி, உணவு கொண்டுவந்து கொடுக்கிற தாய் நீங்கின பறவைக் குஞ்சுகள்போல மனம் வருந்தினார்கள். பிறகு வசவண்ணர் மனந்தெளிந்து, தமது கையிலுள்ள இஷ்டலிங்கத்தைக் கண்டு மகிழ்ச்சி யுடையவராய், அதனி

டத்தில் பத்தி செய்துகொண்டிருந்தார். சித்தராமர் சொன்னலாபுரத்திற்கு அல்லமதேவரோடுபோய் முன்னே தானின்ற கொடுவழிகளை விட்டுத் தன்னிலையில் நின்றார். மற்ற அடியார்களும் அல்லமதேவர் அருளிச் செய்த மெய்ம்மொழிகளை மனத்திற்கொண்டு தத்தம் இடங்களிற்போய் வாழ்ந்திருந்தார்கள். முற்காலத்திற் செய்த நல்வினையால் தம்மைத் தரிசிக்கப் பெரிதாகிட விருப்பத்தோடிருக்கிற அடியார்களிடத்திற்குப் போவேனென்று புறப்பட்ட அல்லமதேவரது செய்கையை யினிச் சொல்லாநின்றோம். இளமரச்சோலையில் தென்றற்காற்று வீசினாற்போல, அடியார்கள் மனமும் கண்களும் கண்டு களிக்கும்படியான ஒரு திருவுருக்கொண்டு ஸ்ரீ சைலத்தைக் கண்டு சென்றார். அந்த ஸ்ரீ சைலத்தின் பெருமையும் வளமும் தேவர் முனிவர் முதலியோரால் சொல்ல வொண்ணாதென்றால் யானோ சொல்லவல்லேன்! அதுநிற்க, அப்படிப்பட்ட ஸ்ரீ சைலத்திற் சென்று, அவ்விடத்தில் காயசித்தி பெற்றுச் செருக்கடைந்திருக்கிற கோரக்கர் வாழ்கின்ற இடத்த யடைந்தார். இவர் வருகையைக் கண்ட கோரக்கர் இவரது திருவடியில் வீழ்ந்து வணங்காமல், இவர் நம்போன்ற ஒரு சித்தரென்று நினைத்து, நின்றபடியே அஞ்சலிசெய்து, ஓர் ஆசநம் தந்து சொல்லுவாராயினர். தேவரீர் இன்று இங்கே யெழுந்தருளினது என் தவப்பயனேயன்றி வேறொன்றாலு மன்று. பாலகருடைய குணத்தைப்பொருந்தி மெய்ந்நிலையையுடைய அடியாரினத்தைச் சார்ந்திடாதவன் பரமசிவனையுஞ் சாரமாட்டான். முதலில்லாதவர்க்கு ஊதிய மெப்படி கிடைக்கும். ஒருவிருந்தினன் வந்தால் அவனுக்குச் சொல்லு முகமன்போலச் சில இனிய சொற்களைச் சொல்லி, நீர் யாரென்று வினவினர். அதுகேட்ட அல்லமர் கோரக்கரை நோக்கி, தன்னைத்தானறிந்த ஞானியானவன் என்னையு மறிவான் என்றார். அப்போது

கோரக்கர் அல்லமதேவரை நோக்கி, சுவாமீ! ஆதி நாதனது அருளினாலும் குளிகை முதலியவற்றாலும் காயசித்தி பெற்றவன் எக்காலத்தும் இறக்கமாட்டான். அது பெறாதவன் இறப்பான் என்று சொல்ல, அல்லமர், உடம்புவாழ்தலைத் தான் வாழ்தலாகவும், உடம்பு இறத்தலைத் தானிறப்பதாகவும் சொல்லினை. உயிரே உடம்பென்று நினைத்தாய்போலும். உடம்பு தன்னினும் வேறென்றறியாத லோகாயதனை நிகர்த்திருக்கிறாய். உடம்பே தானென்றால் எனது உடம்பு என்று சொல்லுவதென்னை யென்று அல்லமர் கேட்க, நான் நினைத்தேன் ஓடினேனென்று சொல்லுதலால் நானெனப்படுகிற பொருள் யாது? அதனை யெனக்குத் தெரிவிக்க வேண்டுமென்று கோரக்கர் கேட்க, அல்லமதேவர், நான் நினைத்தேனென்பது அந்தக்கரணத்தைப் பொருந்தும். ஆதலால் உடம்பு, பொறி, கரணங்கள் ஆகிய எல்லாம் நானென்று விவகரிக்கும்படி நேரிடும். நேரிட, தானென்பது பலவாகத் தோன்றும். அதனால் நீ சொன்னதெல்லாம் கற்பனையாகுமென்று சொல்ல, கோரக்கர், ஐயனே! தேவரீர் சொன்னது சரியே, என்னுயிர் நீங்கும் என்று சொல்லும்போது, அவ்வுயிரொழிய வேறோருயிருமுண்டோ? கிருபை செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொள்ள, மருந்துண்டு நோயைத் தீர்த்துக்கொள்வோர்போல சிவத்தை யடைந்து இவ்வுடம்பை விடுதற்குப் பெரியவர் எண்ணங்கொள்ள, மருந்துண்டு நோயோடு கூடியிருக்க வேண்டுமென் றெண்ணங் கொள்வார்போல இந்த வுடம்போடிருக்க எண்ணினை, இது என்ன பேதைமை! பிறந்த சரீரங்களுள்ளே ஒன்றாயினும் இறவாதிருப்பதுண்டோ? ஆகாயத்தி லெறிந்த கல் கீழே விழாதிருக்குமோ? மருந்தினால் உடம்பு நித்தியமா யிருக்குமென்று நீ சொன்னது வாழ்நாளின் பன்மையாலே யன்றி வேறன்று. உடம்பு என்றும்

யழியாதென்று நீ சொல்லுவது பொருந்ாது. இனி நீ வீட்டினையடைய விரும்புவாயாகவென்று அல்லம தேவர் அருளிச்செய்யக்கேட்ட கோரக்கர், நீர் யாது சொல்லினும் என் உடம்பு அழியாது. இதனைப் பிரத்தி யக்ஷமாய்க் காட்டுவேன் பாருமென்று ஒரு கூர்மை யாகிய வாளாயுதத்தை அல்லமதேவர் கையிற் கொடு த்து, உமது தோள்வலியால் என்னை வெட்டும், என் னுடம்பில் ஒரு ஈச்சிறகளவாகிய தோலறுபட்டாலும் நான் சித்தனல்லேனென்று சொல்லிச் செருக்கி யெதி ரே நின்றனர். அல்லமரும் இவன் சொல்லியபடியே செய்து இவனது செருக்கை யழிப்பேனென்று அந்த வாளாயுதத்தைக் கைக்கொண்டு, மிகுந்த வலியோடு வெட்டினார். அந்த வாள் கோரக்கரது உடம்பிற் பட் டுக் கணீரென்று பெருஞ் சத்த மொன்றுண்டாயிற்று. அந்தச் சத்தத்தினால் ஸ்ரீசைலம் நடுங்கிற்று. அப் போது உமாதேவியானவள் முற்காலத்தில் கைலாய மலையை யசைத்த ராவணன் இப்போது இந்த மலை யையும் அசைக்கவந்தானோ வென்று அஞ்சியோடிப் பரமசிவனைக் கட்டித் தழுவிக்கொண்டாள். இந்தச் சத்தத்தினால் இன்னும் அநேக அற்புதங்கள் நிகழ்ந் தன. இது நிற்க, இப்படி ஒலியுண்டாகும்படி யெறிந் தும் உடம்பில் சிறிதும் காயப்படாதிருக்க, கோரக்கர் முன்னினும் மிக்க செருக்கடைந்து, என்னை நிகர்ப் பவர் ஒருவருமில்லையென்று அகங்கரித்திருப்பதைஅல் லமரறிந்து,ஒலியுண்டாகும்படிஉன்னுடம்புமிகுவலியை யடைந்திருக்கின்றது;உன்னைநிகர்ப்பவரொருவருமில்லை யென்று சொல்லி, வாளாயுதத்தைக் கோரக்கர்கை யிற் கொடுத்து, இதைக்கொண்டு என்னை வெட்டுவா யாகவென்றார். அப்படியே யெறிந்து, அது அல்லமர் திருவுருவின் மேற்படாதிருப்பதைக் கண்ட கோரக் கர் மிகவும் பயந்து, தன் செருக்கொழிந்து, அல்லம தேவரது திருவடியை வணங்கி, அடியேன் செய்த

பிழைக ளெல்லாவற்றையும் பொறுத்தருள வேண்டு மென்று பிரார்த்திக்க, அல்லமதேவர் கோரக்கரை நோக்கி, சித்தரே! நீர் இப்போதுசெய்த பிழை போகட்டும். இனி யிப்படிப்பட்ட பிழைசெய்யாமல் உடம்பின் மேலுள்ள பற்றையொழித்து உனது உண்மை நிலையை யறிந்து கொண்டால் நீ யெனக்கு இனியவனென்று சொல்ல, கோரக்கர் அல்லமரை நோக்கி, அடியேனுக்கு அறிவிக்க வேண்டிய பொருள்களெல்லாம் அறிவித்தருளல்வேண்டுமென, அல்லமர் அவரைநோக்கி, குகேசன் என்பதன்பொருளாகிய பரமசிவனேநான் என்று சொல்ல, கோரக்கர் அப்படியாயின் உமதுகையில் சிவலிங்கமிருப்பதற்குக் காரணம் யாதென்ன, உலகத்தார் என்னைப்பார்த்து இந்தச் சிவலிங்க பூசையை மறவாதிருத்தல் காரணமாமென்று சொல்லி, ஞானத்தைப் போதிக்கத் தகுந்த ஆசிரியன் சரீரமுள்ளளவும் சற்கருமங்களை விடலாகாது என்று தனது இலக்கணத்தைத் தெரிவித்து, என்னையறிந்து சோகம்பாவனை கொண்டு நிற்பையாயின் கருடத்தியாநத்தால் விஷம் நீங்குதல்போல அவித்தை நீங்கிவிடும் என்று அல்லமர் அருளிச்செய்யக் கேட்ட கோரக்கர் அவரருளிச்செய்தபடி தான் சரீரமென்னும் பிராந்தி நீங்கி, அநித்தியப்பொருள்க ளெல்லாவற்றையும் விட்டு, நித்தியப் பொருளைக் கண்டு, தான் அதனை யடைந்து, தான்அது என்னு மயக்கம் நீங்கித் தானேயாகி அவ்விடத்தில் நிலைபெற்று வாழ்ந்திருந்தார்.

கோரக்கர்கதி முற்றிற்று.

---

## இருபதாவது
## முனிவரர்கதி.

அல்லமதேவர் ஸ்ரீசைலத்தை நீங்கி முனிவரருக்கு வேதார்த்தத்தைத் தெரிவித்த செய்தியைச் சொல்லுகிறோம்.

அருந்தவத்தை முயன்று செய்த கோரக்க நாதருக்கு அறிவுருவாகிய மெய்ப்பொருளின் தன்மையை அன்போடு அருளிச்செய்த அல்லமதேவர் வடநாட்டிலுள்ள முனிவர்களுக்கு அருள்செய்யஎழுந்தருளினர். இவை நல்லனவெனவும் இவை தீயனவெனவும் பாராமலெரிக்கின்ற நெருப்புப்போல கருணைக் கடலாகிய அல்லமதேவர் இவர் நல்லவரென்றும் இவர் தீயவரென்றும் பாராமல் எல்லோர்க்கும் ஞானோபதேசஞ்செய்தருளினர். இவ்வாறு எல்லோருந் தனதருளுக்குரியவரே யென்று அநுக்கிரகஞ் செய்கிற அல்லமதேவர் அங்குள்ள ஒரு வனத்திற் போகும்போது, அவ்விடத்தில் இரக்கமென்பதனைக் கனவிலுமறியாத ஒரு வேடன் கொலைத்தொழிலுக் குரியதாகிய ஒரு வில்லைக் கைக்கொண்டு எதிரே வந்தான். அவனைக் கண்டமாத்திரத்தில், அன்புள்ளவனாய்த் தன் கண்ணைத் தோண்டி அப்பினவேடனாகிய கண்ணப்பனுக்கு அநுக்கிரகஞ் செய்தது ஒரு புகழன்று, அன்பில்லாத இந்த வேடனுக்கு அநுக்கிரகஞ் செய்வதே புகழென்று அல்லமதேவர் திருவுளமிரங்கி அவனுக்கு அநுக்கிரகஞ் செய்தார். அப்போது அந்தவேடன் தன் தீவினையாவு மொழிந்தவனாய் நின்று,பாவியாகிய நான் உய்யும் வண்ணம் கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தான். அவனைநோக்கி, நீ அறிவென்னும் வேலினால் ஐம்புலனென்னும் மான்கள் அருளென்னும் வலையினின்றும் தப்பிப்போகாமல் எறிவையாகில் உனக்குத் துன்பமென்பதே யில்லையென்று அல்லமர் சொல்லி, பின்னும், அறிவு வில்லாகவும் மனம் அம்பாகவும் கொண்டு என்னைக் குறியாய் வைத்து எய்வாயானால் உன்னை ஸ்ரீராமனைப்பார்க்கினும் மேலானவனென்று சொல்லுவார்கள் என்றிவ்வாறு வேடனுய்யும்வகை உண்மை நிலையினின்றுங் கலங்காதிருக்கும்படி யநுக்கிரகித்து அப்பாற் செலலும்போது, அவ்விடத்தில்

ஒருதபோவநங்காணப்பட்டது.அதில்ஒன்றற்கொன்று பரஸ்பர விரோதிகளான யானைகளும் சிங்கங்களும் விரோதமின்றிக் கூடிவாழ்தலால் அந்தத் தபோவ நத்தைப் பாம்பும் சந்திரனும்விரோதமின்றிக்கூடிவாழ் கின்ற பரமசிவனது சடைக் காட்டுக்கு நிகராகச் சொல்லலாம். அவ்வநத்தில் நடத்தற்குரிய கால்களைக் கைகளாகக் கொண்டனவாகிய சிங்கம் புலி முதலிய வும், மூச்சுவிடுதற்குரிய நாசியைக் கையாகப் பெற்ற யானைகளும் அங்கே யாகாதி சற்கருமங்களைச் செய்து கொண் டிருக்கிற முனிவர்களுக்குத் தொண்டுசெய்து கொண்டிருக்கும்.அவ்விடத்தில் பலவாகிய வேதங்களை யோதுவாரும், யாகாக்கினியை வளர்ப்பவரும், வேத விதிப்படி சிவபூசை செய்வாரும், வாயுவையடக்கி ஒரு தூண்போல அசைவற் றிருப்போருமாகிய அநேக ரைக்கண்டு, இவர்களுக் கெல்லாம் ஞானோபதேசஞ் செய்து இவர்களுடைய பிறவிப்பிணியை யொழிப்பே னென்று திருவுளங்கொண்டு, அவர்களை நோக்கி, நீங் கள் பலநோன்பு நோற்றும் விரதங்களை யநுஷ்டித்தும் சரீரமிளைத்தீர்கள்; இவற்றால் மாயையை வெல்லக் கரு துதல் சேற்றைச் சேற்றினாற் கழுவுதலை நிகர்க்கும். மலைபோலக்குவிந்த புல்லினுலெரித்துப் பிறவியை ஒழி த்தலொண்ணுது. ஞானக்கினியால் பிறவிக்காடு எரிக் கப்படும். மனோசாஞ்சல்யத்தை வறியர் கொள்வது போலச் சிறியவர்வேதத்திற்சொல்லப்படுகிற கருமங்க ளைக் கொள்வார்கள். ஞானிகள் தத்துவமசி வாக்கி யார்த்தமாகிய பெருஞ்செல்வத்தைக் கொள்வார்கள், எனறிவ்வாறு அல்லமதேவர் சொல்லக்கேட்டமுனிவ ரெல்லாரும் அவர் திருவடியில் வீழ்ந்துவணங்கி, தேவ ரீர் இவ்விடத்திற் கெழுந்தருளும் பொருட்டு நாங்கள் என்னதவஞ் செய்தோமோவென்று தோத்திரஞ் செய் தார்கள். அன்றியும் மாயையானவள் பிறந்த காலத்தில் யாவருடைய மனத்திலுந் தோன்றின போரமானது

முடியும்படி துர்வாச முனிவனாற் சொல்லப்பட்ட பரிசுத்தன் இவனே யாமென்று மகிழ்ந்து வாழ்த்தினார்கள். இங்ஙப்பிரகாரம் அல்லமதேவர் அந்தத் தபோவனத்திலுள்ள முனிவர்களுக்கு அநுக்கிரகித்து அங்கு வாழ்ந்திருந்தார்.

முனிவரர்கதி முற்றிற்று.

---

## இருபத்தொன்றாவது
# சூனியசிங்காதனகதி

அல்லமதேவரை யறிந்துகொள்வதற்கு ஒரு அறிகுறியாக எண்ணி, ஏழு நிலைகளையுடைய ஒரு சூனிய சிங்காதனத்தை வசவேசர் உண்டாக்கி அவ்விடத்தில் தங்கியிருந்த சரிதத்தை வகுத்துச் சொல்லுவோம்.

மனவொடுக்கம் முத்திமார்க்கத்துக்கு ஒருதுணையாகும்; பகிர்முகமாகச் செல்லுகின்ற மனம் நரக மார்க்கத்துக்குத் துணையாகுமென்று மனமடக்கும் வகையை அல்லமதேவர் அருளிச் செய்தபடியே மனத்தையொடுக்கும் வழியில் வசவண்ணர் பிரவேசித்தவராய், தம்வசத்தி லடங்காமலோடுகின்ற அம்மனத்தைப்பிராணவாயு நிரோதநத்தால் நிறுத்தி, சந்திர மண்டலத்தினின்றொழுகுகின்ற அமிர்தத்தை அதற்கு விருந்து செய்து நட்புக்கொண்டு, பொல்லாத விஷய வுணவு குறித்துச் செல்லாதபடி தம்வசப் படுத்திக்கொண்டு சித்திரப் பாவைபோ லிருந்தார். அசைவற்ற மனத்தோடிருந்த வசவண்ணர், நமது ஆத்மஸ்வரூபத்தை விளக்கும் பொருட்டு ஞானாசிரியராகிய அல்லமர் என்றைக்கு வருவாரோ? எந்த வடிவாய் வருவாரோவென்று அவரது வரவினை யெதிர்நோக்கினவராய், யான் ஒரு சிங்காதனமமைத்து அதன்மேல் வந்தமர்ந்திருப்பவரை அல்லமரென்று அறிந்துகொள்வே னெ

ன்று துணிந்து,மூலாதார முதலியவைகளைப் பலி நிறீத் தினையுடைய ஏழ் நிலைகளமைந்த சூனிய சிங்காதன மாகப் பிரமதேவனும் அதிசயிக்கும்படி, யமைத் து, காரண வுபாதிகளேழுக்கு மேற்சென்று தன்னைத் தான் தரிசித்துக் கொண்டிருக்கும் ஞானிபோலவும், நெற்றிக்கு மேற்சென்று தனது ஸ்வரூபத்தைக் கண் டனுபவிக்கும் யோகிபோலவும், பூர்ணஞானந்த போதகராகிய அல்லமரது இருப்பைக் காணும்பொ ருட்டு ஏழ் நிலைகளின்மேல் சூனிய சிங்காதன மொன் றை யமைத்தார். அதுகண்டு வியவாதா ரொருவரு மில்லை. அந்தச் சூனிய சிங்காதனம் அமைக்கப்பட்டு ள்ள அதிசயத்தைக் கேட்டுச் சிவனடியா ரெல்லாருஞ் சென்று, செம்பொன்னு லமைக்கப்பட்ட அந்தச் சிற ந்த ஆசனத்தை நோக்கி, வசவண்ணரது திருவடியை வணங்கி யிருந்தார்கள். இது கல்விக் கடலுக்குக் கரையாமென்று கற்றோர் பலரும் துதிக்கும்படி யமை க்கப்பட்ட சாரதா பீடம்போல இந்த ஞானபீடமான து மனோவாக்குகளுக் கெட்டாததாகும். இதில் ஏறு தற்குரியர் அல்லமதேவரன்றி வேறுயாருளர்? இதிலி ருக்க வல்லராயின் எனது மனத்திலும் அமர்ந்திருத் தற் குரியவரேயாவர் என்று மனத்திற்கொண்டு, கங் கையாற்றின் கரையில் கண்ணிவைத்து அரசவன்னம் வருதலைநோக்கி நிற்பதுபோல, ஒரு ஞானபீடத்தை அமைத்துவைத்துக்கொண்டு அல்லமரது வரவை நோக்கிக்கொண்டிருந்தார் சிவனடியார்கள் யாவரும் நமது தலைவராகிய வசவண்ணருக்கு ஆசாரியராய் வரு வீரே நமக்கும் ஆசாரியரென்று கருதி யிருந்தார் கள்.

சூனியசிங்காதநகதி முற்றிற்று.

# இருபத்திரண்டாவது

# சூனியசிங்காதனத்திலிருந்தகதி.

பள்ளத்திற்சென்று வீழ்கின்ற நீர்போல நன்னெறியிற் செல்லுகின்ற மனத்தையுடைய சிவனடியார்களது மனத்தில் வாழ்கின்ற வசவண்ணர், இவ்வுலகத்தார் அறியாமல் கள்ளமனத்தோடு செய்த சூனிய சிங்காதனத்தின்மேல் அல்லமதேவர் விரைவாயேறுஞ் சரித்திரத்தை அன்போடு சொல்லுவோம்.

வசவண்ணர் சூனிய சிங்காதனம் அமைத்து, அல்லமதேவர் வருகையை நோக்கியிருந்து பலநாள் கழிதலும், யான் இந்த ஆசனமமைத்துப் பன்னிரண்டு மாசங்களாயின, அல்லமர் இன்னும் வந்திலர், இனியென்றைக்கு வருவாரோவென்று துக்கித்துக் கொண்டிருக்கும்போது, ஒருநாள் இவர்மனத்தில் அல்லமதேவர் வரவுதோன்றிற்று. அப்போது, தூரத்துச்சென்ற நாயகன் வரவை யறிதற் குறியாகக் குலமாதருக்கு இடதுவிழி துடித்தல்போல, வசவண்ணருக்கு வலத்தோளும் வலக்கண்ணும் துடித்தன. இந்த நற்குறிகளை அருகே யிருந்த சென்ன வசவண்ணருக்குச் சொல்லி, இந்தக் குறிப்பின்பயன் யாதென்று கேட்க, அவர் இன்றைக்கு நீர் அல்லமரைத் தரிசிப்பீரென்று சொல்லிப்போயினர். பிறகு வசவண்ணர் தம் பக்கத் திருந்தவர்களை நோக்கி, இன்று நமது அல்லமதேவர் எழுந்தருளுவர். ஆதலால் நமது கலியாணபுரத்தை அலங்காரஞ் செய்யுங்களென்று கட்டளையிட, அவர்களும் அவ்வாறே யலங்கரித்தார்கள். அலங்கரிக்கப்பட்ட அந்த நகரத்து வீதியில், விச்சல ராஜனுக்கு மந்திரியாகிய வசவண்ணர் புறப்பட்டுத் தமது ஆசிரியராகிய அல்லமதேவரை யெதிர்கொள்ளச்

செல்லுவாராயினர். அப்போது சென்னவசவரும், மடிவாலமாச்சதேவரும், கிந்நரப்பிரமரும், தண்டகமண்டலக்கையர் முதலிய பலவகை யடியார்களும் இவரைச் சூழ்ந்து சென்றார்கள். இந்தப் பிரகாரமாகச் சென்ற வசவண்ணரது ஆடம்பரத்தைக் கண்ட சமணர்கள், இவர் தமது கடவுளைப் பித்தனென்று சொல்லுவோரென்று இகழ்ந்தார்கள். அருகர் சிலர் விச்சலராஜனிடத்துச் சென்று, அரசனே! உனது நகரத்தில் ஒரு புதுமை யுண்டாயிற்று. அதென்னெனில், ஒரு நற்குறியைக் கண்டு அதனால் அல்லமர் வருவரென்று துணிந்து வசவண்ணர் எதிர்கொண்டுபோகிறார். இவர் இப்படிச் செல்லுவது கனவிற் கண்ட வுணவை நம்பி, விருந்தினரை உண்டுபோங்களென்று சொல்லுவதை நிகர்க்கும். இப்படிப்பட்ட பேதைக்கு மந்திரிப்பட்டம் கொடுத்தவன்போல வேறு யாருளர் என்று சொல்ல, அரசன் அதிசயித்து, நீங்கள் இங்கே யிருங்கள், இனி நடக்கப்போகிற காரியத்தைப் பார்ப்போமென்றான். அவ்வளவில் அல்லமதேவரும்,கோவணத்தோடும் விரிந்த சிகையோடும் கண்டோர் பித்தனென் றிகழும்படி வசவண்ணருக்கெதிரே யெழுந்தருளினர். அப்போது. அங்கிருந்தவர்கள் அவரை யறியாதவராய் இவன் பித்தனென்று நினைத்து, விரைவா யிங்கிருந்து போய்விடு என்று தடுத்தார்கள். அப்பொழுது அல்லமதேவர் தமது திருவிளையாடலைச் செய்ய நினைத்து, பல் முளைக்கும் பருவமுள்ள பாலகனாகியும், குமரனாகியும், விருத்தனாகியும், வீணாகானஞ் செய்வோனாகியும், இந்திரன்போல யானையேறிவருவோனாகியும், குதிரை நடத்துவோனாகியும், அந்நகரத்தார் அல்லமரை ஆகாயத்திற் கண்டேன், பூமியிற்கண்டேன், சேனையிற்கண்டேன், தெருவிற் கண்டேன் என்று தனித்தனியே சொல்லும்படி பலவுருக்கொண்டொடிக்க, இவரது உண்மையாகிய உருவமிதுவென ஒருருவரு மறிந்திலராய்

மயங்கினார்கள். அஞ்சனக்காரன் புதையலைக் காண்பது போல வசவண்ணர் மாத்திரம் இவரது உண்மையுருவத்தை ஐயமின்றியறிந்துகொண்டு, கண்களில் ஆநந்த பாஷ்பங்கள் சிந்தத் திருவடியில் வீழ்ந்து வணங்கினார். மற்ற அடியார்களும் வீழ்ந்து வணங்கினார்கள். வசவண்ணரது அன்பையும் அல்லமதேவரது அருளையுங்கண்ட தேவர்கள் அதிசயித்துப் பூமழை பொழிந்தார்கள். வசவண்ணர் வாழ்தலாலும், அல்லமர் எழுந்தருளுகையாலும், அடியவர் கூட்டமிருந்து களித்தலாலும் அந்தக் கலியாண புரியானது கைலாயத்தை நிகர்த்திருந்தது. வசவண்ணரது செய்கையையும் அல்லமரது பெருமையையும் சமணர்கள் கண்டும் இவர்களிடத்து அன்பு செய்யாமல் பொறாமைகொண் டிருந்தார்கள். அல்லமர் வசவண்ணரது திருமடத்தை யடைந்து, அங்குள்ள சூனிய சிங்காதனத்தை நோக்கி, வசவண்ணரது புகழானது எல்லா வுலகங்களினும் மேலும்பொருட்டு அவராலமைக்கப்பட்ட சூனிய சிங்காதனத்தில் ஏறியருளினார். இவ்வாறு ஏறியருளிய அல்லமர், ஆறுதாரங்களாயிருப்பது ஆத்மாவேயாமென்று மகிழ்ந்து, அதன் ஏழாம் நிலையாகிய ஸஹஸ்ராரகமலத்தின்மீ தமர்ந்திருந்தார். இதைக்கண்ட சிவபக்தரெல்லாரும் மனமகிழ்ந்து ஆநந்தக் கூத்தாடினார்கள். வசவண்ணரும் ஆநந்த சாகரத்தில் அழுந்தினார். வசவண்ணரை அல்லமதேவரும் துதித்தார். வசவண்ணரும் அவரைநோக்கி, தேவரீரது திருவருளுளதாயின் பிரமவிஷ்ணுக்களுடைய தொழில்களையும் ஒரு சிறு துரும்பாக்கலாமென்று புகழ்ந்தார். அல்லமதேவரும் அந்தச் சூனிய சிங்காதனத்தின்மேல் வீற்றிருந்தார்.

சூனியசிங்காதனத்திலிருந்தகதி முற்றிற்று.

## இருபத்துமூன்றாவது
## ஆரோகணகதி.

இவ்வுலகில், ஒருவருண்ணை மற்றொருவருடைய பசிநீங்காது என்னும் வார்த்தை பொய்யாகும்படி, அருளுருவாகிய அல்லமதேவர், அடியவர் யாவருடைய பசியும் நீங்கும்படி தாமுண்டருளின சரித்திரத்தைச் சொல்லுவோம்.

இப்படி சூனிய சிங்காதநத்தின் மீது அல்லமதேவர் எழுந்தருளி யிருக்குங்காலத்தில், வசவண்ணர் அல்லமதேவரது திருமேனிவடிவமாய்ச் சித்திரப்பாவைபோல் அசைவறவிருந்தார். சென்னவசவரும் அல்லமதேவராகிய அமிர்தத்தைத் தம் கண்களுக்கு விருந்திட்டார். மடிவாலமாச்சரும் அல்லமராகிய மலரைத் தமது மனமாகிய வண்டுக்கு இடமாக்கினர். மற்ற அடியார்களும் சிங்காதநத்தைச் சூழ்ந்திருந்தார்கள். சில அடியார்கள் பூசை செய்துகொண்டும் சில அடியார்கள் விபூதிருத்ராக்ஷங்களைத் தரித்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் செபித்துக்கொண்டும் இன்னும் பல்வாறு வந்து நிறைந்தார்கள். வசவண்ணர், இந்த அடியார்களுக்குத் தினந்தோறுந் தாம் செய்யுஞ் செய்கையை மறந்து அல்லம பக்தியிற் படிந்திருந்ததனால் வந்த அடியார்களெல்லாம் இந்தப்பாவியின் சோற்றையுண்டு உயிர்வாழ்தலைப் பார்க்கினும் இறப்பதே நன்றென்று கோபித்துக்கொண்டு போய்விட்டார்கள். அவர்கள் போனபிறகு, கலியாணஞ்செய்த மறுநாளிருக்கிற வீட்டைப்போலத் தமது நகரம் வறிதா யிருக்கக்கண்டு, நான் சிவனடியார்களுக்குச் செய்யவேண்டிய கடமையையின்று செய்யாமையால் அவர்கள் கோவித்துப் போய்விட்டார்கள். அவர்கள் பொருட்டு இன்று நான் சமைத்து வைத்த அன்னம் வீணாய்ப்போகுமே

மென்று மனந்தளர்ந்து, சங்கமபத்தி செய்வதில் சிறந்தவனென்று யாவராலுஞ் சொல்லப்பட்ட நானே இந்தப்பத்தியில் வழுவினேனாயின் சங்கமபத்தி செய்வது பிறர்க்கு எளிதாகுமோ? இழித்துரைத்தாலும், வெறுத்துரைத்தாலும், வீட்டி லுள்ளவற்றை யழித்தாலும், உடம்பை யரிந்து கொன்றாலும் சங்கமபத்தி செய்பவன் பிறவியை யொழிப்பா னென்று உயர்ந்தோர் சொல்லுவார்கள் என்று இந்தப் பிரகாரமாகச் சொல்லிச் சிந்தித்துக்கொண்டிருக்கிற வசவண்ணரது எண்ணம் நிறைவேறும்படி, அல்லமதேவர் அந்த மடைப்பள்ளியிலுள்ள சோறு முழுதும் உண்டு அடியார்களுடைய பசியை நீக்கும்பொருட்டுத்திருவுளம்பற்றி, வசவண்ணரைநோக்கி, எனக்குப் பசியா யிருக்கின்றது, எனக்குவேண்டியதுசிறிது உணவே,எனக்குக்கொடுத்துப் பிறகு நீ சங்கமரை யுண்பிக்கக் கடவாயென்றார். அதற்கு வசவண்ண ரிசைந்து, தன் மனைக்குள்ளே யழைத்துப்போய், செய்யவேண்டிய உபசாரங்களெல்லாம் செய்து, பொற்கலத்தில் உயர்ந்த அன்னம் முதலியவைகளைப் படைத்து, உண்டருளவேண்டுமென்று பிரார்த்திக்க, ஒரு இமைப்பொழுதில் சிறிதும் மீதியாயிராமல் அவரிட்ட உணவையுண் டருளினார். அதைக் கண்டு அந்த வசவண்ணர் முதலியோர் ஆச்சரியமடைந்து, பின்னும்கொண்டு வந்து படைத்த உணவையுண்டு பசி தணியாதிருக்கக்கண்டு, தமது அடியவர் வீட்டிலுள்ள உணவையும் கொண்டுவந்து படைக்கும்படி கட்டளையிட, அவ்வாறே அவர்களுஞ்செய்து இவருக்குப் பசி தணியாமல், அடியார்களுக்காகச் சமைத்த சோற்றையெல்லாம் கொண்டுவந்து இவர்க்கெதிரே குவித்தார்கள். இப்படி படைக்கிற சோறு கறி முதலியவற்றை யுண்டும் பசி தணியாதிருக்கக் கண்டு,சமைப்பவராகிய அடிசிற்றொழிலாளர் இன்னும் மட்கலங்களன்றி வேறில்லையென்றார்கள். அதின்பிறகு

வசவண்ணர் அல்லமதேவரது பசியைத் தணிக்கும் பொருட்டு, அவரை, பயறு, எள், அரிசி, அவல், கொள், துவரை, கடலை, சோளம், நெல், புல் முதலியவற்றைக் கொண்டுவந்து மலைபோலக்குவித்தார். அவற்றையெல்லாம் ஒரு நொடியி லுண்டருளினார். வசவண்ணரும் அல்லமரும் உணவு படைப்பதிலும் உண்பதிலும் தோல்வி யடைந்தாரில்லை. அப்போது சென்ன வசவேசர் வசவண்ணரை நோக்கி, கண்ணப்பனிட்ட மாமிசத்தையுண்ட பரமசிவனே யிவனென்று சொன்னார். அவர் சொன்னதைச் செய்வதே சரியென்று மடிவாலமாச்ச தேவர்வந்து சொல்லக்கேட்ட வசவண்ணர் அல்லமதேவரை யடிவணங்க, அப்பொழுது அல்லமதேவர் வசவண்ணரைநோக்கி, நான் பசியினால் வந்தவனல்லேன்; பொருளைக் குறித்து வந்தவனல்லேன்; உன்மனத்திலுள்ள பக்தியைக் காணும்பொருட்டு வந்தேன் என்று சொல்லி, வசவண்ணரை யெடுத்து மார்போடணைத்துக்கொண்டார். கண்ணைப்போல வுயிர்கள் கண்டறியும்படி சூரியனைப்போலக் காட்டுகிற அல்லமபெருமானே! எல்லாச் சீவர்களுக்கும் ஊட்டுகின்றவுடக்கு நான் ஊட்டுவேனென் றெழுந்தமையால் என்னைப்போலப் பேதையர் ஒருவரு மில்லையென்று அஞ்சலி செய்து நிற்க, அப்போது அல்லமதேவர் அவரை நோக்கி, நீ போய் அடியார்களை யெல்லாம் வணங்கி அமுதுசெய்ய வாருங்களென்று அழைத்து வருவாயாகவென்றார். அப்படியேசென்றவசவண்ணர், அல்லமதேவரது திருமேனியி லணிந்த புஷ்ப சந்தனங்களைத் தாமுமணிந்து தொங்கிசரியத் தின்ற கறிவகைகள் மணக்க ஏப்பம் விட்டுக்கொண்டு முகமலர்ச்சி யோடிருக்கிற அடியார்களைக் கண்டு, அடியேன் செய்த பிழையை யெல்லாம் பொறுத்து வந்து அமுது செய்தருள்கவென் று பிரார்த்திக்க, அந்த அடியார்கள் வசவண்ணரை நோக்கி, உன் பெருமை யெங்களால்

சொல்லமெவளிதோ? இன்று வாயுங் கையுங் தொழிற் படாமலே வயிறாரவுண்டு களித்தோம். தேவர்களுண் ணும்பொருட்டு அவிர்ப்பாகமாகியவுணவைச் செந்தீயி லிடுவதுபோல நாங்களெல்லாரு முண்ணும்பொருட் டுச் சோற்றுணவை அல்லமதேவரது திருநாவிலிட்ட வுன்னைப் புகழ்தற்கு யாங்கள் படைத்த ஒருநாவோ வல்லது என்று சொல்லி, உலகில் ஒரு சிவயோகி யுண் டது சராசர வுயிர்கள் யாவுமுண்டதாகு மென்று வேதங்கள் சொல்லாநின்றன. அதனை அல்லமதேவ ரால் இன்று பிரத்தியக்ஷமாகக் கண்டோம். ஆதலால் அந்த அல்லமதேவரை யுண்பித்தல் எங்களை யுண்பித் தலே, அவரைத் திருவடி வணங்குதல் எங்களை வணங் குதலே, பேதமில்லை, நீ செல்லக்கடவாயென்று சொ ல்ல, வசவண்ணர் அவர்களை வணங்கி, மீண்டுவந்து அல்லமதேவரை வணங்கி, ஐயரே! தாயுண்ட வுண வைக் கருப்பத்திலிருக்கிற சிசுவுமுண்டு களித்தல் போலத் தேவரீர் உண்ட வுணவை அடியார்களெல்லா முண்டு களித்திருக்கிறார்கள் என்று சொன்னார். பாண் டியனடித்த அடிபட்ட உயிர்களின் தன்மைபோல வச வண்ணரிட்ட வுணவை யடியாரெல்லாரும் உண்டு களி த்தனராதலால் அல்லமதேவர் பரிபூர்ணரென்பதற்கு ஐயமில்லையென்று புகழ்ந்து உலகத்தா ரெல்லாரும் களித்திருந்தார்கள். இவ்வாறு உண்டு அமைதிபெற் றிருந்த பரமயோகியாகிய அல்லமதேவர் வசவண்ண ரைப் புகழ்ந்து, அவர்க்கு சைவாகமமும் வேதமும் சொல்லாநின்ற பொருளை அநுக்கிரகிக்கத் திருவுளங் கொண்டு ஏகாந்தமாக வீற்றிருந்தார்.

ஆரோகணகதி முற்றிற்று.

# இருபத்துநான்காவது

# மநோலயகதி.

அல்லமதேவர் வசவண்ணரை நோக்கி, மநோலய மடைந்தால் முத்தியடையலாமென்று அருள் செய்த விதத்தைச் சொல்லுவோம்.

அடியார்களுடைய பசிதணியும் பொருட்டுத்தாமுண்ட அல்லமதேவர், வசவண்ணருக்குத் தத்துவோபதேசஞ்செய்யக் கருதிவீற்றிருக்க, வசவண்ணர் வந்து வணங்கி விண்ணப்பஞ்செய்கிறார். விருப்பு வெறுப்புகளினுருவாகிய பிரபஞ்சத் தோற்றமில்லாமல் எல்லாம் பரப்பிரமமாகப் பார்க்கும்படி எனக்குக் கிருபைசெய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, அவரதுபிரார்த்தனைக்கு அல்லமதேவர் இரங்கி அருள்செய்யலுற்றார். ஒருவன் யான் எனது என்னும் அகங்கார மமகாரங்களை விடாத அளவும் அவன் ஞானத்தையடையமாட்டான். அதை யடையாதபோது நிலையற்ற பிரபஞ்சந்தோன்றும்; பிரமப்பொருள்தோன்றாது. காற்றாடிபோலச் சுழலாநின்ற மனமானது பிரமத்தில் நசித்தால் யான் எனது என்னும் அகந்தைமறைந்துபோகுமேயன்றி வேறு விதத்தால் மறையாது. யான் பிறர்க்கு இதனைச் செய்வேன், அவர்கள் எனக்கு இன்னது செய்வார்களென்னுங்கருத்தினால் முத்தியை விரும்புதல் இருட்டைக்கொண்டு சூரியனையடைய விரும்புதல் போலும். யான் என்னும் அகங்காரத்தால் இருவினைகளுண்டாகும்; அது இல்லையானால் இருவினைகளால் வரும் இன்ப துன்பங்களுளவாகா. இருவினைகளில்லையாயின் பிறவியில்லை. மனத்தை யடக்குதற்கு மனமே துணையாகும், வேறு துணையில்லை. அது பெற்றவன் ஒப்பற்ற சிவ சொரூபமாய் விளங்குவான்; உலகத்தில் பிறந்திறந்துழல மாட்டான். மதயானைபோலடங்

காது நிரிகிறமனத்தையடக்கினால் பூர்ணஞானத்தைப் பெற்றுப்பிரமமாவன். விஷயங்களை யறிதற்கு விரிந்த மனம்கருவியாகும்; தன்னையறிதற்குக் குவிந்த மனம் கருவியாகும். விரிந்தமனமுடையவனைப்பிறவிவிடாது; குவிந்த மனமுடையவனைப் பிறவிதொடாது. அந்தக் கரணசுத்தியே அறிவையறிதற்குச் சாதநமாகும். அந் தக்கரணசுத்திக்குச் சற்கருமங்கள் சாதநங்களாகும். அந்தக்கரண சுத்தியாவது ஆசையற்றிருத்தலாகும். அந்தக்கரண சுத்தியினால் பிரமத்தை யடைவான். ஆசையற்றிருத்தல் நேரே முத்தியின்பமடைதற்குக் காரணமாகும். ஆசையற்றவன் சிவமாதல் நிச்சயம். குற்றமற்ற மனத்திலன்றி அறிவுதோன்றாது. களங்க மற்ற கண்ணாடியிலன்றி முகம் தோன்றுமோ? பாசம ற்ற பரஞ்சோதியை நினைக்கின்ற நினைவால் மனமா னது தன்னையறிதற்குச் சாதநமாய் விளங்கும். யான் ஆகாயமல்லேன், வாயுவல்லேன், நெருப்பல்லேன், நீர ல்லேன், மண்ணல்லேன், ஞானமல்லேன், வினையல் லேன், நானே சிவமென்று நினைத்துச் சலியாதிருப் பவன் சிவமேயாவன். இவ்வாறு நினையாதவன் எக்கா லத்தும் உடம்பெடுத்துச் சுழன்றுகொண்டேயிருப் பான். தன்னைச் சிவமென்றறிந்தவனே தன்னையுண் மையாயறிந்தவன்; அப்படி யறியாதவன் தன்னுண் மையறியாதவன். தன்னைச் சிவமென்று என்று அறி வானோ அன்றே பாசத்தையொழித்துவிடுவன். தன் னைச் சிவமென்றறியாதவனுக்குப் பிறவியேதுணையா கும். சோகம் பாவனையில் மனத்தை நிறுத்தி விடயங் களைத் துறவாது, துறந்தசிவயோகியின் திருவடியை வாழ்த்திவணங்காத தேவர் முனிவர் முதலியோரில்லை யென்று வேதங்கள் முழங்காநின்றன; என்றிவ்வாறு அல்லமதேவர் வசவண்ணருக்கு அருள்செய்ய, வசவ ண்ணர் முதலிய சிவசரணரெல்லாரும் அல்லமரை வா ழ்த்தி வணங்கினார்கள். அல்லமர் இன்னமும் பக்குவா

ன்மாக்களுக்கு ஞானோபதேசஞ்செய்யும் பொருட்டு அவரவர்க்குத் தகுதியான வடிவோடுசென்று உபதேசித்து எங்குஞ் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்.

மநோலயகதி முற்றிற்று.

---

## இருபத்தைந்தாவது

# மான்மியகதி.

இவ்வுலகத்திலுள்ள அடியார்களுக்கெல்லாம் அல்லமதேவர்செய்த நன்றியை, கைலாயத்தில் வீற்றிருக்கிற பரமசிவனானவர் தமது இடப்பாகத்திலமர்ந்திருக்கிற உமாதேவியார்க்குச் சொன்ன விதத்தைச் சொல்லுவோம்.

அல்லமதேவர் வசவண்ணர்முதலிய அடியார்களை அவ்விடத்தில் நிறுத்திவிட்டுப் பூமியிலுள்ள மற்றஅடியார்களுக்கெல்லாம்அருள்செய்யும் தொழிலில் முயன்றுகொண்டிருந்தார். இப்படி யிருக்க, ஸ்ரீ கைலாயத்தில் உமாதேவியானவள் பரமசிவனை நோக்கி, சுவாமீ! அல்லமதேவரது அருளைப் பெறும்பொருட்டுச் சென்ற நந்திதேவரும், உன்கணங்களும், என்று சாத்துவிகக்கலையாகிய அக்கமாதேவியும், பூமியிற்போய்ச் செய்தகாரியம் யாது? அதனைச் சொல்லவேண்டு மென்று பிரார்த்திக்க, பரமசிவனானவர் சொல்லலுற்றார். நந்தியானவன் வசவண்ணன் என்னும் பெயர் பூண்டு என்னடியார்களை யானென்றே பாவித்து அவர்களுக்கு வேண்டும் பொருள்களைக் கொடுத்துச் சிறப்படைந்தான். உன்சாத்துவிகக்கலையாகிய பெண் மாதேவி யென்னும் பெயர் பூண்டு, மன்மதனது வலியைவென்று, துறவடைந்து ஞானாசாரியனைத் தேடிச்சென்றாள். எமது கணநாதர்கள் எம்மைக் காணுதற்குரிய பல சற்கருமங்களைச் செய்துகொண்டு அவரவர்க்கிசைந்த இடங்களில்வாழ்

ந்திருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் மிகச் சிறந்ததாகிய வீரசைவத்தின் பெருமையை விளங்கச்சொல்லி, அவர்கள்யாவரும் பேரின்பமடையும் வண்ணம் அல்லமர்செய்தார். எல்லாச் சமயங்களிலும் சைவசமயஞ் சிறந்தது, அதினும் வீரசைவம் மிகச்சிறந்தது என்று சொல்லிச் சிவபெருமான் உமையவளை நோக்கி, பெண்ணே! எல்லாச் சமயங்களிலும் சைவம் சிறந்ததென்றும், அதினும் வீரசைவம் சிறந்ததென்றும் காமிகாதி ஆகமங்கள் சொல்லாநின்றன. ஒருவன் எந்தச் சற்கருமத்தைச் செய்தாலும் வீரசைவத்திற் பிரவேசித்தாலன்றி முத்திபடையமாட்டான். வேதம் ஆகமம் இரண்டின் பொருள்களும் தம்முளொத்துப் பிரமத்தை விளங்கக் காட்டுதலால் இந்த இரண்டு நூல்களும் பிரமாணமாகக் கொள்ளத்தக்கன. எமக்கு நிவேதித்த பிரசாதத்தை யுட்கொண்டு சலனமற்றிருத்தல் இந்த வீரசைவத்திலன்றி வேறு மார்க்கங்களில் உண்டோ? ஆதலால் வீரசைவத்தை மாதேவி, வசவண்ணர் முதலியோர்க்கு அல்லமர் போதித்தார். அன்றியும் முனிவர் சித்தர் யோகர் முதலானோர்க்கும் அவரவர் பக்குவத்திற் கிசைந்தவண்ணம் போதித்து அவர்களை யாட்கொண்டார் என்று சொல்லக்கேட்ட உமாதேவியானவள் மனமகிழ்ந்து, அல்லமதேவர் மாயையை வென்றவென்ற உண்மையை தேவரீர் திருப்பவளவாயாற்சொல்ல நானறிந்தேனென்று சொல்லி வணங்கினள். இது நிற்க, அல்லமதேவரோ வென்றால், மூத்தவர், இளையவர், பிணியாளர், முதியோர் என்கிற வேற்றுமை பாராமல், எல்லாவிடத்திலும் பெய்யும் மேகம் போல் அருளாகிய மழைபொழிந்து அவர்களை உய்வித்தார். இந்தஅல்லமதேவர் சரிதத்தை யோதினால்அறம் பொருளின்பங்களுண்டாகும்; இதைக் கேட்போரும் அந்த அறமுதலியவற்றை யடைவர். விவேகமில்லாதவர் விவேகமுள்ளவராவர்; புதல்வர்ப் பேறில்லாதவர்

பாக்கியரைப் பெறுவர்; செல்வமில்லாதவர்கள் செல்வத்தை யடைவார்கள்.

இந்தச் சரிதத்தை ஆயிரத்தெண்ணூற்றெழுபத்து நான்காவதாகிய கரவருடம் இடபமாதம் ஞாயிற்றுக்கிழமையில் சிவப்பிரகாச தேசிகர் பாடி முடித்தார்.

இந்தச் சரிதத்தைப் படிப்போனை மானிடனென்று சொல்லவொண்ணாது; பரமசிவனென்றே சொல்லலாம்.

உலகிலுள்ள புண்ணியர்வாழ்க, ஐம்புலன்களை வெல்லத்தகுந்த தவமுதலியவை வாழ்க, சிவபூசை செய்கிற அடியார்வாழ்க, சைவசமயம்வாழ்க, அல்லமதேவர் சரிதத்தைக் கேட்க விரும்புவோர் வாழ்க, திருவெண்ணீறு வாழ்க, அதனை யணிவோர் வாழ்க, ருத்ராக்ஷ கண்டிகைவாழ்க, ஸ்ரீ பஞ்சாக்ஷரம்வாழ்க, குருவருள்வாழ்க, மெய்யர்வாழ்க, பிறவியை யொழிக்கின்றவர்கள்வாழ்க.

அல்லமதேவரது சரிதச் செய்யுட்களில் ஒரு செய்யுள் கற்கவல்லவர் அருத்தஞ்சொல்ல வல்லவராவர். இதுவே நமக்குச் செல்வமென்று அன்புபாராட்டிச் செவி நிறைத்துக்கொள்ள வல்லவரெல்லாரும் இந்தப் பூலோகத்தில் எக்காலத்தும் வாழ்ந்திருக்கக்கடவர்.

மான்மியகதி முற்றிற்று.

---

## பிரபுலிங்கலீலை வசனம்

## முற்றிற்று.

